# ஸ்ரீ இராமானுஜர்
# வாழ்க்கை வரலாறும் பெருமைகளும்
## (Sri Ramanujar Vazhkkai Varalarum Perumaikalum)

by

**Tmt. R. Vedavalli alias Latha Ramanujam**

ஆசிரியர்

திருமதி. வேதவல்லி (எ) லதா இராமானுஜம்




11, நானா தெரு, பாண்டி பஜார்,
தி.நகர், சென்னை – 600 017.
☎ : 42070663

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஸ்ரீ இராமானுஜர் வாழ்க்கை வரலாறும் பெருமைகளும் |
| ஆசிரியர் | : | திருமதி. வேதவல்லி (எ) லதா இராமானுஜம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு, 2007 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| அச்சு | : | 12 புள்ளி |
| பக்கம் | : | 208 |
| **விலை** | : | ரூ. 80/- |
| வெளியீட்டாளர் | : | **வனிதா பதிப்பகம்,**<br>11, நானா தெரு,<br>பாண்டி பஜார், தி. நகர்,<br>சென்னை – 600 017.<br>☎ : 42070663 |
| ஒளியச்சு | : | **தனலட்சுமி எண்டர்பிரைசஸ்,**<br>22/73, காந்தி தெரு, மேற்கு மாம்பலம்,<br>சென்னை – 600 033. ☎ : 32976479 |
| அச்சிட்டோர் | : | **அம்சா ஆப்செட் பிரிண்டர்ஸ்,**<br>சென்னை. |
| பிரதிகள் | : | 1200 |

This Book is published with the Financial Assistance of Thirumala Thirupathi Devasthanams under their scheme AID to publish Religious Books.


**The author of the book is alone liable for any legal action at her own risk and responsibility in case of disputes or criticism, if any arises after the publication of the book.**

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பொருளடக்கம்



ஸ்ரீ





ஸ்ரீமதே ராமாநுஜாய நம

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமி

தலைவர் மற்றும் நிர்வாக அறங்காவலர் : ஸ்ரீ எம்பார் ஜீயர் மடம்

30, மணவாளமாமுனி கோயில் வீதி, ஸ்ரீபெரும்புதூர் - 602 105, காஞ்சிபுரம் மாவட்டம்

தொலைபேசி : 27162073 செல் 9994323397

# மங்களா சாஸன உரை

பகவத் ராமாநுஜரைக் குறித்து பலரும் பலபடியாக எழுதி வருகின்றனர். ''கலியும் கெடும் கண்டு கொண்மின்'' என்ற நம்மாழ்வாரின் வாக்கு பொய்க்காதன்றோ?

அவரவர் தாம்தாம் அறிந்தவாறு, இராமாநுஜ வைபவம் நூல் வடிவில் நாளும் பெருகி வருகின்றது.

'ஸ்ரீ ராமாநுஜர் வாழ்க்கை வரலாறும் பெருமைகளும்' என்னும் இந்நூலின் ஆசிரியர் ஸ்ரீமதி லதா ராமாநுஜம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் பெரிதும் போற்றும் ஆறாயிரப்படி குரு பரம்பரையைத் தழுவி மற்றும் பல பெரியோர் நூல்களையும் ஆதாரமாகக் கொண்டு இந்நூலை எழுதியுள்ளார்.

தனக்குக் கைவந்த கலையாக சரளமான தமிழ் நடையில் பக்தியோடு புலமையும் மிளிர இராமாநுஜரின் வாழ்க்கைச் செய்தி களை முக்கியமானவற்றை ஒன்று விடாமல் தொகுத்திருக்கிறார்.

ஆழ்வார்களின் அருளிச் செயல் பாசுரங்களை ஆங்காங்கே பொருத்தமாகக் காட்டியிருப்பது இந்நூலின் தனிச் சிறப்பாகும். இது சிலாகிக்கத் தக்கது.

உடையவரின் வரலாற்றுச் செய்திகளை முழுவதுமாக அவரது தெய்வீக வைபவம் திகழ தொகுத்தும்; வகுத்தும் தக்க தலைப்பிட்டு எளிய இனிய தமிழில் இந்நூல் அமைந்துள்ளது.

பாராட்டி வரவேற்று ஆதரிக்கத் தக்க ஓர் அருமையான நூலிது.

அநேக மங்களா சாஸனங்களுடன்,

A.P.R. எம்பார் ஜீயர்

Sri

Srimathe Ramanujaya Nama







[illegible] Vachaspathi [illegible]

**Dr. K. A. MANAVALAN** M.A., M.O.L., Ph.D.

[illegible] Dip. in Hindu Religion [illegible] Tamil Professor D.G.V. College, Chennai

Founder President

**SRI RAMANUJA SIDDANTHA CENTRE**

7/4, Kasim Ali 1st Street, Triplicane, Chennai-600 005. Tel: 022 2844 4431

# மதிப்புரை

இந்நூலாசிரியரான ஸ்ரீமதி லதா இராமாநுஜம் அவர்களைப் பள்ளிப் பருவத்திலிருந்தே அறிந்தவன். ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜக வானமாமலை ஜீயருடைய பூர்வ ஆச்ரமப் பேத்தி. "குல விச்சை கல்லாமல் பாகம்படும்" என்பதற்கேற்ப திருவம்சப் பெருமையால் இன்று கல்வியில் சிறந்து விளங்குகிறார். அதோடு மூன்றாண்டுகள் ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ வைஷ்ணவத்தைப் பரப்பிவரும் முக்கிய ஸ்தாபனத்தில் படித்து "ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ" என்ற பட்டத்தைப் பெற்றுள்ளார். இனி இந்நூல் பற்றிச் சில விமர்சனங்கள்.

இராமாநுஜர் பெருமை - வரலாறுகளைப் பலர் முன்னமே எழுதியுள்ளனர். என்றாலும் ஸ்ரீமதி லதா இராமாநுஜம் அவர்கள் தனிச் சிறப்புத் தோன்ற இந்நூலில் பல செய்திகளை எழுதியுள்ளார். முக்கியமாக திருக்கோட்டியூர் நம்பிகளிடம் 18 முறை கஷ்டப்பட்டு நடந்து இரகசிய மந்திரங்களை அறிந்தார் என்று மட்டுமே குறிப்பிட்டுள்ளார்களே தவிர, லதா இராமாநுஜம் போல் ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வாக்கியங்களை அறிந்தே திரும்பினார் என்ற செய்தியையும் அவ்வாக்கியங் களைத் தெளிவாக எண்ணிட்டு விளக்கியதையும் மற்றவர்கள் பெரிதும் குறிப்பிடவில்லை.

மற்றும் எம்பாரைத் திருத்தி, மறுபடியும் வைணவராக்கத் திருமலை நம்பிகள் பட்ட பாட்டைச் சுவையாக எழுதியுள்ளார். நம்பிகளுக்கும் கோவிந்தர் என்ற எம்பாருக்கும் நடந்த வினா விடைகள் மெய்சிலிர்க்க வைக்கின்றன. தவிர திருநாராயணபுர விஜயம் நன்கு விரிவாக வருணிக்கப்பட்டுள்ளது. நல்லான் செய்தியும் கொங்கில் பிராட்டியின் செய்திகளும் நன்கு கூறப்பட்டுள்ளன. மற்றும் இராமாநுஜருடைய உபதேசங்களாகக் கூறப்பட்ட 74 வார்த்தைகள் இந்நூலுக்கு நவரத்தினங்களாக விளங்குகின்றன.

இவ்விதம் படிப்பவர்கள் இந்நூலைக் கீழே வைக்காமல் ஒரே மூச்சில் நூல் முழுவதையும் படிக்க ஆவலைத் தூண்டு வதாய் சிறப்பாக அமைந்துள்ளது. முடிவில் எம்பெருமானார் வைபவம் பலரால் வெளிப்பட்ட விஷயம் விரிவாக எழுதப் பட்டுள்ளது. இவ்விதம் நங்கை நல்லாள் லதா இராமாநுஜம் எழுதிய இந்நூல் முழுவதையும் படித்து நன்சான்று வழங்கி நல்லாசியுடன் நிறைவு செய்கிறேன்.

K.A. மணவாளன்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆசு கவி வித்வான் கிடாம்பி T. கோவிந்த அய்யங்கார், ஸ்ரீவில்லிபுத்தூர்

# அணிந்துரை

காரேய் கருணை இராமாநுசர் விஷயமாக வைபவ நூல் ஸ்ரீமதி லதா இராமானுஜம் என்பவரால் எழுதப்பட்டு வெளிவந்து உள்ளது. எம்பெருமானார் சரித்ரம் ஆறாயிரப்படி பன்னீராயிரப்படி குரு பரம்பரா ப்ரபாவங்கள், திவ்ய சூரி சரிதம், பிள்ளை லோகம் ஜீயருடைய இராமானுஜார்ய திவ்ய சரிதை முதலான நூல்களில் எழுதப்பட்டு உள்ளது. அவை எல்லாவற்றினுடைய ஸாரமாக இந்நூல் அமைந்து உள்ளது போற்றத்தக்கது. ஒவ்வொரு பக்கத்திலும் விஷயங்களுக்கு தலைப்புகள் கொடுக்கப்பட்டு உள்ளது. அந்தத் தலைப்பைப் படித்த உடனேயே விஷயத்தின் ஸாராம்சம் நமக்கு தெளிவாகவே தெரிகிறது.

அதே போல் யக்ஞமூர்த்தி யதிராஜர் விவாதம் மூலமாகவும் ஸரஸ்வதியிடம் கப்யாஸ ஸ்ருதிக்கு அர்த்தம் சொல்லுவது மூலமாகவும் நமது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தினுடைய வேதாந்தக் கருத்துகளை ஸாரமாகவும் எளிதாகவும் எல்லோருக்கும் புரியும்படியாக எழுதப்பட்டு உள்ளது. மேலும் மேலும் திருமலையில் சைவர்களின் ஆக்ஷேபணை யும் அதற்கு ஸ்வாமி எம்பெருமானாரின் சமாதானமும் பிரமாணங் களுடன் எழுதப்பட்டு உள்ளது சிறப்பு அம்சம். நமது ஸம்ப்ரதாயத்தில் பரிசயமில்லாதவர்களுக்குக் கூட வேதாந்தக் கருத்துக்களையும் ஸம்ப்ரதாயக் கருத்துக்களையும் சுலபமாக புரிந்து கொள்வதற்கு பேருதவியாக இந்நூல் அமைந்து உள்ளது.

மொத்தத்தில் எம்பெருமானார் சரித்ரத்தையும் நமது ஸம்ப்ர தாயத்தையும் சேர்த்து ஒன்றாக தெரிந்து கொள்ள இந்நூல் எல்லோ ருக்கும் மிகவும் பயனுள்ளதாகும் என்பதில் சந்தேகமில்லை.

இந்நூலாசிரியர் லதா இராமாநுஜத்திற்கு நீண்ட ஆயுளையும் ஸர்வ மங்களத்தையும் ஆண்டாள் மன்னார் வடபெருங்கோவிலு டையான் கொடுக்க வேண்டும் என்றும் இதுபோன்ற நூல்கள் மேன் மேலும் வெளியிட வேண்டும் என்றும் ஆண்டாள் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

ஆசு கவி வித்வான் T. கோவிந்த அய்யங்கார்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே வரவரமுநயே நம:

# பாராட்டுரை

ஸ்ரீமதி லதா ராமாநுஜம் மிக்க ஆர்வத்துடன் எழுதியுள்ள ஸ்ரீராமாநுஜ வைபவபரமான இந்த நூலுக்கு ஏற்கெனவே மூன்று அறிஞர் பெருமக்கள் - ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீபெரும்பூதூர் எம்பார் ஜீயர் ஸ்வாமி, பேராசிரியர் Dr. K.A. மணவாளன் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர் ஆசுகவி T. கோவிந்தய்யங்கார் ஸ்வாமி - பாராட்டுரைகள் வழங்கியுள்ளனர். அடியேன் இவற்றுக்கு மேல் எழுத வேண்டுவது அதிகமில்லை.

பூர்வாசாரியர்கள் எழுதிய வைபவ நூல்களிருக்க, சென்ற நூற்றாண்டில் உடையவர் வாழ்க்கை வரலாற்றைச் சித்தரிக்கும் பல நூல்களும் பிங்கள ஆண்டு சிறப்பு மலர்களும் (கட்டுரைக் கோவைகளும்) வெளிவந்துள்ளன. ஸ்வாமி பெருமையைப் பார்த்தால் எத்தனை நூல்கள் வெளி வந்தாலும் தகும். ஆகையால் முன் வெளிவந்துள்ள நூல்களை ஆராய்ந்து, எளிய தமிழில் யாவரும் வாசித்துப் பயன் பெறும்படி எழுதப்பட்டுள்ள இந்த வைபவ நூலை வரவேற்கிறோம், பாராட்டுகிறோம்.

இந்நூலாசிரியைக்கு மேல்மேலும் வைணவத் தொண்டாற்ற ஆவலும் ஆற்றலும் வாய்ப்பும் அளித்தருளும்படி ஸ்ரீபார்த்தஸாரதி எம்பெருமான் திருவடிகளில் ப்ரார்த்திக்கிறேன்.

V.V. ராமாநுஜன்



THE ASTROLOGICAL RESEARCH CENTRE



(Non Commercial Research Organisation devoted to the service of suffering humanity)

**A.M. Rajagopalan,** B.A.,
Director

3, North Tank Square Street,
Triplicane, Chennai - 600 005.
☎ : 2844 1876

# வாழ்த்துரை

மகான் ஸ்ரீமத் ராமாநுஜர் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்திற்கும், ஹிந்து சமூகத்திற்கும் செய்துள்ள தியாகங்கள், பட்ட துன்பங்கள், சந்தித்த பிரச்னைகள் ஆகியவற்றை உள்ளபடியே தெரிந்து கொள்ள வேண்டுமென்றால், அம்மகா புருஷரின் ஜீவித காலத்தில் பாரத புண்ணிய பூமியில் நிலவிய சூழ்நிலையை அறிந்து கொண்டால் போதும்.

பாரத புண்ணிய பூமியின் பெரும் பகுதி, அன்னியர்களின் ஆட்சிப் பிடிப்பில் இருந்த காலம் அது. தமிழகத்தில் ஆதிக்கம் செலுத்திய சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் அனைவரும் சைவ சித்தாந்தத்தைப் பின்பற்றியவர்கள்.

''அரண்மனை அரசியல்'' - Palace Politics - என்று சொல்வார்களே - அதனால், வைணவர்களின் மீது துவேஷம் ஏற்பட்டது. அதன் விளைவாக, மகான் ஸ்ரீமத் ராமாநுஜரின் உயிருக்கே ஆபத்து நேரிட்டது. மயிரிழையில், ஸ்ரீ கூரத்தாழ்வாரின் முயற்சியினால், நடு நிசியில் திருவரங்க ஸ்ரீயை விட்டு, உயிர் தப்பி, திருநாராயணபுரத்திற்கு எழுந்தருளினார். திருநாராயணபுரத்தை அடைவதற்கு முன்பு, வழியில் அவர் பட்ட துன்பங்கள் அளவற்றவை. கற்பனை செய்துகூட பார்க்க முடியாத கொடிய அனுபவம் அது. அவர், அந்த நாட்களில், பட்டினி கிடந்த இரவுகள் கணக்கிலடங்கா.

திருநாராயணபுர திவ்ய க்ஷேத்திரத்தில், சிறு குன்று ஒன்று உள்ளது. தினமும், காலை மாலை இருவேளைகளிலும் அக்குன்றின் மேல் ஏறி நின்று, மகான் ஸ்ரீமத் ராமாநுஜர், அங்கிருந்து, திருவரங்கம் இருக்கும் திசையை நோக்கி,

இருகரங்களையும் கூப்பி, அரங்கனை மானஸீகமாக ஸேவிப்பாராம். அப்போது, அவரது இரு கண்களிலிருந்தும் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகி, அவரது திவ்ய கன்னங்களில் வழியுமாம்!

இளம் மனைவியையும், வாழ்க்கை சுகங்களையும் ஒரு நொடியில் உதறித் தள்ளிய இம்மகா புருஷரால், திருவரங்கத்து இன்னமுதனான அந்த அழகிய மணவாளன் மீது இருந்த ஆராக் காதலை விட முடியவில்லை. அரங்கனைப் பிரிந்திருக்கும் ஒவ்வொரு வினாடியும், பிரிவாற்றாமையினால் தவித்தார்.

பக்தி என்றால், இதல்லவா பக்தி!

இது போன்றே, செல்வப்பிள்ளை விக்கிரகத்தை, ஒரு சாதாரண, உலோகத்திலான விக்கிரகம் என்றோ, அதில்லா விட்டால், வேறொரு விக்கிரகத்தை பிரதிஷ்டை செய்து கொள்ள லாம் என்றோ நினைக்காமல், பாதுஷாவின் அரண்மனைக்குச் சென்று, அந்த வேற்றுமத மன்னனுடன் வாதாடி, ''என் செல்வப் பிள்ளையே வா.....'' என அழைத்து, அந்த விக்கிரகத்தை மீட்டதுடன், அரும்பாடுபட்டு, காப்பாற்றியும் விட்டார்.

அவரது காலத்தில், டில்லிக்கு செல்வதென்றால், நினைத்துக் கூட பார்க்க முடியாது. வழியில் அடர்ந்த காடுகள், உயர்ந்த மலைகள், பெருக்கெடுத்தோடும் மிகப் பெரிய நதிகள். இவை தவிர, அன்னியர் படைகள் வேறு, வழி நெடுக. மேலும், டில்லி பாதுஷாவை பார்ப்பது என்பது சாமானிய காரியமல்ல.

இவை அனைத்தையும் கடந்து, மகான் ஸ்ரீமத் ராமானுஜர், பாதுஷாவைப் பார்த்து, வாதாடி, தன் உயிரினுமினிய செல்வப் பிள்ளையை மீட்டு, வெற்றி பெற்றாரே - அததகைய அமானுஷ்யமான, சத்யமான பராக்ரமச் செயலை வேறு யாரால் தான் சாதித்திருக்க முடியும்?

இத்தகைய, ஈடிணையற்ற வைணவ திலகமாகிய எம்பெருமானாரைப் பற்றிய சரித்திர நூல்களைப் பலரும் எழுதியுள்ளனர்.

தற்போது, திருமதி. லதா இராமானுஜம் அவர்கள் **''ஸ்ரீ இராமானுஜர் - வாழ்க்கை வரலாறும், பெருமைகளும்''** என்ற நூலை எழுதியிருக்கிறார்.

ஸ்ரீ உடையவரைப் பற்றிய மற்றொரு நூல் இது என்று தான் முதலில் நினைத்தேன். ஆனால், அதில் அடங்கியுள்ள 38 அத்தியாயங்களில், முதல் ஆறு அத்தியாயங்களைப் படித்த உடனேயே, இதுவரை வந்துள்ள நூல்களிலிருந்து, பல அம்சங்களிலும் இந்நூல் மாறுபட்டும், உயர்ந்தும் இருப்பதை அறிந்தேன். மனதில் நிறைவு ஏற்பட்டது.

ஒவ்வொரு தலைப்பிற்கும், ஸ்ரீ இராமானுஜ நூற்றந்தாதி யிலிருந்து பாசுரம் கொடுக்கப்பட்டுள்ளது பாராட்டுதலுக்கு உரியது.

அச்சுப் பிழைகளின்றி, நல்ல காகிதத்தில், வயதில் முதிர்ந்தவர்களும் சிரமமின்றி படிக்கும் வகையில் தெளிவான எழுத்துக்களுடன் அச்சிடப்பட்டுள்ளது மகிழ்ச்சி அளிக்கிறது.

திரு. மயிலவேலன், நங்கை நல்லூர், சென்னை வெளியிட்டுள்ள இப்புத்தகம், பயனுள்ள புத்தகம் மட்டுமின்றி, ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய அற்புத படைப்பு என்பதில் சந்தேகமில்லை. ஒவ்வொரு இல்லத்திலும் இருக்க வேண்டிய புனித பொக்கிஷமும் ஆகும் இந்நூல்.

ஆசிரியரின் பக்தி மிகுந்த இம்முயற்சிக்கு எனது ஆசியும், பாராட்டுதல்களும்.

அன்புடன்,

**A.M. ராஜகோபாலன்**

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# அடியேனுரை

செங்கயல் வாவிகளும், வயல்களும் சூழ்ந்த ஸ்ரீ பெரும்புதூரிலே ஸ்ரீ ராமானுஜர் திருவவதாரம் செய்தருளினார். கல்வி கேள்விகளில் சிறந்து, ப்ரஹ்ம ஸூத்ர பாஷ்யம் இயற்றி பிரசாரம் செய்து, அருளிச் செயல்களுக்கு ஏற்றம் அளித்து பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டிகளை ஏற்படுத்தி, விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை நிர்தாரணம் செய்து ஸ்ரீ வைஷ்ணவத்துக்கு பெருந் தொண்டாற்றினார். அனைத்து திவ்ய தேசங்களிலும் ஆகம முறைப்படி பூஜையும், உத்ஸவாதி களையும் நடத்தி கோயில் நிர்வாஹ சீர்திருத்தங்களை செய்தார்.

ஒருமுறை ஸ்ரீ ராமானுஜர், "என்னுடைய பரமாசார்யரான ஆளவந்தாருடைய கிரந்தங்களை ஸேவித்ததன் மூலமே இவ்வுலகுக்கு இவ்வளவு நன்மை ஏற்பட்டது. மஹா புருஷரான ஆளவந்தாருடன் ஒரு நாளாவது நான் கூடி வாழ்ந்திருந்தால் வைகுண்ட லோகத்துக்கும், இந்த உலகத்துக்கும் உறுதியான சாச்வதமான படிக்கட்டுகளை கட்டி அதன் வழியாக எல்லா ஜனங்களையும் எம்பெருமானை அடைவித்திருப்பேன்" என்று அருளினார். ராமானுஜரின் திறமை அந்த ஈஸ்வரனுக்கும் கிடையாது. கர்ம, ஞான, பக்தி, ப்ரபத்திகளுக்கு மேற்பட்ட ஐந்தாவது உபாயம், எம்பெருமானார் ஸம்பந்தமே.

அவதாரங்கள் பல எடுத்தும் பகவானால் சாதிக்க முடியாத ஒன்றை சாதித்து காட்டியவர் ஸ்ரீ ராமானுஜர். "எம்பெருமானார் தர்சனம்" என்றே நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார்.

ஸ்ரீ ராமானுஜரின் சிஷ்ய சமூகம் மிகப் பெரியது. அவரது சிஷ்யர்களுள் பதினோராயிரம் பேர் உபவீதம் (பூணூல்) அணிந்தவர்கள். பன்னீராயிரம் பேர் பூணூல் அணியாதவர்கள், எழுநூறு துறவிகள், எழுநூறு பேர் பெண் சிஷ்யர்கள்,

பன்னீராயிரம் பேர் பாகவத நிஷ்டர். இது தவிர பல்லாயிரம் பேர் அவர்களை சார்ந்து நின்றனர் என்று படிப்படியாக கணக்கு சொல்வர்.

ஸ்ரீ ராமானுஜரின் 120 ஆண்டு கால வாழ்வியல் நிகழ்ச்சிகளை பக்கங்களில் அடக்கிட முடியாது. பெருமைகளை சொல்ல வாழ்நாள் போதாது.

ஸ்ரீ ராமானுஜரின் வாழ்க்கை வரலாற்றையும் அவர் தம் பெருமைகளையும் பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை அனைவரும் பக்தி ரஸத்தோடு அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையில் இந்நூல் வெளியிடப்படுகிறது.

பிரபந்நாம்ருத - தர்ப்பணம், ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம் மற்றும் பல்வேறு நூல்களிலிருந்தும் விஷயங்கள் தொகுக்கப்பட்டு உள்ளன. தலைப்பு பாடல்கள் இராமானுஜ நூற்றந்தாதியிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன.

அடியேனுடைய ஆசார்யன், நாங்குநேரி ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீ கலியன் வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமி அவர்கள் தொலைபேசியில் இந்நூலை மங்களாசாசனம் செய்தருளியதை பெரும் பாக்யமாக கருதுகிறேன்.

ஸ்ரீமத் பரமஹம்ஸ அப்பன் பரகால ராமாநுஜ எம்பார் ஜீயர் ஸ்வாமி ஸ்ரீ பெரும்புதூர், Dr. K.A. மணவாள ஐயங்கார் ஸ்வாமி, Dr. V.V. ராமாநுஜன் ஸ்வாமி, திரு. A.M. ராஜகோபாலன் ஸ்வாமி, ஆசுகவி கோவிந்தராஜ ஐயங்கார் ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூர். அனைவரும் இந்நூலை கடாக்ஷித்து அருளியுள்ளார்கள். அவர் கள் திருவடி தாமரைகளுக்கு தலையல்லால் கை மாறிலேன்.

இந்நூல் வெளிவர உதவிய சேஷசாயி பேப்பர் மில்ஸ் நிறுவனத்திற்கு மிக்க நன்றி.

இந்நூல் அழகுற வெளிவர புகைப்படங்கள் கொடுத்து உதவிய சிம்மக்ருபா திரு. M.N. ஸ்ரீனிவாசன், வேளச்சேரி அவர்களுக்கு நன்றி.

இந்நூலை பதிப்பித்து வெளியிட்ட திரு. மயிலவேலன். வனிதா பதிப்பகம், ஒளியச்சு செய்து கொடுத்த திரு. மனோகரன், நங்கைநல்லூர் மற்றும் திரு. S வைத்தியநாதன், செல்வி. S. கோமதி, தனலட்சுமி எண்டர்பிரைசஸ் - ஆகியோருக்கு என் மனமார்ந்த நன்றி.

இந்நூல் வெளிவர முழு ஒத்துழைப்பு கொடுத்து உதவிய எனது உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் மனமார்ந்த நன்றியை தெரிவித்து கொள்கிறேன்.

*சொல்லின் தொகை கொண்டு உனதடிப் போதுக்குத்*
*தொண்டு*
*செய்யும்*
*நல்லன்பர் ஏத்தும் உன் நாமமெல்லாம் எந்தன் நாவினுள்ளே*
*அல்லும் பகலும் அமரும்படி நல்கு அறுசமயம்*
*வெல்லும் பரம இராமானுச இதென் விண்ணப்பமே.*

**திருமதி. லதா இராமானுஜம்**

நெ. 7/5, 5வது தெரு.
லக்ஷ்மி நகர்,
நங்கைநல்லூர்.
சென்னை - 600 061.
☎ 43588709 / 9444279966

# பதிப்புரை

**ஆசிரியர் பற்றி.....**

இந்நூலாசிரியர் திருமதி. வேதவல்லி (எ) லதா இராமானுஜம் அவர்கள் வைணவம் - 3 வருடங்கள் முடித்து 'ஸ்ரீ வைஷ்ணவஸ்ரீ' என்ற பட்டம் பெற்றவர். **ஸ்ரீ வானமாமலை மடம் - 28வது பட்டம் பரமஹம்ச சடகோப ராமானுஜ ஜீயர் ஸ்வாமிகளின் பேத்தி.**

ஆன்மிக சேவையும், சமூக சேவையும் இரு கண்களாக கொண்டு சிறப்பாக பணி புரிகிறார். பல ஆன்மிக அமைப்பு களையும், சமூக அமைப்புகளையும் நிர்வகித்து வருகிறார். கல்வி அறக்கட்டளை ஒன்றின் Trustee யாகவும், செயலராகவும் இருந்து வருகிறார். பல தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றுள்ளார்.

நங்க நல்லூரில் வசித்து வரும் திருமதி. லதா இராமானுஜம் அவர்கள் - 'வளம் பெற வள்ளுவர் குறள்' என்ற நூலையும் வெளியிட்டுள்ளார்கள்.

இராமானுஜரின் வாழ்க்கை வரலாற்றினைப் பற்றித் தெள்ளத் தெளிவாக, அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளத் தக்க வகையில் திருமதி. லதா இராமானுஜம் அவர்கள் சிறப்பாக எழுதியுள்ளார். ஸ்ரீ ராமானுஜ அஷ்டோத்தர சத நாமாவளி இந்நூலுடன் இணைக்கப்பட்டுள்ளது. ஸ்ரீ இராமானுஜர் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. அனைவரும் படித்துப் பயன் பெறத் தக்க வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது. ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்கக் கூடிய இந்நூலை வெளியிடுவதில் பெருமையடைகிறோம்.

**பதிப்பகத்தார்**

# ஸ்ரீ இராமானுஜர்

முன்னுரை:-

"யோநித்ய மச்யுதபதாம் புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாயமேநே
அஸ்மத் குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ
ராமானுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே!

எவரொருவர் அச்யுதனுடைய திருவடித்தாமரையிணை யாகிற பொன்னில் பேராசையாலே, மற்ற பொருள்களைப் புல்லென மதித்தாரோ, என்னுடைய ஆசார்யராய், ஜ்ஞாநாதி குணபூர்ணராய், கருணைக்கோர் கடலான, அத்தகைய ராமாநுஜருடைய திருவடிகளை சரணமடைகிறேன்.

நாம் ஈஸ்வரனை அறிந்து கொள்வது ஆசார்யனாலே. நமக்கும் ஈஸ்வரனுக்கும் உள்ள தொடர்பை ஆசார்யன் நமக்கு உபதேசம் செய்து, நம்மை நல்ல நெறியில் செலுத்தி, ஈஸ்வரனை அடைந்து எப்போதும் இன்புற்றிருக்கும்படி செய்வான். நாதமுனிகள் காலம் முதற்கொண்டு தொடர்ந்து வந்துள்ளது, நம் ஆசார்யர்கள் பரம்பரை. இந்த பரம்பரைக்கு நடுநாயகமாக விளங்குபவர் உடையவர். இவருடைய மற்ற திருநாமங்களுள் முக்கியமானவை எம்பெருமானார், இளையாழ்வார், இராமானுஜர், எதிராஜர். இவர் ஆதிசேஷனது அவதாரம். ராமாவதாரத்தில் லஷ்மணனாகவும், கிருஷ்ணாவதாரத்தில் பலராமனாகவும் அவதரித்தவர்.

இவரது அவதாரத்தைக் குறித்து ரிஷிகள் முன்னமேயே "கலௌ கச்சித் பவிஷ்யதி" (கலியிலே ஒருவன் தோன்றப் போகிறான்) என்றனர். இவருக்கு முன்னால் அவதரித்த நம்மாழ்வாரும்" கலியும் கெடுங்கண்டு கொள்மின்" என்று இவரது அவதாரத்தை வெளியிட்டார்.

இவர் உதித்த நன்னாள் ஆழ்வார்கள் தாங்கள் அவதரித்த நாட்களிலும் வாழ்வான நாள் நமக்கென்று நாற்றிசையும்

கொண்டாட நின்றது. இந்நன்னாளின் சிறப்பை மணவாள மாமுனிகள் "ஆர்த்திப் பிரபந்தத்தில்" ஒரு சீரிய செய்யுளினால் வெளியிட்டருளினார்.

*சங்கர பாஸ்கர யாதவ பாட்ட ப்ரபாகரர் தங்கள் மதம்*
*சாய்வுற வாதியர் மாய்குவ ரென்று சதுமறை வாழ்ந்திடு நாள்*
*வெங்கலிஇங்கினி வீற நமக்கிலை என்று மிகத் தளர் நாள்*
*மேதினி நம்சுமை ஆறுமெனத்துயர் விட்டு விளங்கிய நாள்*
*மங்கைய ராளி பராங்குச முன்னவர் வாழ்வு முளைத்திடு நாள்*
*மன்னிய தென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்*
*செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த பெரும்பூதூர்ச்*
*சீமான் இளையாழ்வார் வந்தருளிய நாள் திருவாதிரை நாளே.*

இங்ஙனம் உடையவர், தமக்கு முன் வாழ்ந்த ஆசார்யர் களாலும், தமக்குப் பின் வந்த ஆசார்யர்களாலும் பாராட்டுப் பெற்று ஒப்பிலாப் பெருமை வாய்ந்தவர். இவர் உத்தாரகர் - அதாவது ஸம்சாரமாகிற கடலிலிருந்து நம்மைக் காப்பாற்று பவர் என்று இவர் திருவடிகளை நாடுகிறோம்.

## 1. ஸ்ரீ ராமானுஜரின் அவதாரம்



ஸ்ரீபெரும்புதூர் - எம்பெருமானாரின் அவதாரஸ்தலம்

*அடையார் கமலத் தலர்மகள் கேள்வன் கையாழியென்னும்*
*படையோடு நாந்தகமும் படர்தண்டும் ஒண்சார்ங்க வில்லும்*
*புடையார் புரிசங்கமு மிந்தப் பூதலம் காப்பதற்கென்று*
*இடையே, இராமநுச முனியாயின விந்நிலத்தே.*
*(திருமாலின் பஞ்சாயுதங்களே இராமானுசனாக அவதரித்தன.)*

*பிங்கல ஸமாக்யவர்ஷே மேஷே சுபமாஸி சுக்லபஞ்சம்யாம்*
*ஆர்த்ராநாம் நிபே பே ஸ்தவாநி ராமாநுஜார்ய மவதீர்ணம்.*

ஸ்ரீபெரும்புதூரில் சுமார் ஆயிரமாண்டுகட்கு முன்னர், ஆசூரி கேசவாரியர் என்பவர் யக்ஞ கர்ம நிஷ்டராக வாழ்ந்து வந்தார். அப்போது ஸ்ரீ ஆளவந்தார் என்னும் யாமுநாச்சாரியர் தமக்குரிய அரியாசனத்தைத் துறந்து, துறவு பூண்டு ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தில் வசித்து வந்தார். அவரது விரக்தி, தன்னலமற்ற தன்மை, புலமை, கர்மநிஷ்டை இவை அசாதாரண அளவில் அவரிடம் திகழ்ந்தது. அதனால் பல ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவரைப் பின்பற்றி சிஷ்யரானார்கள். அவர் இயற்றிய வட மொழி சுலோகங்கள் யாவரும் பாடியும், நெஞ்சில் நிறுத்தியும், மகிழும்படியும் இனிமை தந்தன.

ஸ்ரீ சைலபூர்ணர் என்று வழங்கப்படும் பெரிய திருமலை நம்பிகள், ஸ்ரீ யாமுநாசாரியாரின் தலையாய சீடர். அவருக்கு இரு சகோதரிகள். மூத்த சகோதரியான பூமிப்பிராட்டி என்னும் காந்திமதி அம்மையாரை மணந்து கொண்டார். மகாதேவியார், மதுரமங்கலம் கமலநயன பட்டருக்கு மனைவியானார். கேசவாரியருக்கு விவாகமாகி வெகு காலமாகியும் மகப்பேறு இல்லாததால், ஹஸ்திகிரி வரதராஜப் பெருமாளது ஆணைப்படி திருவல்லிக்கேணியில் கைரவிணி புஷ்கரணிக் கரையில் புத்திர காமேஷ்டி யாகத்தை செய்தார். தேவர்கள் யாவரும் கூடி வாழ்த்தினர்.

ஸ்ரீ வைகுண்டநாதன் தனது ஆஸனமான ஆதிசேஷனிடம், "அரவரசனே! பூமியிலே கலியின் கொடுமை ஓங்கி வருகிறது. நாம் மக்களை நல்வழிப்படுத்த பல அவதாரங்கள் செய்தோம். ஆனால் அவர்கள் திருந்தவில்லை. நீ பூமியில் பிறந்து ஸ்ரீ வைஷ்ணவ நெறியைப் பரப்புவாய் என்றார்.

ஆதிசேஷனும் உடன்பட்டு 'கலியுங் கெடுங் கண்டுகொண் மின்' என்ற ஆழ்வார் பாசுரத்தின் படி கலியிருள் நீங்கிப் பெரிய

இருதயுகம் பற்றி பேரின்ப வெள்ளம் பெருகும்படியும் அறுசமயச் செடியதனை யடியறுக்கவும், அடர்ந்து வரும் குதிட்டிகளை அறத்துறக்கவும் செறுகலியைச் சிறிது மறத் தீர்த்துவிடவும், தென்ன ரங்கச் செல்வம் முற்றும் திருத்தி வைக்கவும், மறை யதனில் பொருளனைத்து வாய்மொழியவும், மாறனுரை செய்த தமிழ் மறை வளர்க்கவும், அழகாரு மனந் தாழ்வான் அறமிகு நற்பெரும்புதூரில் ''தீர்லப்தா'' என்கிற கணக்கின்படியே **கலியுகம் 4119, சாலிவாகன, சகவர்ஷம், தொன்னாயிரத்து முப்பத்தொன்பதான பிங்கள, சித்திரை, சுக்லபஷம், பஞ்சமி, வியாழக்கிழமை, திருவாதிரை** நக்ஷத்திரத்தில் கேசவாரியர், காந்திமதி தம்பதிகளுக்கு புத்ரனாய் அவதரித்தார்.

இதே சமயம் காந்திமதியின் தங்கைக்கும் ஒரு சுபுத்திரன் அவதரித்தான். ஸ்ரீசைலபூர்ணரும் தம் இரு மருமகர்களையும் கண்டுகளித்தார். காந்திமதியின் குழந்தையிடம் பல தெய்வ லக்ஷணங்களைக் கண்டு, 'இவன் ஸர்வலக்ஷண லட்சுமி ஸம்பந்தன், ஸகல சாஸ்திரங்களையும் அதிகரிப்பன். ஆகை யாலே 'லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்த:'' என்கிற இளைய பெருமாளின் திருநாமத்தையே சூட்டலாம் என்றருளி இளையாழ்வார், ராமாநுஜன் என்று பெயர் சூட்டினார். மகாதேவியின் பிள்ளைக்கு ''கோவிந்தன்'' எனப் பெயர் சூட்டினார். குழந்தைகளுக்கு காலக்ரமத்தில் ஜாதகர்மம் அன்னப் பிராசனம், காது குத்தல், சௌளம், அக்ஷராரம்பம், உபநயனம் முதலியவற்றை முறைப்படி செய்வித்தார்.

இளையாழ்வார் தமது தகப்பனாரிடமே வேதங்கள், சாஸ்திரங்கள் முதலியன பயின்று ''சொல்லால் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லா அறநெறியாவும் தெரிந்தவன்''என்று அமுதனாரால் நூற்றந்தாதியில் அருளிய படி ஸகல வித்யாபாரங்கதராய்த் திகழ்ந்தார்.

**உ. ஸ்ரீ யாதவப்ரகாசர்**

*அடல்கொண்ட நேமிய னாருயிர் நாதன் அன்று ஆரணச் சொற்*
*கடல்கொண்டவொண் பொருள் கண்டளிப்ப - பின்னும்*
*காசினியோர்*

*இடரின்கண் வீழ்ந்திடத் தானுமவ் வொண்பொருள்*
*கொண்டு, அவர்பின்*
*படருங் குணன் - எம்மிராமானுசன் தன் படியிதுவே.*
*(இராமானுசன் அருள் நிறைந்தவன்.)*

ஸ்ரீ ராமானுஜர் தன் பதினாறாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கும் போதே அவருக்கு தஞ்சமாம்பாள் என்ற அழகிய பெண்ணை மணம் செய்வித்தனர். தமது தந்தை ஸ்ரீ கேசவாரியர் மறைவிற்குப் பின் இளையாழ்வார் தமது தாய், தம் மனைவியுடன் காஞ்சிபுரத்திற்கு குடியேறினார். அப்போது யாதவ ப்ரகாசர் என்ற புகழ்பெற்ற அத்வைத சந்நியாசி ஒருவர் வேதாந்த பாடங்களைச் சொல்லி வந்தார். அவரிடம் கல்வி கற்பதற்காக இளையாழ்வார் சென்றபோது, தமது தமையனார் கோவிந்த பட்டரும் கல்வி கற்க அங்கு வந்து சேர்ந்ததைக் கண்டு மகிழ்ந்தார். இளையாழ்வாரின் புத்தி கூர்மையைக் கண்ட குரு அவரிடம் மிக்க அன்பு வைத்தார்.

ஒருநாள் இளையாழ்வாரை குரு, தமக்கு எண்ணெய் தேய்த்து விடுமாறு அழைத்தார். ஆசார்ய கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் போது, சாந்தோக்யம் கற்று வந்த மற்றொரு மாணாக்கர், ''தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீக மேவ மக்ஷிணீ'' (சாந் 1-6, 6-7) என்ற மந்திரத்தின் பொருளை அறிய வேண்டி நின்றார். அப்போது வறட்டு வேதாந்த அறிவேயன்றி பகவத் பத்திரசத்தை சிறிதும் அறியப்பெறாத குரு, அந்த சிறந்த மந்திரத்துக்கு விபரீதமான, அருவருக்கத்தக்க அர்த்தத்தைக் கூறினார்.

அதைக் கேட்டு ''தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை'' என்று ஞானிகள் வாழ்த்தும் பரம் பொருளின் கண்களை இவ்வாறு இழித்துக் கூறியது கேட்டு பொறுக்க முடியாமல் இளையாழ்வாரின் கண்கள் கலங்கின. வெப்ப நீர் தரையில் பாய்ந்து கண்ணீர்த்துளிகள் ஆசிரியரின் தொடை மேல் விழுந்தன. அனற்பொறியோ! என்று நோக்கினார் ஆசிரியர்.

மனக்கலக்கத்துடன் யாதவப்ரகாசர் இளையாழ்வாரைப் பார்த்து, ''சிஷ்யனே! உன் கண்ணீரா இது! உன் மனத்தில்

இருப்பதை ஒளிக்காமல் சொல். நாம் உம் குரு. நம் ஆணை மீறலாகாது'' என்றார் இளையாழ்வார். ''ஐயனே!'' கம் பிபதி இதி கபி: ஆஸ உபவேசநே'' நீரைப் பருகுவதால் ஸூர்யனுக்கு கபி என்ற பெயர் பொருத்தம். அவனது கிரணங்கள் சேர்வதால் மலர்வது தாமரைப்பூ. ஆதலால் பரம்பொருளின் கண்கள் தாமரை மலர் போல்வன என்பதே ஏற்றதாகும்'' என்று விளக்கினார். இதனைச் செவியுற்ற குருவிற்கு அழுக்காறும் சீற்றமுமே மிகுந்ததேயன்றி பொருளின் சிறப்போ உண்மையின் ஏற்றமோ மனதில் படவில்லை.

பின்னர் ஒருநாள் தைத்திரிய உபநிடதத்தில் காணும் ''ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரஹ்ம'' என்ற வாக்யார்த்தத்தை விளக்க நேரிடவே யாதவப்ரகாசர் ப்ரம்மத்தை பொய்மை யுற்றதும், அறியாமை ஒரு சிறிதும் அண்டப் பெறாததும், பிரிவற்று அகண்டாகாரமாக இருப்பதுமான ஒரு முழுப் பொருளே!'' என்று விளக்கம் கூறினார்.

இதனைப் பணிவுடன் கேட்டுக் கொண்டிருந்த இளையாழ்வார் இந்தப் பொருளை மறுத்து, ''பிரம்மம் வாய்மை வடிவமானது, அறிவின் மயமானது மற்றும் அது எல்லையற்றது. ஆதி முடிவு அற்றது. எஞ்சுதல் இல்லாதது இன்னும் விரித்துரைக்க வேண்டுமாயின் பிரம்மம், சத்திய ஸ்வரூபம், ஞான ஸ்வரூபம், என்றும் அழியாத்தன்மை இவற்றுடன் பிரம்மம் தனது குணங்களை இயல்பாகவே கொண்டதோடு நில்லாது, அது அக்குணங்களாகவே ஆகி பகவானின் குணங்களாகவே திகழ்கின்றது.

இக்குணங்களைக் கொண்டவன் பகவான் என்று சொல்லப்பட்டிருக்கிறதே தவிர அக்குணங்களை பிரம்மம் என்று சொல்வது சரியல்ல'' என்றார். இதைக் கேட்டு, யாதவப்ரகாசர் இளையாழ்வாரைப் பார்த்து ''நீ குருவை விஞ்சிய சிஷ்யனாகி விட்டாய். நம்மிடம் நீ கல்வி ஏற்க அவசியமில்லை. நாம் சொன்னபடி கேட்டுக் கொண்டிருக்க முடியுமானால் இங்கு வாசித்திரும் இல்லையாகில், விட்டுப் போம்'' என்று கூற, ஸ்வாமியும் சிந்தை கலங்கி விலகி யிருந்தார்.

**ஆசிரியரது வஞ்சகம் :**

இளையாழ்வாரால் தமக்கு கீர்த்தி குறையும், தம்முடைய மதமும் குலையும் என்று கருதினார், யாதவப்ரகாசர். அவரை முடிக்கும் வகையை ஆராய்ந்து, தம்முடைய அந்தரங்க சிஷ்யர் களோடு ஆலோசனை செய்தார். சிஷ்யர்களுடன் காசி யாத்திரை செல்வதென்றும் அங்கு கங்கையில் மணிகர்ணிகையில் அவரை ஆழ்த்துவதென்றும் முடிவு செய்து ஒரு நாள் இளையாழ்வாரை வரவழைத்து "நீர் இல்லாமல் எங்களுக்கு ஆற்றவொண்ணாத துயரமாயிருக்கிறது. முன்போல வந்திருந்து, மனமொத்து வாசித்திரும்" என்று கூறி தம்முடன் சேர்த்துக்கொண்டு பாடம் நடத்தி வந்தார்.

ஒரு நாள் சிஷ்யர்களிடம் கங்கா யாத்திரையைப் பற்றி கூறி அனைவரையும் புறப்படுமாறு கூறினார். யாவரும் ஆசிரியருடன் புறப்பட்டனர். வழியிலேயே புண்ய நதிகளிலே நீராடி, க்ஷேத்திரங்களில் இறைவனை வழிபட்டு, நடந்தனர். விந்தியமலைப் பள்ளத்தாக்கில் கோவிந்தர், இளையாழ்வாரை தனித்து அழைத்து, ஆசிரியரது தீய மனத்தை வெளியிட்டு, அவரைத் தொடர வேண்டாம் என்று எச்சரித்தார். அதைக் கேட்டு அதிர்ச்சியுற்ற இளையாழ்வாரும் அங்கேயே பின் தங்கி விட்டார்.

**பேரருளாளனின் பேரருள் :**

"ஆங்கோர் நிழலில்லை, நீருமில்லை" என்னும் படியான நிலைமையாய் ஒருவரும் துணையின்றி "ஆவாரார் துணை யென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய் போல் துளங்கி, வழி தெரியாமல் நிற்கையில், ஆனைக்கு அன்றருளிய கரிவரதனே, அரைகுலையத் தலைகுலைய மடுக்கரைக்கு ஓடிவந்து கஜேந்திரனைக் காத்த புண்ணிய புருடனே, இன்றும் இவர்க்கு துணையாக விரும்பி ஒரு வில்லியன் வேடம் பூண்டு வாளும், வில்லும் கொண்டு மனைவியுடனே முன்னே வந்து தோன்றினார்கள்.

இளையாழ்வாரும் அவர்களைக் கண்டு கலக்கம் நீங்கி, அவர்களை நோக்கி, நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? எங்கே





ஸ்ரீ இராமானுஜரின் முன் வில்லியாக தோன்றியது



அனுஷ்டான குளம்



அனுஷ்டான குளக்கரையில் இராமானுஜர் சன்னதி

போகிறீர்கள்? என்று கேட்க, அவர்கள், உத்தரதேசத்திலுள்ள ஸித்தாச்ரமத்திலிருந்து வருகிறோம் என்றும் ஸத்ய வ்ரத க்ஷேத்திரமான காஞ்சியை நோக்கிச் செல்கிறோம் என்று கூறவும், அதைக் கேட்டு மகிழ்ந்த ஸ்வாமி, நானும் உங்க ளுடனே அவ்விடத்திற்கு வர நினைக்கிறேன். எனக்குத் துணையாக வர முடியுமா? என வினவினார். அவர்களும் சம்மதிக்க, அவர்களுடன் தொடர்ந்து சென்றார்.

நள்ளிரவானதால் மேலே நடந்து செல்ல முடியாமல் ஒரு மரத்தடியின் கீழ் அவர்களோடு தங்கி இருந்தார். அப்போது வில்லியின் மனைவி தாகம் மேலிட்டு தண்ணீர் வினவ, விடிந்தவுடன் நல்ல மதுரமான தீர்த்தம் கிடைக்கும் என்றும் அதுவரை பொறுத்திருக்கும்படியும் வில்லி கூறினான். தம்மால் ''அவர்களுக்கு உதவ முடியவில்லை என்று வருந்தி இளையாழ்வார் சிறிது கண்ணயர்ந்தார்.

கனவிருளகன்று கீழ்வானம் வெள்ளென்று காலையம் பொழுதானவுடன் மூவரும் எழுந்து நடக்கத் தொடங்கினர். வழியில் ஒரு கிணற்றங்கரையில் அழைத்துக் கொண்டு போய் விட்டு, வில்லி இளையாழ்வாரைப் பார்த்து, இக் கிணற்றில் இறங்கி ஒரு கை அள்ளி தீர்த்தம் தாருங்கள் என வினவினார்.

இளையாழ்வாரும் உடனே கிணற்றிலே இறங்கி இரண்டு திருக்கைகளாலும் தீர்த்தம் வாரியெடுத்து மூன்று தரம் கொடுத்து, தானும் கரையேறி வந்து பார்க்கும்போது அவர்களைக் காணாமல் திகைத்தார். அருகில் உள்ளவர்களைப் பார்த்து, 'இது எந்த ஊர்?'' என்று கேட்கவும், அவர்கள் வியந்து, ''நீர் இந்த ஊருக்கு புதியவரோ?'' எதிரே நீர் காண்பது புண்யகோடி விமானம்! இது சாலக் கிணறு. இந்த ஸ்தலம் ஹஸ்தகிரி எனப்படும் காஞ்சிபுரம் என்றனர். இதைக் கேட்டு இளையாழ்வார் பெரிதும் வியந்து, இறைவனது பெருங் கருணையை நினைத்து ''நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து உருக் காட்டாதே ஒளிப்பதே!'' என்று பலவாறு புலம்பி ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்.

தம்முடன் வந்தது பேரருளாளனும், பெருந்தேவித் தாயாருமே என உணர்ந்தார். பின்பு அங்கேயே தங்கி தினந் தோறும் அந்த சாலக் கிணற்றிலிருந்தே திருவாராதனத்திற்கு தீர்த்தம் முகர்ந்து பேரருளாளனுக்கும் பெருந்தேவிக்கும் ஸமர்ப்பித்து வந்தார்.

**உள்ளங்கை கொணர்ந்த நாயனார்**

மேலும் யாத்திரையைத் தொடங்கி கங்காதீரத்திற்கு வந்து சேர்ந்தார்கள். ஒருநாள் கோவிந்தபட்டர் கங்கையில் நீராடுகை யில் அவரது கையிலே ஒரு லிங்கம் வந்துசேர, வியப்படைந்து இஃது என்னென்று யாதவர்க்குக் காட்ட, அதற்கு அவர் பரமஸந்தோஷத்துடனே ''கங்கா ஸ்நாந பலன் கைசேர்ந்தாற் போலே கங்காதரக் கடவுளே கைபுகுந்தபடி காணும்'' என்று சொல்லி மகிழ்ந்தார். அன்று முதல் கோவிந்தபட்டரை அனைவரும் ''உள்ளங்கை கொணர்ந்த நாயனார்'' என்று பேரிட்டழைக்கத் தொடங்கினார்கள்.

யாதவரும் கங்காஸ்நாநம் முடித்து யாத்திரையை முடித்து மீண்டும் ஸ்ரீஜகந்நாதம், அஹோபிலம் வழியாக வர கோவிந்தர் இந்த லிங்கத்தை ஒரு உசித ஸ்தலத்திலே ப்ரதிஷ்டை செய்வித்து வருகிறேன் என்று கூறி தம்முடைய ஜன்ம பூமியான மழலை மங்கலத்திற்கு சென்று சேர்ந்து, அந்த லிங்கத்தை அங்கே பிரதிஷ்டிப்பித்து, பிறகு காளஹஸ்தி என்ற சிவஸ்தலத்திற்கு சென்று அங்கே சிவபெருமானுடையவும், சைவர்களுடையவும் பஹுமானங்களைப் பெற்று அங்கே ஆலய வழிபாடு செய் பவர்களுடன் தலைவராய் நின்றார்.

யாதவப்ரகாசர் ஸ்ரீகாஞ்சியிலே இளையாழ்வானைக் கண்டு வியந்து மகிழ்ந்து, ''நடுக்காட்டினின்றும் இங்கு வந்தது எவ்வாறு? உன்னைக் காணவில்லையே என்று பெரிதும் கலங்கினோம்'' என்றார். இளையாழ்வார் நடந்ததெல்லாம் கூற, ஆசிரியர், ''என்னே! வரதனுடைய அருள்!'' என்று வியந்தார். அங்கேயே தங்கி முன்பு போல் வேதாந்த பாடம் நடத்தி வந்தார். இளையாழ்வாரும் அவரிடம் பாடம் கேட்டு வந்தார்.

## ஆளவந்தார் கச்சிக் கெழுந்தருளி மீளுதல்

இளையாழ்வாரின் பேரும், புகழும் காஞ்சியையும் தாண்டிச் சென்றது. ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த ஆளவந்தாரின் காதிலும் விழுந்தது. கச்சியிலிருந்து ஸ்ரீரங்கம் சென்ற இரண்டு வைஷ்ணவர்கள் ஸ்ரீராமானுஜ விருத்தாந்தத்தை ஆளவந்தாரிடம் விவரித்தனர். ஸ்ரீராமானுஜரின் ஞானப் பெருமை, ஸ்ருதி வாக்யங்களுக்கு அவர் அனுக்ரஹித்த அர்த்தங்களையும் விவரித்தனர்.


"ஆம்முதல்வன் இவன்"
என்று கடாக்ஷித்தல்

ராஜ பண்டிதனான ஆக்கியாழ்வானை மூன்றே ப்ரச்னங் களை மறுக்கச் சொல்லி இளவயதிலேயே முறியடித்தவரும் அதனாலேயே 'ஆளவந்தீரே' என்று ராஜபத்னியால் அழைக்கப் பட்டவரும், அதனால் ஆளவந்தார் என்ற நிரந்தரமான திருநாமத்தை அடைந்தவரும், மகாஞானியுமான யமுனைத் துறைவர் உள்ளம் பூரித்து இந்தளத்திலே தாமரை பூத்தாற்

போலே இவ்விருள் தருமாஞாலத்திலும் இப்படியொரு மஹாநுபாவர் தோன்றப் பெறுவதே! என்று வியந்து அப்போதே அவரைக் காணவேணுமென்னும் ஆவலுடன் கச்சி நகர் எழுந்தருளினார்.

பேரருளாளரையும் பெருந்தேவித் தாயாரையும் ப்ரதக்ஷிண மாக வரும்போது யாதவப்பரகாசரும் சிஷ்யர்களுமாக எதிரே வந்தனர். ஆளவந்தாரும் ''இவர்களில் இளையாழ்வார் ஆர்?'' என்று திருக்கச்சியை நம்பியை கேட்க அவரும் ''சிவந்து நெடுகிவலியராய்,'' என்கிறபடியே ஆஜாநுபாஹுவாய் நடுவே வருகிறவர்'' என்று விண்ணப்பம் செய்தார்.

ஆளவந்தாரும் ஸந்தோஷத்தாலே ப்ரஸந்ந மதுர கம்பீர நயநங்களாலே அவரைப் பார்த்தருளி **''ஆம் முதல்வன் இவன்''** என்று விஸேஷ கடாக்ஷம் பண்ணியருளி பெருமானை நோக்கி, அவரவருடைய இஷ்டக் காமங்களைத் தந்தருளுகிறவராகை யாலே அடியேனுக்கும் இளையாழ்வாராகிற மஹாநுபாவர் நம் தர்சந ப்ரவர்த்தகராம்படி விசேஷ கடாக்ஷம் செய்தருள வேணும் என்று விண்ணப்பம் செய்துபின் ஸ்ரீரங்கத்திற்கு எழுந் தருளினார்.

**ப்ரஹ்மரக்ஷஸ்ஸை காட்டின ராமாநுஜர் பெருமை**

ஒரு சமயம் காஞ்சி நகரில் ஆட்சிபுரிந்து வந்த அரசனின் புதல்வி பேய் ஒன்றால் பீடிக்கப்பட்டு வந்தாள். யாதவப்ரகாசர் ''தன் பேரை அதனிடம் கூறினால் அது உடனே அகன்று ஓடி விடும்'' என்று அரசனுக்கு தூதுவர் மூலம் கூறியனுப்பினார். ஆனால் அந்தப் பேய் சிறிதும் லக்ஷியம் செய்யவில்லை. அதனால் ஆசிரியர் இளையாழ்வாருடன் அரண்மனைக்குச் சென்றார். அந்தப் பெண்ணின் முன் மந்திரம் ஜபித்தார். பேய், அவரைக் கண்டு நகைத்து, ''அடா! நீ ஓதும் மந்திரம் இது வாகும்!'' என்று மந்திரத்தைக் கூறி, உன்னுடைய மந்திர தந்திரமெல்லாம் யாதொரு நற்பயனையும் அளிக்க மாட்டா! நீர் நம்மினும் இழிந்தவரே! நீ உன் ஜன்மமும் அறியாய், என் ஜன்மமும் அறியாய்' என்றது.



யாதவப்ரகாசரும், என்னுடைய ஜன்மம் எது? உன்னுடைய ஜன்மம் எது என்று கேட்க, அதுவும், ''யாதவப்ரகாசா! போன ஜன்மத்திலே மதுராந்தகத்து ஏரியிலிருந்த புற்றிலே நீ ஒரு உடும்பாயிருந்தாய், ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிலர் திருமலைக்கு எழுந்தருளும் போது ஏரியிலே நீராடி அமுது செய்தவிடத்திலே சிந்தின ப்ரஸாதத்தையும், தீர்த்தத்தையும் ஸ்வீகரித்தாய். அதனால் இந்த வித்வத் ஜன்மம் உனக்கு உண்டாயிற்று. ஆனால் நான் ப்ராஹ்மண வர்ணத்திலே பிறந்து யாகம் செய்யும்போது அதில் மந்திரங்களை விட்டுவிட்டேன். அதனால் மந்த்ரலோப, க்ரியாலோபங்கள் ஏற்பட்டு ப்ரஹ்ம ராக்ஷஸ்ஸானேன். உன்னால் என்னை விரட்டவே முடியாது. ராஜகுமாரி சுகமடைய வேண்டுமென்ற இச்சை உமக்கு இருக்குமாயின், உம்முடன் கூட இருக்கும், ஆதிசேஷனின் திருவவதாரமாகிய இளையாழ்வார் என்னைப் போகச் சொன்னால் போவேன்.'' என்று கூறியது.

இதைக் கேட்டு, ஆசிரியர் இளையாழ்வாரை அழைக்க, இராசகுமாரி, இளையாழ்வாரைப் பார்த்து, ''இந்த அடிமையின்

தலைமீது உமது புனிதமான பொற்பாதத்தை வைத்தருளல் வேண்டும். காலம் தாழ்த்தாமல் அடியாளும் இடம் பெயர்ந்து ஓடி விடுவேன். அடையாளமாக எதிரே உள்ள அரசமரத்துக் கொம்பு ஒன்று ஒடிந்து விழுவதைப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினாள். குருவின் ஆக்ஞையை ஏற்று இளையாழ் வாரும் தமது வலது திருவடியை அரசகுமாரியின் சிரசின் மீது வைத்தவுடன் அரச மரத்தின் கிளை முறிந்தது. பேய் நீங்கியது. இராசகுமாரி பழைய நிலையைப் பெற்றாள். யாவரும் இளையாழ்வாரைப் பாராட்டினர். அவரின் கீர்த்தியும், புகழும் எத்திசையும் பரவின.

**ஸ்ரீ ராமானுஜர் யாதவரை விட்டு விலகல்**

ஒரு நாள் யாதவப்ரகாசர், ''ஸர்வம் கல்விதம் பிரம்ம'' என்ற சாந்தோக்ய உபநிஷத் வாக்கியத்திற்கும், நேஹ நாநாஸ்தி கிஞ்சன'' என்ற கடோபநிஷத்தின் வாக்கியத்திற்கும் விளக்கம் கூறினார். ஆத்மா, பிரம்மம் என்பனவற்றின் ஏகாரத்தைக் குறித்து அவர் பொருள் கூறினார். பாடம் முடிந்தவுடன் இளையாழ்வார் எழுந்திருந்து ''ஜகத்து முழுவதும் ப்ரஹ்ம ஸ்வரூபமே'' அவ்வாறு இல்லாவிடின் ''தஜ்ஜலான்'' என்ற அடைமொழி பொருந்தாது. இந்த பிரபஞ்சம் பிரஹ்மத்தில் பிறந்து, அதன் மூலமே வாழ்வுற்றுவளர்ந்து இறுதியாக அதிலேயே ஒடுங்குகிறது. ஆதலால்தான் உலகம் பிரஹ்மமய மென்று சொல்லப்படுகிறது. மீன் நீரிலேயே பிறந்து அதிலேயே வாழ்ந்து வளர்ந்து நசிகின்றது. ஆயினும் இம்மாத்திரம் தானேயன்றி, அதுவே எப்போதேனும் ஜலமேயாகிவிடக் கூடுமா? இவ்வாறேதான் ஜகத்தும் ஒரு போதும் ப்ரஹ்மமாகி விடுவதில்லை.

''நேஹ நா நாஸ்தி கிஞ்ஜன'' என்பதன் பொருள்: ''எப்படி ஒரு சரட்டில் பல முத்துக்கள் சேர்க்கப்பட்டு, கோர்வையானது ஒரே மாலையாக விளங்குகிறதோ, அதே போன்று வெவ் வேறான பொருள்கள் பிரஹ்ம உருவம் பெற்ற நூலில் இணைத்து கட்டப் பெறுகின்றது. பிரஹ்மம் ஜகத்தின் உருவில் பரிணமிக்கிறது. ஜகமாகத் தோன்றுகிறது. பல வஸ்துக்கள் ஒரே

பொருளில் சேர்ந்து ஒரே வடிவத்தைத் தரிக்கின்றன. இதனால் அநேகம் என்ற தன்மைக்கு ஒரு பாதகமும் நேர்வதில்லையே!'' என்று விளக்கம் கூறினார்.

இந்த வியாக்யானத்தைச் செவியுற்ற யாதவப்ரகாசர், இளையாழ்வாரை நோக்கிச் சீற்றமாக, ''இன்று முதல் நீர் என்னிடம் வாசிக்க வேண்டாம். உமது புத்திக்குத் தகுதியான இடத்திலே சென்று வாசித்துக் கொள்ளும்'' என்று கூறினார். இளையாழ்வாரும், 'ஐயனே! தங்கள் ஆக்ஞை! அப்படியே ஆகட்டும்' எனக் கூறி அவரை விட்டு விலகி தம் திருஹத்திற்குச் சென்று தமது திருத்தாயாரிடம் இச்செய்தியைக் கூறினார். அவரது தாயாரும் நெஞ்சு கனிந்து, ''பிள்ளாய்! இதுவரை வாசித்தது போதும்! திருக்கச்சி நம்பிகள் பேரருளாளப் பெருமானுக்கு அணுக்கராய் இருக்கிறார். அவரைச் சென் றடைந்து அவர் சொல் வழுவாது நடந்து வா'' என்று நியமித் தார். இளையாழ்வாரும் அவ்வாறே நம்பிகளை அடிபணிந்து அவரது நியமனப்படி முன்பு போலவே சாலைக் கிணற்றி லிருந்து நாள்தோறும் திருமஞ்சன நீர் கொணர்ந்து தேவப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து வந்தார்.

### 3. ஆளவந்தார் கடாக்ஷம்

*நிதியைப் பொழியும் முகிலென்று நீசர் தம் வாசல்பற்றித்*
*துதிகற்றுலகில் துவள்கின்றிலேன் இனி - தூய்நெறிசேர்*
*எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம்*
*கதிபெற்றுடைய இராமாநுசன் என்னைக் காத்தனனே.*
*(ஆளவந்தார் திருவடிகளை வணங்கும் இராமானுசனே என்னைக் காத்தான்.)*

ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தாருக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டது. அப்போது காஞ்சியிலிருந்து யாத்திரையாக வந்த இரண்டு ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி, 'இளையாழ்வாரைப் பற்றிய செய்தி என்ன' என்று வினவ, அவர்கள், 'இளையாழ்வார் சில நாட்களாக யாதவப்ரகாசரை விட்டு விலகி திருக்கச்சி நம்பியின் பக்கத்தில் இருந்து கொண்டு தேவப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிறார்' என்று கூற, அதைக் கேட்டு மகிழ்ந்து, தமது அந்தரங்க சிஷ்யரான

பெரிய நம்பியை அழைத்து, எப்படியாவது இளையாழ்வாரை இங்கே அழைத்து வர வேண்டும்' என்று ஆணையிட்டார்.

பெரிய நம்பியும் காஞ்சிபுரம் சென்று பேரருளாளனைச் சேவித்து இளையாழ்வார் சாலைக் கிணற்றிலிருந்து வரும் சமயம் ஓரிடத்தில் நின்று செவிக்கினிய கம்பீரமான மதுர ஸ்வரத்தோடு ஸ்தோத்ர ரத்னத்தை அனுஸந்தானம் செய்து கொண்டிருந்தார். அப்போது அங்கு வந்த இளையாழ்வார் ஸ்லோகங்களின் இனிமையை அறிந்து, 'ஸ்வாமி! இந்த ஸ்லோகங்கள் யார் அருளியவை? அப்பெரியோரைப் பார்க்க எனக்கு வாய்ப்பு உண்டோ?' எனக் கேட்டார். உடனே நம்பியும், 'இப்போதே அழைத்துச் செல்கிறேன் வாரும். இந்த ஸ்லோகங்களை அருளியவர் ஸ்ரீ ஆளவந்தார் ஆவார்' என்றார். இளையாழ்வாரும் நம்பியுடன் ஸ்ரீரங்கத்திற்குப் பயணமானார்.

**ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளல் :**

பெரிய நம்பியை காஞ்சிக்கு அனுப்பிய பிறகு சில நாட்களிலேயே ஆளவந்தாருக்கு ஆரோக்கியக் குறைவு ஏற்பட்டது. உடன் கூடியிருந்த சிஷ்யர்கள் உபநிஷத்துக் களையும் அருளிச் செயல்களையும் ஸேவிக்க, அவற்றைக் கேட்டுக் கொண்டே, அந்தமில் பேரின்பத் தடியாரோடு இருந்து களிக்க வேண்டி தமது ஆசார்யரான மணக்கால் நம்பிகளின் திருவடிகளை தியானித்துக் கொண்டே திருநாட்டுக்கெழுந் தருளினார்.

ஆளவந்தார் படி என்று இன்றைக்கும் வழங்கி வரும் இடத்தில் சடங்குகளையெல்லாம் நடத்தி திருக்கரம்பன் துறையிலே திருப்பள்ளிப்படுத்துவதற்காக திவ்ய மங்கள விக்ரஹத்தை ப்ரஹ்ம ரதத்திலே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்தார்கள்.

**ஆளவந்தாரின் மடங்கிய கைவிரல்கள் விடுபடல்**

காஞ்சியிலிருந்து இளையாழ்வாருடன் வந்து கொண் டிருந்த பெரிய நம்பி திருக்கரம்பன் துறையிலே பெரிய கூட்டத்தைக் கண்டு எதிரே வருகிறவர்களை நோக்கி, என்ன

விசேஷமென்று கேட்க, அவர்களும் ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளின செய்தியைக் கூறினார்கள். அது கேட்டு இருவரும் மூர்ச்சித்து, கிலேசித்து பலவாறாகப் புலம்பினர்.

இளையாழ்வாரோ ஆளவந்தாரை முன்கூட்டியே ஸேவிக்கப் பெறவில்லையே என்று வருந்தினார். விமல சரமத் திருமேனியையாவது ஸேவிக்கப் பெற்றோமே எனத் தேறி, அருகே சென்று ஆளவந்தாரது திருமேனியை உற்று நோக்கி, ஸேவிக்கும் போது ஆளவந்தாரது வலக்கை விரல்கள் மூன்று மடங்கியிருக்கக் கண்டு, இளையாழ்வார் அருகிலிருந்தவர்களை இவருக்கு விரல்கள் எப்போதும் இவ்வாறு இருப்பனவோ? எனக் கேட்டார். அவர்கள், இதனை இப்போதுதான் கண்டோம்! என்றனர். அவ்வாறாயின், இவருக்கு குறைகள் ஏதும் உண்டோ? என வினவ, அவர்கள் இவருக்கு "வியாசரிடமும், பராசரிடமும் ஆராத அன்பு உண்டு. நம்மாழ்வாரது திருவாய்மொழி எங்கும் பரவ வேண்டும் என்று விரும்புவார். வ்யாச ஸூத்ரங்களுக்கு பாஷ்யம் தோன்ற வேண்டும் என்று விரும்புவார். இதைப் பற்றி அடிக்கடி கூறுவார்" என்றனர்.

இது கேட்ட இளையாழ்வார் தமது கரங்களைக் குவித்து, அதி கம்பீரமான குரலில் பாடத் துவங்கினார்.

*"அஹம் விஷ்ணு மதே ஸ்தித்வா ஜநாநக்ஞான மோஹிதான்*
*பஞ்ச சம்ஸ்கார சம்பன்னாந் திராவிடாம்னாய பாரகாந்*
*ப்ரபத்தி தா்ம நிரதாந் க்ருத்வா ரக்ஷாமி ஸா்வதா."*

"நான் விஷ்ணு மதத்தில் நிலைத்து நின்று அக்ஞான இருளில் அறிவு மயங்கி கிடக்கும் மனுஷ்யர்களுக்கு பஞ்ச சமஸ்காரம் செய்து தமிழ் வேதத்தை அவர்கட்கு கற்பித்து வந்தும் ஸ்ரீமந் நாராயணனது சரண கமலங்களில் அடைக்கலம் புகுமாறும் செய்தும் அவர்களை உய்விப்பேன்."

இதனை கூறியதும் ஸ்ரீ ஆளவந்தாரது ஒரு விரல் நேராயிற்று.

*"சங்க்கிருஹ்ய நிகிலாந் அர்த்தான் தத்வஞானரப: சுபம்*
*ஸ்ரீ பாஷ்யஞ்ச கரிஷ்யாமி ஜனரக்ஷண ஹேதுனா."*

''உலக க்ஷேமார்த்தகமாக நான் எல்லா அர்த்தங்களையும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்து சர்வ மங்களமயமானதும் உண்மையான தத்துவார்த்தத்தை விளக்குவதுமான ஸ்ரீ பாஷ்யத்தைச் செய்யக் கடவேன்'' என்ன, மற்றொரு விரலும் நேர் நின்றது. மற்றொன்றும் துணிந்து கூறினார்.

*''ஜீலேசுவராதீன் லோகேப்ய: க்ருபயாய: பராசர:*
*ஸந்தர்சயன் தத்ஸ்வபாவான் தது பாய சுதீஸ்ததா*
*புராணரத்நம் ஸம்சக்ரே முனிவர்ய: க்ருபா நிதி:*
*தஸ்யநாம்நா மகாப்ராக்ஞ வைஷ்ணவஸ்ய சசிகஸ்யத்*
*அபிதானம் கரிஷ்யாமி நிஷ்க்ரியார்த்தம் முநேரஹம்.''*

''முனி ச்ரேஷ்டரான ஸ்ரீபராசரர் தமது பரம கிருபை யினால் உலகோருக்கு 'ஜீவன், ஈசுவரன் ஜகத்து இவற்றின் ஸ்வபாவம் பற்றியும் அவற்றின் முற்போக்குக்கு ஏற்ற உபாயம் பற்றியும் தெளிவுறக் கூற, திவ்யசூரி ரத்னமாகிய விஷ்ணு புராணத்தை இயற்றி அதனை சரிபார்த்து திருத்தமாக அமைக்க ஒரு வைணவப் பெரும் புலவரை தோற்றுவிப்பேன்.'' இதற்கு, ''இந்த மஹானின் அருளும், ஸ்ரீரங்கநாதனின் கடாக்ஷமும் கிடைக்குமானால் இக் குறைகளை நான் நீக்கிவிடுவேன்'' என்றார். உடனே ஆளவந்தாரின் கையில் மடங்கியிருந்த மூன்றாவது விரலும் எப்போதும் போல் நிமிர்ந்து நின்றது. இது கண்டு பெரியோர்கள் ''நம் தர்சனத்திற்கு தலைவர் இவரே!'' என்று ஆசி கூறினர். ஸ்ரீ ஆளவந்தாரைப் பள்ளி படுத்திய பின் இளையாழ்வார் காவிரியில் நீராடி பெரிய நம்பியிடம் விடைபெற்றுக் கொண்டு காஞ்சிக்கு பயண மானார். ஸ்ரீ ஆளவந்தாரை இழந்த துக்கத்தால் அவர் ஸ்ரீ ரங்கநாதனை ஸேவிக்கவில்லை.

## 4. ஆறுவார்த்தை

### திருக்கச்சி நம்பியிடம் பக்தி

***இன்பந் தருபெருவீடு வந்தெய்திலென், எண்ணிறந்த***
***துன்பந் தருநிரயம் பல சூழிலென், தொல்லுலகில்***
***மன்பல்லுயிர்கட்கிறைவன் மாயனென மொழிந்த***
***அன்பனனகன் இராமாநுசனென்னை ஆண்டனனே.***
*(இராமானுசனே என்னை ஆண்டவர்.)*

காஞ்சிக்கு சென்று திருக்கச்சி நம்பியிடம் நிகழ்ந்ததைக் கூற, நம்பியும், தமது ஆசார்யரான ஆளவந்தாருக்குத் தாம் செய்ய வேண்டுவனவற்றைச் செய்து, அவரது பெருமையை நினைத்து வந்தார்.

இளையாழ்வாருக்கு நம்பியிடம் ப்ரேமம் நாளுக்கு நாள் மேலோங்கி வந்தது. அவர் நம்பியையே பற்றி உய்யலாம் என்று நினைத்தார். நம்பியிடம் சென்று தண்டன் ஸமர்ப்பித்து,

*குலம்தாங்கு சாதிகள் நாலிலும் கீழ் இழிந்து எத்தனை*
*நலம்தான் இலாத சண்டாளர்கள் ஆகிலும்*
*வலம் தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு*
*ஆள் என்று உள்*
*கலந்தார் அடியார்தம் அடியார் எம் அடிகளே.*

என்று கூறியபடி, ''இவ்வாத்மாவை தேவரீர் உஜ்ஜீவிப்பித் தருள வேண்டும்'' என்றார். நம்பியும்'' பேரருளாளர் ''பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி அடிமை கொண்டது கண்டு நீர் விரும்பினீர்'' ஆகிலும் வர்ணாஸ்ரமத்துக்கடுத்த வைதிக மரியாதைக்கு போந்திராது'' என்று விலக்கியருளினார்.

ஆயினும் ஒரு நாள் நம்பியைத் தம் அகத்திற்கு அமுது செய்ய அழைத்தார். (நம்பி அமுது செய்த சேஷத்தை தாம் ஏற்று உண்ண விரும்பினார்) நம்பியும் இசையவே, மிக்க மகிழ்ச்சி கொண்டு இச்செய்தியை தம் தேவியிடம் தெரிவித்தார். அன்று, தமது நித்ய கைங்கர்யமான திருமஞ்சன திருப்பணியை முடித்துக் கொண்டு, விரைவில் தம் திருமாளிகைக்கு திரும்பி திருவாராதனம் கண்டருளப் பண்ணி, நம்பியை அழைத்து வருவதற்காக தெற்குத் திருவீதியாலே சென்றார். அவ்வமயம் நம்பிகள் வடக்கு திருவீதி வழியாக வந்து, திருவாலவட்டத் திருப்பணிக்காக விரைந்து செல்ல வேண்டியிருப்பதாகக் கூறியவுடன், ஸ்வாமியின் தேவியும் இவரை ஒரு மூலையிலே அமர வைத்து, அமுது செய்யப் பண்ணினார். பிரசாதத்தை உண்டபின், நம்பிகள் தமது இலையைத் தாமே அப்புறப்படுத்தி விட்டு, உண்ட இடத்தையும் சாணத்தால் சுத்திகரித்துவிட்டு

விடை பெற்றுக் கொண்டார். அவர் மனைவியும் எஞ்சிய உணவை பிறர்க்கு இட்டுவிட்டு பாத்திரங்களை நன்கு சுத்தி பண்ணி, தாமும் நீராடி இருந்தார்.

நம்பியை அழைத்து வரச் சென்றிருந்த இளையாழ்வார் அவர் இங்கு வந்திருப்பதை அறிந்து, அகத்திற்கு வந்து நம்பியைக் காணாமல், தேவியாரை கேட்க, அவர், ''கைங்கர் யத்திற்கு விரைந்து செல்ல வேண்டியிருப்பதால் தேவரீர் வரும் வரை காத்திருக்க இயலாதென கூறவே அவரை அமுது செய்யப் பண்ணுவித்தனுப்பினேன் என்றாள். இதனைக் கேட்டு இளையாழ்வார் மிகவும் நொந்து, தமது பாக்கியக் குறைவே இவ்வாறு ஏற்பட்டது என்று மனம் தளர்ந்திருந்தார்.

**அருளாளன் அருளிய ஆறு வார்த்தைகள் :**

ஆளவந்தாரது திருவுள்ளத்தை இயக்கும் வகையை ஆராய்ந்தார் இளையாழ்வார். திருக்கச்சி நம்பியை வணங்கி ''பேரருளாளனிடம் உரையாடும் பெருமை வாய்ந்தவரே! என் மனத்துள் உள்ள எண்ணங்கள் சில அவற்றைப் பற்றி எம் பெருமானின் ஆணை வேண்டும். வரதராஜப் பெருமாளைக் கேட்டு என்னிடம் அருளிச் செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொண்டார். அன்றே, நம்பி பேரருளாளனிடம் விண்ணப்பஞ் செய்ய, எம்பெருமானும், ''நம்பி! இளையாழ்வாரது உள்ளத்தில் உள்ளவற்றைக் கூறுகிறோம்! அவரிடம் கூறுவீர் (1) நாமே பரம்பொருள், (2) இறைவன் ஜீவர்களிடத்து வேறு பட்டவன். (3) உபாயமும் ப்ரபத்தியே. (4) ப்ரபன்னர்களின் இறுதிக் காலத்தில் நாமே அவர்களைப் பற்றி நினைப்பதால் அந்திமஸ்ம்ருதி அவசியமன்று. (5) ப்ரபன்னர்களுக்கு சரீரம் முடியும் போது மோக்ஷம் நிச்சயம். (6) பெரிய நம்பியை ஆசார்யராக ஏற்று இளையாழ்வார் உபதேசம் பெற வேண்டும் என்றருளிச் செய்தார். இதை அப்படியே நம்பியும், இளையாழ்வாரிடம் அருளிச் செய்ய, இவற்றைக் கேட்டு 'யாவும் தாம் நினைந்தனவே' என மகிழ்ந்தார்.

## 5. பெரிய நம்பியை ஆச்ரயித்தல்

### பஞ்ச ஸம்ஸ்காரம்

*இருந்தேன் இருவினைப் பாசம் கழற்றி இன்று யானிறையும்*
*வருந்தேன் இனி எம்மிராமாநுசன் மன்னு மாமலர்த்தாள்*
*பொருந்தாநிலையுடைப் புன்மையினோர்க் கென்றும்*
*நன்மை செய்யாப்*
*பெருந் தேவரைப் பரவும் பெரியோர் தங்கழல் பிடித்தே.*
*(இராமானுசனைப் பணிந்து இருவினைப் பாசம் போக்கினேன்.)*



**ஸ்ரீ இராமானுஜரும் - பெரிய நம்பிகளும், மதுராந்தகம்**

வரதராஜப் பெருமானின் நியமனப்படி, பெரிய நம்பியை ஆசாரியராகப் பெறுவதற்காக இளையாழ்வார், ஸ்ரீரங்கத்தை நோக்கி நடந்தார். அப்போது ஸ்ரீரங்கத்தில் தர்சந நிர்வாகத் திற்காக இளையாழ்வாரை அங்கே வரவழைத்து நிலை நிறுத்த வேண்டுமென்ற ஆர்வம் கொண்ட முதலிகள், பெரிய நம்பியை நோக்கி, நீரே காஞ்சிக்குச் சென்று இளையாழ்வாரை அழைத்து வாரும்! என பணித்தனர். பெரிய நம்பியும் ஸகுடும்பமாக புறப்பட்டு காஞ்சியை நோக்கி வரும்போது இடையில் மதுராந்தகத்தில் ஏரிகாத்த ராமர் சந்நிதியில் நின்றார். இளையாழ்வாரும் அங்கே நம்பியை சந்தித்தார்.

இளையாழ்வார் நம்பியின் திருவடிகளில் பணிந்து, "அடியேனுக்கு பஞ்சஸமஸ்காரம் செய்தருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். நம்பி, "க்ஷேத்ரங்களுள் சிறந்ததான காஞ்சியில் செய்வேன்" எனக்கூற, இளையாழ்வார் "ஸ்வாமி! சரீரம் நிலையற்றது. மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள் என்பது தேவரீர் அறிந்ததே! ஆளவந்தாரை ஸேவிக்க விரும்பி நடந்தோம். உயிரோடு ஸேவிக்கவில்லை ஆதலின் இப்போதே அருள வேண்டும் என விண்ணப்பித்துக் கொண்டார். பெரிய நம்பியும் உகந்த திருவுள்ளத்தராய் இளையாழ்வாரைக் கையை பிடித்து அழைத்துக் கொண்டுபோய் ஏரிகாத்த பெருமாள் கோயில் திருமகிழ மரத்தடியிலே எழுந்தருளி,

"மந்த்ரஸம்ஸ்கார ஸித்த்யர்த்தம் மந்த்ர
தீக்ஷாவிதௌ ததா! சக்ரஸ்ய தாரணம்
ப்ரோக்தம் மந்த்ரை: பஞ்சாயுதாநிவா!!"

என்றும்

"சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்த வேதநம்!
பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதி விபூஷணம்!!"

என்றும் சொல்லுகிறபடியே திருவிலச்சினை ப்ரஸாதித்து, இளையாழ்வாரைத் தம்முடைய வலப்புறத்திலே வைத்துத் தம் திருக்கைகளாலே அவர் ஸிரஸ்ஸை ஸ்பர்ஸித்துக் கொண்டு ஸதாசார்யரான ஆளவந்தார் திருவடிகளை ஸ்மரித்துக் கொண்டு குருபரம்பரா பூர்வமாக மந்த்ர ரத்நமான த்வயத்தை ஸாங்கோபாங்கமாக இளையாழ்வாருடைய வலத்திருச் செவியிலே உபதேஸித்தருளி, "பெருமாள், நாட்டுக்காக ஸ்ரீ பரதாழ்வான் தலையிலே திருவடி நிலைகளை வைத்துக் காட்டுக்கு எழுந்தருளினாற்போலே ஆளவந்தாரும் உமக்காக தம்முடைய திருவடித் தாமரைகளை என் தலைமேலே வைத்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினார் என்று இரும்" என்று அருளிச் செய்தார். இளையாழ்வார்க்கு நேர் ஆசார்யர் யமுனைத் துறைவரேயாம். ஆகையினால்தான் பிள்ளை யமுதனாரும் தமது இராமாநுஜ நூற்றந்தாதியில் "எதிகட்

கிறைவன் யமுனைத் துறைவன் இணையடி யாங்கதி பெற்றுடைய விராமாநுஜன்'' என்று அருளிச் செய்தார்.

பிறகு இராமாநுஜரின் விருப்பத்திற்கிணங்க அவர் திருமாளிகையிலே மேல் மாடியில் குடும்ப ஸஹிதமாக எழுந்தருளியிருக்க சம்மதித்தார். நம்பியும் ஆறு மாஸம் அங்கே எழுந்தருளியிருந்து இளையாழ்வாருக்கு த்ராவிட வேத ப்ரபந்தங்களையும் தர்ஸநவிஷய, ரஹஸ்ய விஸேஷங்களையும் உபதேஸித்தார். இளையாழ்வாரும் ப்ரீதியுடனே செவிக்கினிய செஞ்சொல் கேட்டு வந்தார்.

## மனைவியைத் துறத்தல்

ஒரு முறை, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஸ்ரீராமாநுஜர் திரு மாளிகைக்கு வந்து பசியாயிருப்பதாகவும், அன்னமிடுமாறும் வேண்டி நின்றார். ஸ்ரீராமாநுஜரின் தேவியாரோ அன்னமிட மறுத்து இல்லை என பகர்ந்து விட்டார். பின்னர் உள்ளே சென்று பார்த்த ஸ்ரீராமாநுஜர் பிரசாதம் நிரம்ப இருப்பதைக் கண்டு மனம் நொந்தார்.

இவ்வாறு இருந்து வருகையில், ஒரு நாள் பெரிய நம்பியின் தேவியாருக்கும், இளையாழ்வாருடைய தேவி யாருக்கும் மனப் பொருத்தமின்றி விவாதம் ஏற்பட்டு வார்த்தைகள் விஞ்சின. இதைப் பெரிய நம்பி உணர்ந்து, தமது தேவியாரைக் கோபித்து உடனே ஸ்ரீரங்கத்திற்கு புறப்பட தீர்மானித்தார். இளையாழ்வாரிடம் தெரிவிக்காமல் அவர் அனுஷ்டானத்திற்கு சென்ற சமயமாக ஸ்ரீரங்கத்திற்கு கிளம்பிச் சென்றார்.

விஷயம் கேள்விப்பட்டு இளையாழ்வார் தமது தேவி யாரை கோபித்து, மீண்டும் நம்பியை அழைத்துவர விழைந்தார். நம்பியைக் காணவில்லை. இளையாழ்வாருக்கு தம் தேவியாரிடம் சீற்றம் மேலும் ஓங்கியது. அதற்கு முன் தம் விருப்பத்தைத் தன் தேவியார் செய்யவில்லை என்ற குறையும் வளர்ந்து வந்தது.

ஸ்வாமி தமது தேவியாரிடத்து மூன்று குற்றங்களைக் கண்டார். (1) திருக்கச்சி நம்பியிடம் தமது திருவுள்ளத்திற்கு மாறாக நடந்தது. (2) ஒரு நாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவருக்கு அன்னமிடும்படி நியமிக்க, உள்ளே அன்னமிருந்தும் இல்லை யெனச் சொல்லி மறுத்தது. (3) ஆசாரியரான பெரிய நம்பியின் தேவிகளோடு அபசாரப்பட்டது. ஆக இந்த மூன்று செயல் களும் பெரிய அபசாரமாக ஸ்வாமிக்குத் தோன்ற, உடனேயே துறவறம் ஏற்கத் தீர்மானித்தார். தேவியாரை அவரது பிறந்த வீட்டிற்கு அனுப்பி விட்டார்.

**ஸந்யாஸாஸ்ரம ஸ்வீகாரம்**

''இல்லறமல்லேல் துறவறம்'' என்கிறபடியே இளையாழ் வாரும் ''நமக்கு ஸம்ஸாரம் த்யாஜ்யம்'' என்று எண்ணி துறவறம் கொள்ள ஸங்கல்பித்துக் கொண்டு பேரருளாளர் ஸந்நிதியிலே எழுந்தருளி ஸேவித்து - ''தாயே தந்தையேயென்றும் தாரமே கிளை மக்களேயென்றும், நோயே பட்டொழிந்தேன்'' என்கிற படியே பகவத் பாகவதசார்யாநுவர்த்தநத்துக்கு இடையூரான ஸம்ஸார ஸம்பந்தம் வேண்டுவதில்லை, தேவரீர் திருவடித் தாமரைகளின் ஸேவையே வேண்டுவது; ஆகையாலே,'' த்ரிதண்ட காஷாயாதிகளை அடியேனுக்கு ப்ரஸாதித்தருள வேணும் என்று இளையாழ்வார் பேரருளாளரை விண்ணப்பஞ் செய்ய, தேவப் பெருமாளும் திருவுள்ளமுகந்தருளி-

*''த்ரிதண்ட, முபவீதஞ்சவாஸ: கௌபீநவேஷ்டநம்!*
*ஸ்ரீ க்யங்கவசயித்யேதத் பிப்ருயாத் யாவதாயுஷம்!!''*

என்கிறபடியே த்ரிதண்ட காஷாயாதிகளை நீருள்ளவரை தரிக்கக் கடவீர்'' - என்று அர்ச்சகமுகேந நியமித்து ப்ராஸாதித்தருளி 'இராமாநுச முனி' என்று திருநாமம் சாத்தியருளினார். 'நம் ராமாநுசனை மடத்திலே வைத்து வாரும்' என்று திருக்கச்சி நம்பிக்கு அருளிச்செய்தருள அவரும் அப்படியே ஸ்ரீ ராமானுஜரை மடத்தில் எழுந்தருளச் செய்தார்.

**சிஷ்யர்கள் :**

(புருஷமங்கலம் என்ற) பேட்டை (எ) பூவிருந்தமல்லி என்ற ஸ்தலத்திலே தாசரதி என்ற பெரியவர் வாழ்ந்து வந்தார்.

இளையாழ்வார் துறவு பூண்டதைக் கேட்டு அவருக்குச் சிஷ்யராகி அவருடன் வாழ விரும்பினார். இராமானுஜரை வணங்கி அவரது சிஷ்யரானார். சிஷ்யர்களுள் முதல்வராகை யாலே அவர் 'முதலியாண்டான்' என்றழைக்கப்படுகிறார். கூரம் என்ற ஸ்தலத்துக்கு தலைவராய் வாழ்ந்து வந்தார் ஓர் அரிய மேதை. அவர் ஆழ்வான் என்னும் திருநாமம் உடையவர். அவரும் இராமானுஜரை பணிந்து அவர் மடத்திலே தங்கினார். அவ்விருவரையும் இராமானுஜர் மிக்க ஆதூரத்துடன் ஏற்றுக் கொண்டார். முதலியாண்டானைத் தமது முக்கோல் (த்ரிதண்டம்) என்றும், ஆழ்வானைத் தமது பவித்ரம் (துறவிகள் தரிக்கும் புனிதப்புல் மோதிரம்) என்றும் பாராட்டி வந்தார்.

**யாதவப்ரகாசர் ஸ்வாமியை ஆச்ரயித்தல் :**

இராமானுஜரின் பெரும் புகழைக் கேள்விப்பட்ட யாதவப்ரகாசரது தாயார் அவரை இராமானுஜருக்கு சிஷ்யராகு மாறு பணித்தார். யாதவப்ரகாசருக்கு இதில் விருப்பம் இருந்தாலும் தயக்கம் இருந்தது. மடத்திற்கு அவரைக் காணச் சென்றார். இராமானுஜரின் திருமேனியின் திவ்யமான தேசொளியை கண்ணுற்று மோகித்தார். ஆயினும், எவரை இதுகாறும் சீடராகப் பாவித்து இருந்தாரோ, அவரை எவ்வாறு ஆச்சார்ய பீடத்தில் வைத்துப் பூஜிப்பது? என்ற ஐயம் தோன்ற நின்றார்.

இராமானுஜர் அவரை அன்புடன் வரவேற்றார். வேறு விஷயங்களைப் பேசுவது போல் சுற்றி வளைத்து பேசிவிட்டு ஸ்ரீ யாதவப்ரகாசர் இராமானுஜரை பார்த்து ''பிள்ளாய்! நீ சங்கு சக்கரங்களைப் பொறித்துக் கொண்டிருப்பதைக் காண்கிறேன். இதிலிருந்து சகுணோபாசனையின் மீது அதிகப் பற்றுதல் உண்டென அறிகிறேன். இதற்குச் சாஸ்திரத்தில் ஆதாரமுண்டா? மேற்கோள் காட்டக் கூடுமோ?'' என்றார். அதைக் கேட்ட ஸ்ரீ இராமானுஜாசாரியரும், 'இதோ இருக்கும் ஸ்ரீ கூரத்தாழ்வார் மிகவும் கற்றுப் புலமைப் பெற்றவர். இவருக்கு எல்லா சாஸ்திரமும் மனப்பாடம். இவரைக் கேட்டால் எதனையும் எளிதாகப் புலப்படுத்துவார்'' என்றார்.

உடனே கூரேசரும், "அந்தணர் தலைவரே! சங்கம், சக்ரம், ஊர்த்தவ புண்ட்ரம் ஆகியவற்றைத் தரிக்க வேண்டும் என்னும் விஷயத்திலும், விஷ்ணுவே அனைவரிலும் உயர்ந்தவன் என்பதிலும், ஸகுண ப்ரஹ்மம் விஷயத்திலும், ஸ்ருதி ஸ்ம்ருதி புராணங்களில் உள்ள ப்ரமாண வாக்யங்களைக் கூறுகிறேன் கேளிர்! என்று உரைத்து, பாஷ்கலஸம்ஹிதை, ஸுதர்ஸநோப நிஷத்து, ருக்வேதம், அதர்வண வேதம் மற்றும் கடவல்லியில் ஊர்த்வ புண்ட்ரவிதிகளை விளக்கினார். மேலும் பராசர ஸம்ஹிதை, பாரதம், பீஷ்மபர்வம், ஹாரித ஸம்ருதி, தூமன புராணம், லிங்க புராணம், ஸ்கந்த புராணம், பராசர ஸம்ருதி போன்ற ஸம்ருதீதிஹாஸ புராண ப்ரமாணங்களையும் எடுத்துக் காட்டினார்.

ஊர்த்வ புண்ட்ர விதியைப் பற்றி அதர்வணோபநிஷத், மஹோபநிஷத், ஆக்நேய புராணம், ப்ரஹ்மாண்ட புராணம், ப்ரஹ்மராத்ரம், வஸிஷ்டஸ்ம்ருதி, ஸநத்குமார ஸம்ஹிதை, பாத்மபுராணம் மற்றும் ஈஸ்வர ஸம்ஹிதையிலிருந்தும் விளக்கினார்.

ப்ரஹ்மம் குணங்களோடு கூடியது:- என்பதை முண்ட கோபநிஷத் (1-1-10), ஸ்வேதாஸ்வர 6, 8, வி-பு. 6-5-85, சாந்தோக்யம் 8-7,1, ஸ்வேதாஸ்வதரம் 6.1, ஸ்வேதாஸ்வரம்1.9, கட 2.5, தை.நா.11, பாகவதம், நாராயணோபநிஷத், மஹோபநிஷத் போன்றவைகளை மேற்கோள்காட்டி விளக்கி னார். இவ்வாறு கூரத்தாழ்வார் அநேக பிரமாணங்கள் எடுத்து உரைத்ததைக் கண்டு யாதவப்ரகாசர் மகிழ்ந்து ஓடோடிச் சென்று ஸ்ரீ இராமானுஜரின் தாள்களைப் பற்றி அடியேனை மன்னித்து, அடியேன் செய்த பலவிதக் குற்றங்களைக் கருணையாலே பொறுத்தருள்வீர் என்று கூறி பக்தியோடு அவரை ப்ரதஷிணம் செய்தார்.

இராமானுஜரும் அவரை அன்போடு ஏற்றுக் கொண்டார். அவருக்கு உபநயனம் முதலிய பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்து, ஸந்யாசாச்ரமத்தையும் அளித்தார். கோவிந்ததாஸர் என்ற தாஸ்ய நாமத்தையும் அளித்தார். இராமானுஜரின்

ஆணைப்படி யதி தர்மஸமுச்சயம் (சந்நியாசியின் கடமை) என்பது பற்றி ஒரு நூல் இயற்றினார்.

**6. யதிராஜரின் ஸ்ரீரங்க யாத்ரை**

*கண்டு கொண்டேன் எம்மிராமாநுசன் தன்னை காண்டலுமே*
*தொண்டு கொண்டேன் அவன் தொண்டர் பொற்றாளில்*
*என் தொல்லை வெந்நோய்*
*விண்டு கொண்டேன் அவன் சீர் வெள்ள வாரியை வாய்*
*மடுத்து இன்று*
*உண்டு கொண்டேன் இன்னமுற்றன வோதிலுவப்பில்லையே.*
*(இராமானுசனைக் கண்டு அவன் அடியார்க்கு அடியனாயினேன்.)*

இளையாழ்வார் துறவறத்தைக் கேட்டு ஸ்ரீரங்கத்தில் ஆளவந்தாரது சிஷ்யர்கள் பெரிய நம்பியை அடைந்து, ''ஸ்வாமி நம் ஆளவந்தார் கடாக்ஷம் பெற்ற இராமானுஜ முனிவரை இங்கு அழைத்து வந்து வைஷ்ணவ நெறியை வளர்க்கச் செய்வீர்'' என்றனர். அவர் ஸ்ரீரங்கநாதனை வணங்கி இராமானுஜர் இங்கு வரும்படி அருள் செய்ய வேண்டும் என்று வேண்டி திருவரங்கப் பெருமாள் அரையரை இராமானுஜரை அழைத்து வரக் கூறினார். அவரும் காஞ்சிக்கு வந்தார்.

வரதராஜப் பெருமாள் முன்பு கோவில் ஊழியர்களும் இதர சேவார்த்திகளும் கூட்டமாய் நிற்க, திருக்கச்சி நம்பி பெருமாளுக்கு கவரி வீச, ஸ்ரீராமாநுஜர் வரதராஜாஷ்டகத்தை அநுசந்திக்க வரதராஜனுடைய புண்ய சதஸின் ஓரமாய் நின்றார் அரையர். ஆனால் அவரைக் கண்டுவிட்ட திருக்கச்சி நம்பிகள் ஓடோடி வந்து பெருமாளின் அருகிலே அவரை அழைத்துச் சென்றார்.

**கானம் இசைக்க அருளிப்பாடு**

பெருமாளுடைய முகத்திலிருந்து உத்தரவு வர, திருவரங்கப் பெருமாளரையர் ''என்னெஞ்சமே யான் என் சென்னியான்'' என்ற பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதியை இன்னிசையிலே குழைத்துப் பாடத் துவங்கி னார். அடுத்து, ''பிணியவிழ் விழ தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர் கொல் யானறியோம்'' என்ற திருமங்கை

மன்னனின் பெரிய திருமொழியும் பாடினர். இப்படியே இதர ஆழ்வார்களின் பாடல்கள் பலவும் இசையமுதத்திலே இழைந்து வந்தன.

அரையர் ஆழ்வார்களின் அமுதத் தமிழிலே அந்த தமிழ் எடுத்தளித்த தேனினும் இனிய பாடல்களிலே மெய்மறந்தார். தமிழ்ப் பாடல்களிலே தோய்ந்து அந்தர்வாகிணியாக பிரவகித்துக் கொண்டிருந்த இசையையும் கலந்து அபிநயம் பிடித்ததாலே, ஆடியதாலே, நாட்டியத் தமிழுக்கும் இடங் கொடுத்து பேரருளாளரின் சதஸிலே சுழன்றார்.

ஆத்மாவை சாதாரணமாகவே தொடும் சக்தி வாய்ந்த ஆழ்வார்களின் பாடல்கள் அன்று திருவரங்கப் பெருமாளரை யரின் பக்தியில் தோய்ந்த தேனான சாரீரத்தாலும், இஷ்டப்படி வளைந்து முத்திரைகளைப் பொறித்த சரீர விசேஷத்தாலும் வைகுண்டத்தையே அங்கு சிருஷ்டித்து விட்டபடியால், சபை உருகி நின்றது. அரையரின் அசைவுக்கு, அவரது சரீரத்தின் இசைவுக்கு பாவநாட்டியத்துக்கு இதயங்களைப் பறிகொடுத்தது சதஸ், சதஸ் மட்டும் பறிகொடுத்தால் அரையர் வந்த காரியம் நிறைவேறியிருக்காது.

''வேதானாம் ஸாம வேதோஸ்மி'' - வேதங்களில் நான் ஸாம வேதமாகிறேன், என்று கீதையில் கூறிய பகவான் அன்று அதற்கு அத்தாட்சி காட்டுவான் போல், ஸாம வேதத்திலிருந்து பிறந்து வளர்ந்த சங்கீதத்துக்கும், அதன் அங்கமான நாட்டியத் துக்கும் தனது திருவுள்ளத்தை பறிகொடுத்தான்'' தனது திருவாழியால் மிகப் பெரிய ராக்ஷஸர்களையெல்லாம் அழித்த அரிய வித்தகனான எம்பெருமான் அன்று திருவரங்கப் பெருமாளரையருக்கு ஆட்பட்டு தாம் சாத்தியிருந்த திருமுத்தின் தாழ்வடம், திருப்பரிவட்டம், சத்ரசாமராதி மற்றுமுண்டான வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருளினார்.

ஆனால் அரையரோ, அடியேனுக்கு இவையொன்றிலும் ஆசையில்லை. அடியேன் வேண்டுவதைத் தரவேண்டும் என்று விண்ணப்பம் செய்தார். பத்துடை அடியவர்க்கு

எளியவனான பகவான் ''உமக்கு வேண்டியதைக் கேளும் தருகிறோம்'' என்ன, அரையரும் ராமானுஜரைக் காட்டி 'இவரை அடியேனுக்கு தந்தருள வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்தார். பெருமாளும், ''அப்போதே அறியவில்லை யாம்! இவரைத் தவிர நீ வேண்டியதெல்லாம் தருகிறோம்! கேளீர்! என்றருளிச் செய்தார்.

அரையர், ''வரதராஜா! எம்பெருமானே! 'ராமோத்விர் நாபி பாஷதே' ராமன் இரண்டாவது வார்த்தை பேச மாட்டான். சத்தியமான ஒரே சொல்லைத்தான் சொல்லுவான். இப்படி யிருக்க தேவரீர் இரண்டு வார்த்தை அருளிச் செய்யலாமோ? என விண்ணப்பம் செய்ய பரம பக்தரான ஸ்ரீராமானுஜரைப் பிரிய மனமில்லாத பேரருளாளன், ''சரி! உமது இஷ்டப்படியே அழைத்துப்போம்'' என்று வரம் அருள திருவரங்கப் பெருமாள் அரையர் ராமானுஜரை அழைத்தார்.

வரதராஜனைப் பிரிய மனமில்லாத உடையவர் தமது திருவாராதன மூர்த்தியான பேரருளாளருடன் ஸ்ரீரங்கம் பயணப்பட்டார்.

**ஸ்ரீராமானுஜர் உடையவரானது :**

ஸ்ரீரங்கத்தை அணுகியதும், திருவரங்கப் பெருமாள ரையர், தொடங்கிய காரியம் நிறைவேறியதை ரங்கராஜனுக்கு தெரிவிக்க யதிராஜருக்கு முன்னே உகப்போடு ஸ்ரீரங்கத்தை அடைந்தார். யதிராஜருடைய வரவை ரங்கராஜனிடம் தெரிவித்தார். ரங்கராஜனும் மிகஉகந்து பெரிய நம்பியை நோக்கி ''கோயில் வெகுமதிகளோடும், பொற்குடை, சாமரம் முதலானவற்றோடும், ஆசார்ய ஸ்ரேஷ்டர்களோடும் சென்று யதிராஜரை விரைவில் அழைத்து வருவீர்'' என்றார்.

பெரியநம்பியும் எல்லா பரிவாரங்களோடும் ஸ்ரீராமா நுஜரை எதிர்கொண்டழைத்தார். ராமானுஜரும் பக்தியோடு தமது ஆசார்யரான பெரிய நம்பியை முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவர் திரளோடு கூடியவராய் திருவரங்கப் பெரியகோயிலை சென்றடைந்தார். அப்போது பக்தவத்ஸல

னாய், ரங்கநாதனாகிற நம்பெருமாள் யதிகட்கிறைவனின் முன் கருணையோடு எதிர் கொண்டழைக்க, அரங்கனைக் கண்டு வியப்புற்ற ராமானுஜர், ''ஹரே! விஷ்ணோ! ரங்கநாத! உமது அடிமையான என்னை தேவரீர் எதிர்கொண்டழைப்பது தக்கதல்லவே'' என்றார்.

**உபயவிபூதிச் செல்வமளித்தல் :**

யதிராஜரின் வார்த்தையைக் கேட்ட ரங்கராஜன், ''நீர் என்னைக் குறித்து (நெடுந்தூரம்) வந்தது போல, நாம் உம்மை குறித்து (நாலடி) நடந்து வந்தோம். யதிராஜரே! எமது எல்லாக் காரியங்களையும் உகப்போடு செய்து கொண்டு, எல்லா ஜனங்களையும் உமக்கு ஆட்பட்டவராக்கி அவர்களுக்கு ஸ்வாமியாய் இருந்து கொண்டு எனது ஆணையை நடத்துவீர். என்னுடைய இரண்டு விபூதிகளும் உமக்கு ஆதீனமாக என்னால் ஆக்கப்பட்டுள்ளது. என்னையே பரமப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்டவராய் என் உகப்பின் பொருட்டு இங்கேயே வாழ்வீர்'' - என்று அருளி **''விபூதித்வய நாயகர்''** (உடையவர்) என்னும் பெயரை யதிராஜருக்கு சூட்டினான்.

**ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹத்தை ஒழுங்கு படுத்துதல் :**

யதிராஜர், ஸ்ரீரங்கம் கோயிலில் வைகாநச முறைப்படி நம்பெருமாளுக்கு திருவாராதனம் நடந்து வந்ததை மாற்றி பாஞ்சராத்ர விதிப்படி நடக்கச் செய்தார். பாஞ்சராத்ரோக்தமான பாரமேச்வர ஸம்ஹிதையின்படி, த்வாதசாக்ஷர மந்திரத்தை 'ஓம் நமோ பகவதே வாஸுதேவாய' நிஷ்டையாகக் கொண்ட, பாஞ்சராத்ர ஆகமங்களில் வல்ல பரம பாகவதர்களைக் கொண்டு திருவாராதனம் நடைபெறச் செய்தார். ஆளவந்தார் அருளிச் செய்த ''ஆகமப்ரமாண்யம்'' என்ற க்ரந்தத்தை ப்ரசாரப்படுத்தி பாஞ்சராத்ர ஆகமத்தை உயர்ந்த ப்ரமாணமாக எல்லோரும் ஏற்றுக் கொள்ளும்படி நிலை நிறுத்தினார்.

யதிராஜர், ரங்கநாதனுக்கு தொண்டு செய்து கொண்டிருந்த ஐந்து கொத்து பணியாளர்களை பத்தாக பெருக்கினார். கொத்து என்ற சொல் பணியாளனின் மறுபெயராகவும், தொகுதியாகவும்

விளங்கும். யதிராஜர் அந்தணர் கொத்து பத்து என்றும் அந்தணர் அல்லா கொத்து பத்து என்றும் விரிவு படுத்தினார். திருவிழாக் களின் நடைமுறை சிறப்பு குறித்தே இவ்விதம் பிரித்து வைத்தார்.

**அந்தணர் கொத்து பத்து :**

1. திருப்பதியார் : மூலஸ்தான ஊழியத்திற்கு பொறுப்பு உடையவர்கள் திருவிளக்குகளை ஏற்றுதல் தூபம் இடுவது இவர்கள் பணிகளில் ஒன்று.

2. திருப்பணி செய்வார் : திருமஞ்சனத்திற்கு தண்ணீர் கொண்டு வருவார்கள்.

3. பாகவத நம்பிகள் : எம்பெருமான் கைங்கர்யத்திற்கும், மூன்றாம் பிராகாரத்தில் உள்ள சிறுசிறு சன்னதிகளில் உள்ள அர்ச்சாமூர்த்திகளை பூசிப்பதற்காக நியமனம்.

4. உள்ளூரார் : மூலவருக்கும், புற உலா வரும் உற்சவ மூர்த்திக்கும் கைங்கர்யம் செய்ய நியமிக்கப் பட்டவர்கள். ஸ்வாமியின் பட்டாடைகள், விசிறி, குடை, உர்வாள் முதலிய பலவற்றை பாதுகாப்பது, எடுத்து பயன்படுத்துவது இவர்கள் பொறுப்பு.

5. விண்ணப்பம் செய்வார் : வீணை வாசித்தல், வேதம் ஓதுதல், திவ்ய பிரபந்த பாராயணம் செய்வார்கள். இசையில் தேர்ச்சி பெற்றவர்களுக்கு கோயிலில் தனி மரியாதை உண்டு.

6. திருக்கரக்கையார் : காவிரி நதியிலிருந்து தீர்த்தங்களை யானை மீது வைத்து கோயிலுக்கு கொண்டு வருவார்கள். பாத்திரங்களில் நீர் நிரப்புதல் இவர்கள் பொறுப்பு.

7. ஸ்தானத்தார் (தலத்தார்) : அரங்கன் தொடர்புடைய எல்லாவற்றையும் கவனிப்பது, பல்லக்கு சுமத்தல், உடன் செல்லுதல் இவர்கள் கடமை.

8. பட்டர்கள் : கர்ப்பகிரகத்தில் வேத மந்திரங்கள் ஓதுதல், நித்யபடி பூஜை, இவர்கள் பொறுப்பு.

9. *ஆரியபட்டர்கள் : முக்கிய வேலை கோயிலையும், அர்ச்சா விக்ரஹங்களையும் கண்ணும் கருத்துமாக பாதுகாப்பது. பல்லக்கில் பின்புற தண்டுகளை சுமப்பர்.*

10. *தாசநம்பிகள் : எம்பெருமானுக்கு நந்தவனம் அமைத்தல், சிவிகையை பூமாலைகளால் அழகு படுத்துதல், ஒளி விளக்குகள் ஏற்றுதல் இவர்களோடு மேலும் **ஏகாங்கிகள்** என்னும் நான்கு உதவியாளர்களையும் சேர்த்தருளினார். சன்னதியின் வாசற்படி, திரைச்சிலையின் அருகில் இருந்து கர்ப்பகிரகத்தை பாதுகாக்க நியமிக்கப்பட்டனர். பூஜைக்குரிய நிவேதன பொருட்கள், நறுமணப் பொருட்கள் எல்லாவற்றையும் பாதுகாப்பதும் இவர்கள் கடமையாகும்.*

மேலும் ***சாத்தாத முதலிகள்*** எனப்படும் எட்டு வைணவர்களையும், துறவிகளையும் கூட நியமித்தார். கொடி பிடித்தல், பொன், வெள்ளி விளக்குகள் ஏற்றுதல், அர்ச்சகர்களுக்கு மெய்காவல் புரிதல் போன்ற பொறுப்புகள் கொடுக்கப்பட்டன.

**வேத்திரபாணிகள் :** எம்பெருமான் புறப்பாட்டின் போது ஒழுங்கும், அமைதியும் நிலவும்படி பார்த்துக் கொள்ளுதல், வேதபாராயணம் நிகழும் போது அமைதியை நிலைநாட்டுவர்.

**அந்தணர் அல்லாத பத்து கொத்து**

(1) தானியங்கள் அளப்பவர்,

(2) முதலிகள்

(3) தேவதாசிகள்

(4) சிற்பிகள், கம்பியர்கள், பொற்கொல்லர்கள்

(5) கன்னார்கள், உலோக வேலைக்காரர்கள்

(6) தையற்காரர், தச்சர், நெசவாளர்

(7) சலவையாளர்கள், ஈரங்கொல்லி என்றும் அழைப்பார்கள்.

(8) குயவர்கள்

(9) படகோட்டிகள்

(10) இசைவாணர்களும், நடன ஆசிரியர்களும்.

இப்படி இருபதுக்கும் மேற்பட்ட பிரிவினர் பெரிய குழுவாக அமைந்திருந்து இராமானுஜர் இட்ட ஆணைப்படி ரங்கநாதனுக்கு கைங்கர்யம் செய்து வந்தனர்.

*"ராமானுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்*
*ஸ்ரீ மந்நஸ்ரீரங்க ஸ்ரீயமநுபத்ரவாம் அநுதினம் ஸம்வர்த்தய!!"*

ஸ்ரீராமானுஜருடைய சிறந்த ஆணை மேன்மேலும் வளரட்டும். ஸ்ரீயபதியே! திருவரங்கச் செல்வத்தை இடையூறில்லாமல் தினந்தோறும் வளர்த்தருள்வாய் என்று ஸ்ரீ வைஷ்ணவ உலகம் முழுவதும் இன்று எல்லா கோயில் களிலும், வீடுகளிலும் தினந்தோறும் அநுசந்தித்து வருவது இதை வலியுறுத்தும்.

**திருவரங்கத் தமுதனாரை திருத்தி பணி கொள்ளுதல்**

திருவரங்கம் பெரியகோயில் நம்பி என்பவர் கோயில் புரோகிதராகவும், புராணம் படிப்பவராகவும் தொண்டு செய்து வந்தார். ஆனால் சிறிது கர்வமுடையவராக இருந்தார். யதிராஜர் கூரத்தாழ்வான் மூலம் இவரை நல்வழிப்படுத்தி ஆழ்வானின் சீடராக்கினார். பெரியகோயில் நம்பி ஆழ்வானுக்கு அடிமை தொழில் செய்வதை பேறாக கொண்டிருந்தார். ஆழ்வானுக்கு ஆசார்யரான எம்பெருமானார் மீது மாறாத காதல் கொண்டு அவரை போற்றி நூல் செய்ய எண்ணம் கொண்டார். இருமுறை நூல்களை செய்து யதிராஜரின் திருக்கண்ணோக்கிற்கு வைத்தார்.

யதிராஜர் அவைகளைப் புறக்கணித்து உமக்கு கவி செய்ய அவா உண்டானால் உமக்கு ஆசார்யனான ஆழ்வான், எமக்கு ஆசார்யரான ஆளவந்தார், ஆழ்வார்கள், எம்பெருமானுகந்தருளிய நிலங்கள் இவர்களின் ஏற்றம் தோற்ற ஒரு நூலை செய்யும் என்று பணித்தார்.

பெரிய கோயில் நம்பியும் அவ்வாறே செய்வதாகக் கூறி "இராமாநுச நூற்றந்தாதி" என்ற நூலைச் செய்து யதிராஜர், ஆழ்வான் முதலான முதலிகள் பெரிய திரளாக இருந்த போது அந்நூலை வெளியிட்டருளினார்.

இராமாநுச என்னும் திருநாமத்தை கொண்ட நூற்றி யெட்டு பாட்டுகளை உடையதாக இருப்பதால் "*ப்ரபந்த காயத்ரி*" என்றும் அழைக்கப்படுகிறது. இத்திவ்ய பிரபந்தத்தில் யதிராஜருடைய பெருமையை மிக அழகாக வெளிப்படுத்தி உள்ளார்.

யதிராஜரும் அந்த ப்ரபந்த காயத்ரியைக் கேட்டு மிக உகந்து ஏற்றுக் கொண்டார். பெரிய கோயில் நம்பியின் சொல் அமுதமாயிருந்தது பற்றி '**அமுதனார்**' என்றும் திருநாமமும் உவப்போடு சாற்றினார்.

**7. கோவிந்தர் திருந்தின செய்தி கேட்டு மகிழ்தல்**

*நயவேன் ஒரு தெய்வம் நானிலத்தே, சில மானிடத்தைப்*
*புயலேயெனக் கவிபோற்றி செய்யேன் பொன்னரங்க மென்னில்*
*மயலே பெருகுமிராமாநுசன் மன்னு மாமலர்த்தாள்*
*அயரேன் அருவினை என்னை எவ்வாறின்று அடர்ப்பதுவே?*
*(இராமானுசனின் திருவடிகளையே யான் போற்றுவேன்.)*

**திருமலை நம்பி - கோவிந்த ஸம்வாதம் :**

ஆளவந்தாரது திருஉள்ளக்கருத்து நிறைவேற தனக்கு உறுதுணையாக கோவிந்த பட்டர் வேண்டும் என்று நினைத்தார். அவரை திருத்தி பணிகொள்ள பெரிய திருமலை நம்பியே சரியானவர் என முடிவு செய்து ஒரு அனுகூல ஸ்ரீ வைஷ்ணவர்களை திருமலைக்கு அனுப்பினார். அவர்களும் நியமித்த காரியத்தை செய்து விட்டு இராமாநுஜரைக் காண்பதற்காக ஸ்ரீரங்கத்தை வந்தடைந்தார்கள். அவர்களைக் கண்ட இராமானுஜர் ஆனந்தத்தோடு பெரிய திருமலை நம்பி க்ஷேமமாயிருக்கிறாரா? கோவிந்தன் அவருடைய கிருபை யாலே நல்வழிப்பட்டவனாயிருக்கிறானா? என்று வினவினார். ஸ்ரீ வைஷ்ணவர்களும் கோவிந்தரைப் பற்றிய எல்லாச் செய்தி யையும் விரிவாகச் சொன்னார்கள்.

"இராமானுஜாசார்யரே! நாங்கள் திருவேங்கடம் சென்று பெரிய திருமலை நம்பியிடம் சொன்னோம். அவர் மகிழ்ந்து "எனது சகோதரி பிள்ளை கோவிந்தன் அறிவாளியாகவும்,

ஸாஸ்த்ர வல்லவனாகவும் இருப்பவனே. ஆயினும் யாதவ ப்ரகாசருடைய துணையோடு கங்காஸ்நாநம் செய்யச் சென்றான். அங்கு அவன் சைவனாகிவிட நேர்ந்தது. கோவிந்தனை திருத்துவதாகிய இக்காரியத்தை நான் முன்னமே செய்ய விரும்பியிருந்தேன். இராமானுஜரும் இதையே விரும்புவதால் அவஸ்யம் உடனே செய்ய வேண்டும் என்று சொல்லி சிஷ்யர்களோடு கூட எங்களையும் கூட்டிக் கொண்டு வேங்கடமலையிலிருந்து காளஹஸ்தியை அடைந்தார்.

அங்குள்ள சோலையொன்றிற்கு கோவிந்தர் சென்று வருவது அறிந்து அங்கு அவரைக் காண்பதற்காக சோலையின் குளக்கரையில் சிஷ்யர்களுக்கு கிரந்தங்களை உபதேசம் செய்து கொண்டு காத்திருந்தார். அப்போது சிவனுக்கு அபிஷேகம் செய்வதற்கு அக் குளத்திலிருந்து நீர் எடுப்பதற்காக, கோவிந்தர் குடத்தை எடுத்துக் கொண்டு அங்கு வந்தார். திருமலை நம்பி ''அந்தணரே! தலையில் கொன்றை என்னும் எரிக்கும் மலரைச் சூடியிருக்கும் சிவனுக்குக் குளிர்ந்த நீரால் அபிஷேகம் செய்யும் உனது பெரிய சிரமத்திற்கு என்ன பயன் உண்டாகும்? என்று கேட்டார்.

யதிராஜரே! கோவிந்தரும் அவ்வார்த்தையைக் கேட்டு, அவரை ஒரு கணம் நின்று பார்த்து, அப்பெரிய நம்பியிடம் ஒன்றும் சொல்லாமல் வியப்புற்றவராய்ச் சென்றார். அப்போது திருமலை நம்பியும் கோவிந்தரின் அச்செயலைப் பார்த்துவிட்டு, எங்களோடு திரு வேங்கடமலைக்குத் திரும்பி வந்து விட்டார்.

மேலும் சில நாட்கள் கழிந்தபின், எங்களோடு கூட காளஹஸ்திக்குச் சென்று அக்குளக்கரையில் உள்ள ஆலமரத்தின் நிழலில் முன் போலே கோவிந்தரைக் காண்பதற்காகத் தங்கி யிருந்தார். நீர் எடுத்துச் செல்லக் குடத்தை எடுத்துக் கொண்டு கோவிந்தரும் அங்கு வந்தார்.

**திருமலைநம்பியின் சாதுர்ய விளக்கம் :**

யதிராஜரே! திருமலைநம்பியும், அவரது மனத்தைப் பரீக்ஷிப்பதற்காக, யோசனை செய்து, ஓர் ஏட்டில் (பகவத்

பரத்வத்தைச் சொல்லும்) சில பாசுரங்களையும், தமது ஆசார்யர் ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ராத்னத்தில் உள்ள "ஸ்வாபாவிக" என்று தொடங்கும் ஸ்லோகத்தையும் எழுதி, கோவிந்தர் வரும் வழியில் போட்டு, மௌனமாயிருந்தார்.

கோவிந்தரும் கீழே போடப்பட்ட அந்த ஏட்டை எடுத்து உடனே படித்து, "இது யாரால் இங்கு போடப்பட்டது" என்று கூறி அதைக் கீழே போட்டு, குடத்தில் குளத்தின் நீரை எடுத்துக் கொண்டு சிவாலயம் செல்ல விரும்பியவர். திரும்பி வரும் போது நீர்க் குடத்தைக் கையில் கொண்டவராகவே அந்த ஏட்டை மறுபடியும் எடுத்து ஆராய்ந்து, எங்களைப் பார்த்து "தங்கள் கையிலிருந்து நழுவிய பொருள்கள் இவைதானே" என்று காட்டினார். அதைக் கேட்ட திருமலைநம்பி "மற்றவர்களுடைய பொருள்கள் நழுவுமேயொழிய எங்களுடைய பொருள்கள் ஒருபோதும் நழுவமாட்டா" என்று கோவிந்தருக்கு பதில் கூறினார்.

அதைக்கேட்ட கோவிந்தர் "பேரறிவாளரே! சாதுர்யமான பேச்சுக்கள் போதும். மோக்ஷமடைய வேறு பல மார்க்கங்கள் உள்ளன. அவற்றை விட்டு வைஷ்ணவர்கள் (வைஷ்ணவமாகிற) ஒரு வழியிலேயே எப்போதும் ஏன் நிற்கின்றனர்?" என்று வினவ அப்போது திருமலைநம்பி "இவ்வழி கலக்கமில்லாமல் எளிதில் (மோக்ஷத்தை) அடைவிக்குமாகையால் இவ்வொரு வழியி லேயே நாங்கள் நிற்கிறோம்" என்று பதில் கூறினார். அதைக் கேட்ட கோவிந்தர் "நீங்கள் உறவினர்களைவிட வந்தீர்களா?" என்று கேட்டார். அதைக் கேட்ட திருமலைநம்பி "கோவிந்தரே! நாங்கள் கறவைப் பசுக்களை வாங்க வந்தோம்" என்று பதில் கூறினார்.

அதைக்கேட்ட கோவிந்தர் "நல்ல அநுஷ்டானமுடையவர்களுக்குப் பசுவின் அடிப்பொடி பவித்திரமன்றோ: (அதனால் தான் பசுவை வாங்க வந்தீர்களா?)" என்று பதிலுரைத்தார். அதைக்கேட்ட திருமலைநம்பி "சரியான இடத்திலிருந்து கிடைத்தால், பசு பாவனமாகத்தான் இருக்கும்" என்று பதில் உரைத்தார். திருமலைநம்பியின் இவ்வார்த்தையைக் கேட்ட

கோவிந்தர் 'குறுக்குக்கும் நெடுக்குக்கும் வேறுபாடு என்ன?' என்று கேட்டார்.

இதைக் கேட்ட திருமலைநம்பி, "குற்றமற்றவரே! நேர்வழியிருக்கும்போது குறுக்கு (கோணல்) வழியில் போவதே வேறுபாடு" என்று பதில் கூறினார். இதை ஒப்புக்கொண்ட கோவிந்தர் "வாயடைக்கும் இச் சொற்கள் (நீர் கண்டுபிடித்த) புது வார்த்தைகளோ?" என்று கேட்டார். அதைக்கேட்ட திருமலைநம்பி "கோவிந்தரே! பழைய நல்வாக்கியங்களும் இவ்வியல்வையே உடையவை என்று அறிவீர்" என்று கோவிந்தர்க்கு பதிலுரைத்தார்.

அதைக்கேட்ட கோவிந்தர் "ஸ்ரீ வைஷ்ணவோத்தமரே! இந்தக் குறுக்கு நெடுக்கு விஷயத்தில் அதிகமான பூர்வவிசாரம் (முன்னோர்களின் ஆராய்ச்சி) உள்ளதோ?" என்று கேட்டார். அதற்கு திருமலைநம்பி "அறிவாளிகளில் சிறந்தவரே! பரவஸ்து எது என்பதில் பூர்வவிசாரம் ஏராளமாக உண்டு" என்று பதில் கூறினார். யதிராஜரே! திருமலை நம்பியின் யுக்தியோடு கூடிய இவ்வாக்யங்களைக் கேட்டு, கோவிந்தர் பதில் பேசாமல் புறப்பட்டார்.

கோவிந்தாசார்யரின் முகக்குறியைக் கண்ட திருமலை நம்பியும் "நெஞ்சம் தெளிவடைந்தது" என்கிற ப்ரமாணத்தில் சொன்னதை நினைத்துக்கொண்டு , 'இவர் இனி நம்வசப்படக் கூடியவரே' என்று உறுதிகொண்டு மிக உகந்தவராய், சீடர் களோடு மறுபடியும் திருவேங்கடமலைக்குப் புறப்பட்டார்.

**நம்பி - கோவிந்தரின் உரையாடலின் கருத்து :**

விசிஷ்டாத்வைத தரிசனத்தில் நிரூபிக்கப்பட்ட அர்த்தங் களில் ஒன்றும் எதிர்வாதங்களினால் தோற்று நழுவியதில்லை. பிறருடைய வாதங்களே பங்கமடைந்து நழுவியுள்ளன. தரிசனமார்க்கம் கலக்கமற்று செம்மையாக ராஜபாதை போன்று உள்ளதால் எல்லோருமாக இவ்வழியில் பொருந்தியுள்ளோம். மற்ற மார்க்கங்களில் கலங்குவாரும் உண்டு, கலக்குவாரும் உண்டு. உயர்ந்த பொருளான எம்பெருமானுடைய திரு

வருளைப் பெற்றவர்கள் செல்வதற்கான ஏற்றமுடைய வழியே நாங்கள் பற்றியுள்ள பெருவழி. அவ்வழியைப் பற்றியவர்கள் தரிக்கத்தக்கது செவ்வையான ஊர்த்வ புண்ட்ரமேயாகும். பரத்வ விசாரம் செய்து அர்த்த நிர்ணயம் செய்து நாராயணனே பரம்பொருள் என்று அறுதியிட்ட மறுகணமே தரிக்கத் தக்கது ஊர்த்வ புண்ட்ரம் ஆகும்.

யதிராஜரே! மூன்றாவது முறை முயன்றபோது காரியம் நிறைவேறியதைக் கூறுகிறோம். கேட்பீர். திருமலைநம்பி, மறுபடியும் எங்களோடு கூட காளஹஸ்திக்கு அருகில் சென்று, அங்கு உள்ள தோட்டத்தில் வீற்றிருந்து, சிஷ்யர்களுக்குத் திருவாய்மொழி வ்யாக்யானம் சொல்லி கொண்டிருந்தார்.

பூப்பறிப்பதற்காக கோவிந்தர் அங்கு வந்து, பாதிரி மரத்தின் மேல் ஏறி, பூப்பறித்துக் கொண்டிருந்தார். நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியின் இரண்டாம் பத்திலே, ''திண்ணன் வீடு'' என்னும் இரண்டாம் திருவாய் மொழியில் முதல் மூன்று பாசுரங்களின் வியாக்கியானம் முடியும் வரையில் பூக்களைப் பறித்துக் கொண்டே அதைக் கேட்டுக் கொண்டு மௌனமாயிருந்தார்.

''தேவும் எப்பொருளும் படைக்கப் பூவில் நான்முகனைப் படைத்த தேவன் எம்பெருமானுக் கல்லால் பூவும் பூசனையும் தகுமோ' என்னும் மூன்றாவது பாசுரத்துக்கு ''தன் திருநாபீ கமலத்தில், படைக்கும் கடவுளான நான்முகனையே படைத்த வனாய், கல்யாண குணக்கடலான அந்த நாராயணனாகிற தேவனுக்கல்லாது, நல்ல பூஜையும், பூவும் வேறொரு தெய்வத் திற்குத் தகுமோ?'' என்று நம்பி பொருள் உரைப்பதைக் கேட்ட கோவிந்தர், ''நாராயணனுக்குத்தான் பூவும் பூசனையும் தகும்; வேறெவர்க்கும் நிச்சயமாகத் தகாது'' என்று கூறினார்.

அக்கேள்வியையே கோவிந்தர் நம்பியை மூன்று முறை கேட்டார். நம்பியும் ''எம்பெருமானுக்கல்லால் வேறு எவர்க்கும் பூவிட்டு அர்ச்சிப்பது தகாது'' என்று மூன்று முறையும் பதில் சொன்னார். அதைக் கேட்டு, ஐயம் நீங்கப் பெற்றவரான கோவிந்தர், மரத்தடியிலிருந்தபடியே, 'தகாது,

தகாது, தகாது' என்று மூன்று முறை பெருங்குரலோடு முழங்கினார்.

கோவிந்தரும் திருமலைநம்பியின் திருவடிகளில் விழுந்தார். ''அடியேன் அறிவற்றவன்; பரந்த துன்பக் கடலில் விழுந்து விட்டேன். கருணைக் கடலே! என்னைக் கைதூக்கி யெடுத்துக் காத்தருள்வீர்'' என்று கதறினார். நம்பியும் அவரை இரு கைகளாலும் முடிபிடித்து எடுத்து, உடம்பையும் தடவி, பலவிதமான ஆறுதல் மொழிகளைச் சொல்லி அவரோடு ஆனந்தமாகப் பேசினார்.

யதிராஜரே! இதற்கிடையில் காளஹஸ்தியில் வாழும் சிவாலய நிர்வாஹிகள், கோவிந்தர் கைமாறிப்போன செய்தியை அறிந்து, உடனே அவர் இருக்குமிடம் வந்து கோவிந்தரைச் சூழ்ந்து கொண்டு ''சிவபக்தர்கள் தலைவரான கோவிந்தரே! பூஜா காலம் கடந்து செல்கிறதே! காளஹஸ் தீஸ்வரர் இன்று உமது பூஜையை எதிர்பார்த்து நிற்கிறார். ஐயா! இப்படியிருக்கும்போது நீர் இங்கிருந்து கொண்டு ஏன் எங்களுடன் பேசாமலிருக்கிறீர்?'' என்று சொல்லி, அவருடைய கையைப் பிடித்துக் கொண்டு ''போவோம் வாரீர்!'' என்று கூறினார்கள்.

ஐயம் நீங்கப் பெற்ற கோவிந்தரோ அவர்களைப் பார்த்து, சிவத்விஜர்களே! நீங்கள் என் கையைப் பிடிப்பது தகாது. எமக்கும் உமக்கும் இனி எத்தொடர்பும் இல்லை. முன்பு நீங்களே நாமாயிருந்தோம்; நாமே நீங்களாயிருந்தீர்கள். இப்போதோ (எனக்கு ஏற்பட்ட) விஷ்ணு ஸம்பந்தத்தால் நீங்கள் வேறாகவும், நாம் வேறாகவும் ஆகிவிட்டோம்'' என்று கூறிய கோவிந்தர், (காயஹஸ்திக் கோவிலை சேர்ந்த) இலச்சினை மோதிரம் முதலிய அனைத்தையும் அவர்களிடம் கொடுத்து, விடைபெற்றார்.

### கோவிந்த ஸமாச்ரயணம்

யதிராஜரே! அப்போதே கோவிந்தரை அழைத்துக் கொண்டு, திருவேங்கட மலைக்குச் சென்று, பஞ்சஸம்ஸ்காரங்

களையும் செய்வித்தார். பெரியாழ்வார் முதலான ஆழ்வார்கள் அருளிச் செய்த திருப்பல்லாண்டு முதலான த்ராவிட வேதமான நாலாயிர திவ்யப்ரபந்தங்களையும் கோவிந்தருக்குக் கற்பித்து (1) ப்ராப்யமான (அடையப்படும்) ப்ரஹ்மஸ்வரூபம் (2) ப்ராப்தாவான (அடைபவனான) ஜீவாத்மாஸ்வரூபம் (3) அடைவதற்கு உபாயம் (4) அடைந்து பெரும் பலன். (5) அடைவதற்கு விரோதி என்னும் ஐந்து வகைப்பட்ட அர்த்த பஞ்சகத்தையும் (திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்னும்) ரஹஸ்ய மந்த்ரங்கள் மூன்றின் பொருளையும் அவருக்கு முழுவதும் உபதேசித்தார்.

**கோவிந்தரின் ஆசார்ய நிஷ்டை**

யதிராஜரே! திருந்திய மனத்தினரான கோவிந்தரும், எல்லா அர்த்தங்களையும் உணரப்பெற்றவராய், ''நீர் விழித் திருக்கும்போதும், தூங்கும் போதும், அடியேன் எல்லா அடிமைகளையும் செய்வேன்'' என்று ராமபிரானுக்கு லஷ்மணன் அடிமை செய்தது போலே, அடக்கம் மிகுந்தவராய்த் திருமலை நம்பிக்கு எல்லா அடிமைகளையும் செய்வதையே கடமையாகக் கொண்டவராய், அவரை எப்போதும் விட்டுப் பிரியாதவராய்க் கைங்கர்யம் செய்து வருகிறார் - என்று ஸ்ரீவைஷ்ணவர்கள், கோவிந்தர் திருத்தப் பெற்ற செய்தியைக் கூறியதை கேட்ட யதிராஜர் மிக உகந்தார்.

**8. திருக்கோட்டியூர் எழுந்தருளல்**

*வண்மையினாலும் தன் மாதகவாலும் - மதிபுரையும்*
*தண்மையினாலும் இத்தாரணியோர்கட்கு - தான் சரணாய்*
*உண்மை நல் ஞானமுரைத்த இராமானுசனையுன்னும்*
*திண்மையல்லா லெனக்கில்லை, மற்றோர் நிலை தேர்ந்திடிலே.*
*(இராமானுசனை நினைப்பதே எனக்கு நிலை.)*

**பெரிய நம்பி த்வயாதிகளை உபதேசித்தல்**

ஸ்ரீராமானுஜர் பெரிய நம்பியின் திருமாளிகைக்கு எழுந்தருளி, அவரது திருவடிகளில் வணங்கி உம்மிடமிருக்கும் விசேஷார்த்தங்களை எனக்கு அருளிச் செய்ய வேண்டும்.'' என்று கூறினார். இராமானுஜருடைய இவ்வார்த்தையைக் கேட்ட

பெரிய நம்பி, "த்வயத்தின் பெருமையையும், வீர்யத்தையும், பலத்தையும் என்னென்று சொல்லுவேன்! மந்திரங்களுள் மாணிக்கமாய், வேதஸாரமாய், செல்வங்களையெல்லாம் அளிப்பதாய், உலகையே வசப்படுத்துவதாய், ஸம்ஸாரத்தை உடனே தாண்டுவிப்பதாயிருப்பது த்வயமந்திரம்.

எந்த மனிதனும் த்வயோச்சாரணமாத்ரத்தாலே விசேஷமாகப் பூஜிக்கத்தக்கவனாகிறான். மனம், மொழி, மெய் என்னும் முக்கரணங்களால் செய்யப்பட்ட பாபங்களும், த்வயத்தை நினைத்த மாத்திரத்தில் அழிகின்றனவென்பது மிகவுறுதி. ஸ்த்ரீயானாலும், புருஷனானாலும் ஆசார்யனை வணங்கி த்வயத்தை உச்சரிப்பதால் விஷ்ணுவின் பரம பதத்தையே அடைகிறார்கள்.

அந்தணர் தலைவரே! ஸம்ஸாரக் கடலில் மூழ்கினவர்களுக்கு உடனே ஸம்ஸாரத்தைத் தாண்டச் செய்வது த்வயம் ஒன்றேயாகும். உலகில் இதற்கு இணையானது இல்லை." என்று த்வயத்தின் பெருமையைச் சொல்லி, யதிராஜருக்குக் கருணையோடு த்வயத்தின் பொருளை உபதேசித்து, (நாத முனிகள் அருளிய) ந்யாயத்வம் என்னும் மஹாசாஸ்த்ரத்தையும், (ஆளவந்தார் அருளிய) புருஷநிர்ணயம் என்னும் சாஸ்த்ரத்தையும், கீதார்த்தஸங்க்ரஹம் என்னும் நூலையும், ஸித்தித்ரயத்தையும், வ்யாஸர் அருளிய ப்ரஹ்ம ஸூத்ரங்கள் அனைத்தையும், பாஞ்சராத்ராகமத்தையும் உபதேசித்தார்.

## திருக்கோட்டியூர் நம்பியிடம் அனுப்புதல்

ஸ்ரீராமானுஜரை ஆசார்யர்களில் சிறந்த உத்தாரகாசார்யராக எண்ணி, பெரிய நம்பி அப்போதே தமது புத்திரரான புண்டரீகாக்ஷர் என்பவரை யதிராஜருக்கு சிஷ்யராக்கி, "யதிராஜரே! திருக்கோட்டியூரில், திருக்கோட்டியூர் நம்பி என்று புகழ்பெற்றவராய், எல்லா சாஸ்திரங்களின் உண்மைப் பொருளையும் அறிந்தவராய் வாழ்கிறார். யாமுநாச்சார்யரால் அவரிடம் ரஹஸ்யார்த்தங்கள் சில சேமித்து வைக்கப்பட்டிருக்கின்றன. அங்கு சென்று அந்த மஹா புருஷரிடமிருந்து அவற்றை நன்கு கேட்பீராக" என்று கூறினார்.

*பெரிய நம்பியின் வார்த்தையைக் கேட்டு யதிராஜர், திருக்கோட்டியூர் சென்று, திருக்கோட்டியூர் நம்பியின் திருவடித் தாமரைகளில் வணங்கி, ''கருணாநிதியே! திரு மந்திரத்தின் பொருளை அடியேனுக்கு இப்போதே அளித்து ரஷிக்க வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். திருக்கோட்டியூர் நம்பியும் திருவுள்ளம் மகிழ்ந்து அவர் விரும்பியபடியே உபதேசித்தருளினார். பின்னும் யதிராஜர் தயங்கி நிற்பதைக் கண்டு, வினவ, யதிராஜரும் சரமஸ்லோகார்த்தத்தை கேட்க விருப்பம் என பதிலளித்தார்.*

*யதிராஜருடைய அவ்வார்த்தையைக் கேட்ட நம்பி, மஹாத்மாவான அவருடைய உறுதியின் மிகுதியை அறிய விரும்பியும், சரமஸ்லோகார்த்தத்தின் பெருமையை காட்ட எண்ணியும் யதிராஜரிடம் ''யதிராஜரே! இம் மந்திரத்தின் இவ்வரும் பொருளை அறிய இவ்வுலகில் இப்போது அதிகாரி எவனுமில்லை. அப்படியிருக்கும்போது உமக்கு எப்படி உடனே சொல்லுவேன்?'' என்று கூறி, அவருக்கு முகங் கொடுக்காமலிருந்தார். நம்பியின் வார்த்தையைக் கேட்டு, அவரையும் பார்த்து, யதிராஜர் உடனே ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளிவிட்டார்.*

*மறுபடி, ராமானுஜர் திருக்கோஷ்டியூர் சென்று நம்பியை வணங்கினார். நம்பி ஒரு வார்த்தை ஓதி, ''இன்று இவ்வளவுதான்; மீண்டு வருவீர்'' என்று அனுப்பி விட்டார். ராமானுஜர் ஸ்ரீரங்கம் மீண்டார். இதுமாதிரி பதினெட்டு நடை திருக்கோஷ்டியூர் சென்றார்; ராமானுஜர். ஒவ்வொரு நடையிலும் நம்பி புதியதாக ஒரு ''வார்த்தை'' ஓதினார். இவ்வாக்கியங்கள் வேதாந்தக் கருத்துக்கள் வாய்ந்தன; ஆதலின் சிறப்புடையன; இந்தப் பதினெட்டு வார்த்தைகள் வருமாறு :*

1. *மண்ணில் பிறக்கும் புழு மண்ணை விட்டு நீங்க வேண்டும். (மண்ணில், வாழ்க்கையின் ஆசை நீங்க வேண்டும்).*

2. *விளக்கு எரிவதற்குக் காற்று அவசியம்; அதுபோல் நாம் உய்வதற்கு (மேலே எழுவதற்கு) ஸத்வகுணம் அவசியம்.*

3. அகங்கார மமகாரங்கள் நீங்காமல் நமக்கு உடலின்பால் ஆசை நீங்காது.

4. அகங்கார மமகாரங்கள் நீங்குவதற்கான வலிமை இல்லாவிடில் ஆத்மஞானம் இல்லை.

5. ஆத்மஞானம் இல்லை எனில், போக (ஸுகமாக வாழ வேண்டும்) இச்சை நீங்காது.

6. இந்த இச்சை நீங்காமல் இறைவனிடம் அன்பு ஏற்றல் இல்லை.

7. இறைவனிடம் அன்பு நமக்கு இல்லை எனில், பற்று நீங்குதல் இல்லை.

8. பற்று நீங்குதல் இல்லை எனில், நாம் இறைவற்காக வாழ்வது இல்லை.

9. இறைவற்காக வாழ்வது இல்லை எனில், காமம் நீங்காது.

10. காமம் நீங்காதெனில் வைஷ்ணவத்வம் இல்லை.

11. இது இல்லை எனில், ஸாத்விகம் உறுதல் இல்லை.

12. இது இல்லை எனில், அடியவர் தாள்களில் அன்பு இல்லை.

13. இது இல்லை எனில், இறைவன் தாள்களில் அன்பு இல்லை.

14. இது இல்லை எனில், இறைவனுக்குத் தொண்டு விரும்பி ஏற்றல் இல்லை.

15. இதனை ஏலாதவன் இறைவனை சேஷியாக ஏற்க மாட்டான்.

16. இதனை ஏலாதவன் இறைவனே சரணமென்று ஏற்க மாட்டான்.

17. இதனை ஏலாதவன் இறைவனுக்கே உரியனாக மாட்டான்.

18. இறைவனுக்கே உரியவன்தான் அவனுடைய மந்த்ர மாகிய திருவெட்டெழுத்தை ஏற்றற்கு உரியவன்.

திருக்கோஷ்டியூர் நம்பியிடம் உபதேசம் பெறவில்லையே என்று கலங்கி உடையவர் ஸ்ரீரங்கத்திற்கு மீண்டும் திரும்பி வந்தார்.

அதற்குப் பின், ஒரு நாள் ஸ்ரீராமானுஜரின் ஆர்த்தியைக் கண்டு மகிழ்ந்த நம்பி யதிராஜருக்கு சரமஸ்லோகார்த்தத்தை உபதேசிக்கத் திருவுள்ளங் கொண்டார். யதிராஜரிடம் தனது சிஷ்யர் ஒருவரை தூதனுப்பினார். அந்த சிஷ்யரும் ஸ்ரீரங்கத்தை அடைந்து, ''யதிராஜரே! திருக்கோட்டியூர் நம்பி இப்போது உமக்குத் சரமஸ்லோகார்த்தத்தை அருளவிருக்கிறார். தண்ட பவித்ரங்களோடு கூடியவராய், நீர் அங்கு வரவேண்டும் என்றார்.

## சரமஸ்லோகார்த்த உபதேசம் பெற்றது

ஸ்ரீமானான ஸ்ரீராமானுஜரும் அவருடைய அவ்வாக் யத்தைக் கேட்டு மிக உகந்தவராய் முதலியாண்டானையும், ஆழ்வானையும் அழைத்துக் கொண்டு சென்றார். மூவரும்



திருக்கோட்டியூர் விமானம்

நம்பியை வணங்கி நின்றனர். நம்பி உடையவரைப் பார்த்து, "நாம் உம்மை தனித்து வரவேண்டுமென்றோ பணித்தது. தண்டும் பவித்ரமுமாய் வருவீர் என்றேனே!" என்றார் உடையவர் ஸ்வாமீ! இவர்களுள் ஒருவர் (முதலியாண்டானைக் காட்டி) எனக்கு தண்டு போன்றவர். மற்றவர் (ஆழ்வானைக் காட்டி) பவித்ரம் போன்றவர். இவர்களை விட்டு அடியேன் பிரிவதில்லை" என்றார். "ஆகில் நீர் ஒரு மாதம் உபவாசம் இருக்க வேண்டும். அன்னபான மில்லாமல் - பின்பு உபதேசம் செய்கிறோம்" என்றார் நம்பி.

பதினைந்து நாட்களில் உடையவரின் மேனி மெலிந்தது. இது கண்டு சிலர் நம்பிகளிடம் சென்று "அறக்கற்றவரே! உமக்கு இந்த கொடிய நெஞ்சம் எதற்கு? உம்மால் ஒரு துறவி உயிர் நீங்குவதோ என்று பயப்படுகிறோம் என்றனர். நம்பியோ சிறிதும் இரக்கம் காட்டாமல்; இவர் தம்மிடம் இப்பொருள் களை ஏற்றால் ஏற்கட்டும் அன்றி நம் ஆசார்யரான ஆளவந்தாரிடமே ஏற்கட்டுமே, இனி அவர் தீர்த்தம் மாத்திரம் பருகலாம். உபவாசம் முடிந்தபின் நம்மிடம் வரட்டும்" என்றார்.

குறித்த காலத்தில் உடையவர் தமது சிஷ்யர்களுடன் நம்பியிடம் சென்றார். நம்பியும் உடையவரிடம், மந்திரத்தை இவர்களைத் தவிர மற்றொருவர்க்கு சொல்லக் கூடாது என்று கூறி உபதேஸித்தருளினார்.

**சரமஸ்லோகார்த்தத்தை வாரி வழங்கியது**

சரமஸ்லோகார்த்தத்தை பெற்றுப் பிறவிப் பயனை அடைந்த யதிகட்கிறைவரும், நம்பியை வணங்கி, அவரது அனுமதியைப் பெற்றுப் புறப்பட்டார். அப்போது அந்தத் திருக் கோட்டியூரில் நரசிங்கப்பெருமாளுடைய மஹோத்ஸவத்தைக் காண விரும்பி நாற்றிசைகளிலிருந்தும் வந்திருந்த அனைவரும் திருமந்த்ரார்த்தப் பெருமையை உணர வேணுமென்று ஆசை கொண்டு பிரார்த்திக்க, உகந்த கருணைநிதியான ஸ்ரீ

இராமாநுஜர், அந்தப் பெருமாளுடைய ஸந்நிதி கோபுரத்திலிருந்து சரமஸ்லோகார்த்தத்தை நன்கு உபதேசித்தார்.

## 'எம்பெருமானார்' என்னும் பட்டம் பெற்றது

அங்குள்ள தமது சிஷ்யர்கள் மூலம் இதைக் கேள்விப் பட்ட திருக்கோட்டியூர் நம்பி அப்போதே யதிராஜரை வரவழைத்து, ''யதிராஜரே! இந்த மந்திரம் மிகவும் ரஹஸ்ய மானது; வேறு எவர்க்கும் சொல்லாதே' என்று கட்டளை யிட்டு உமக்கு நான் இம்மந்திரத்தை உபதேசித்தேன். அந்தக் கட்டளையை மீறி விட்டீர். உமது இந்த ஆசார்யத் துரோகச் செயலுக்கு என்ன பலன் கிடைக்கும் தெரியுமா?'' என்று வினவினார். அவருடைய இவ்வார்த்தையைக் கேட்ட யதிராஜர், 'இந்த ஆசார்யத் துரோகச் செயலுக்குப் பலன் நரகமேயன்றோ' என்று பதிலுரைத்தார். இதைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, 'இதை அறிந்திருந்தும் நீர் ஏன் இப்பாபச் செயலைச் செய்தீர்?' என்று கேட்டார். யதிராஜர் இதைக் கேட்டு,

''யதிஷ்யே ஏக ஏவாஹம் நரகே குரு பாதகாத்
ஸர்வே கச்சந்து பவதாம் க்ருபயா பரமம்பதம்''

''இந்த ஆசார்ய அபசாரத்தாலே அடியேன் ஒருவனே நரகத்தில் வீழ்வேன்; இம்மந்திரத்தைக் கேட்ட அனைவரும் தேவரீருடைய கருணையாலே பரமபதத்தை அடைவார்களாக'' என்று திருக்கோட்டியூர் நம்பிக்கு பதில் உரைத்தார். யதிராஜருடைய அத்யாச்சர்யமான வார்த்தையைக் கேட்டு இராமானுஜரை சம்சாரி ஜீவர்களில் சேராத நித்யஸூரிகளில் ஒருவராகவும், ஜகதாசார்யராகவும், உலகை உய்விப்பதற்காக ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து இங்கு அவதரித்திருப்பவராகவும் அப்போதே எண்ணி, ''யதிராஜரே! தனக்கு மிக வெறுக்கத்தக்க பலனையும் ஏற்று, பிறர்க்கு மிகச் சிறந்த பலனை விரும்புகிறவன் இவ்வுலகில் (உம்மைத் தவிர) வேறு எவனிருக்கிறார்? ஆகையால் நீரே நமக்கு இக் காலத்தில்

ஸ்ரீரங்கநாதனாகிற எம்பெருமானாயிருக்கிறீர்'' என்று கூறி, திருக்கோட்டியூர் நம்பி, யதிராஜரைப் பேரானந்தத்துடன் **'எம்பெருமானரே'** என்று பெயரிட்டு அழைத்து ஆரத் தழுவினார்.

அங்குள்ள ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பார்த்து நம்பி, ''வைஷ்ணவர்களே! இந்த வைஷ்ணவ சித்தாந்தத்தை இன்று முதல் ஸ்ரீ இராமானுஜ சித்தாந்தம் (அல்லது எம்பெருமானார் தர்சனம்) என்றே நாம் எங்கும் வழங்குவோம். இன்று முதல் இவ்வுலகில் மிகச்சிறந்த வைஷ்ணவமதமான இது ஸ்ரீ இராமானுஜ சித்தாந்தம் என்றே பெயர் பெற்று விளங்கும் என்பது உறுதி என்றார்.

தனது பிள்ளையான ஸௌம்யநாராயணனை அழைத்து அவரை யதிராஜர்க்கு சிஷ்யராக்கி, ''யதிராஜரே! தமது குமாரரான திருவரங்கப் பெருமாளரையரிடம் பேரறிவாளரான ஆளவந்தார் சேமித்து வைத்திருக்கும் ரஹஸ்யார்த்தங்களை அவரிடமிருந்து உபதேசம் பெறுவீர்'' என்று கூறி எம் பெருமானாரை திருவரங்கத்துக்கு அனுப்பி வைத்தார்.

*''ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர்*
*ஏராரெதிராச ரின்னருளால் - பாருலகில்*
*ஆசையுடையோர்க் கெல்லாம் ஆரியர்கள் கூறுமென்று*
*பேசிவரம்பறுத்தார் பின்''*

*''எம்பெருமானார் தரிசனமென்றேயிதற்கு*
*நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார் - அம்புவியோர்*
*இந்த தரிசனத்தை யெம்பெருமானார் வளர்த்த*
*அந்தச் செயலறிக்கைக்கா''*

(உபதேசரத்தினமாலை - 37, 38)

**9. சரமச்லோகார்த்த உபதேசம்**

*ஓதிய வேதத்தினுட் பொருளாய் அதனுச்சிமிக்க*
*சோதியை நாதனெனவறியாது உழல்கின்ற தொண்டர்*

*பேதைமை தீர்த்த இராமாநுசனைத் தொழும் பெரியோர்*
*பாதமல்லால் என்தனாருயிர்க்கு யாதொன்றும் பற்றில்லையே.*
*(இராமானுசன் அடியாரின் திருவடிகளே எனக்கு பற்று.)*

## கூரத்தாழ்வானுக்குச் சரமச்லோகார்த்தோபதேசம்

ஜ்ஞாநபக்திவைராக்யச் செல்வம் மிக்கவரான கூரத் தாழ்வான், யதிராஜரின் திருவடித்தாமரையிணையை வணங்கி, ''கருணைக்கடலே! அடியேற்குச் சரமச் லோகார்த்தத்தை உபதேசித்தருள வேண்டும்'' என்று பிரார்த்தித்தார். அதைக் கேட்ட யதிராஜர் ''திருக்கோட்டியூர் நம்பி தம்மிடம் 'எந்த சிஷ்யன் மிகுந்த பக்தியுடனும், ச்ரத்தையுடனும் ஒரு வருடத்திற்குக் கைங்கர்யம் செய்கிறானோ, புலனடக்கமும், மனவடக்கமுமுடைய அவனுக்கே, இச்சரம ச்லோகம் அர்த்தத் தோடு உம்மால் உபதேசிக்கத் தக்கது' என்று கூறியுள்ளார், என்று பதில் உரைத்தார்.

ஆசார்யருடைய அவ்வார்த்தையைக் கேட்ட கூரத் தாழ்வான் 'இவ்வுடல் (மின்னலைக் காட்டிலும்) நிலையற்றது என்று அறியும் அடியேன் ஒரு வருஷ காலம் எப்படிப் பொறுப்பேன்' என்று விண்ணப்பித்தார். அதற்கு, யதிராஜர், ''ஆசார்யனுடைய திருமாளிகையில் சீடன் ஒரு மாதம் உபவாஸமிருந்தானாகில், அது ஒரு வருடம் கைங்கர்யம் செய்ததற்கு ஸமானம் என்று சாஸ்திரங்களில் சொல்லப் பட்டிருக்கிறது'' என்று பதிலுரைத்தார். அவ்வார்த்தையை ஏற்று, ஒரு மாதம் (யதிராஜரின் மடத்திலேயே) உபவாஸ மிருந்து, அவரிடமிருந்து சரமச்லோகத்தையும் அதன் உண்மைப் பொருளையும் ஆழ்வான் உபதேசம் பெற்றார்.

## முதலியாண்டானும் திருக்கோட்டியூர் நம்பியும்

அதற்குப் பின், முதலியாண்டான் யதிராஜரை வணங்கி, 'அடியேனுக்கும் சரமச்லோகார்த்தத்தை அருள வேணும்' என்று பிரார்த்தித்தார். எம்பெருமானார், இச்சரமச்லோகார்த்தத்தைக்

நீர் திருக்கோஷ்டியூர் நம்பியிடமே அறிந்து கொள்ளுங்கள் என கூறினார். முதலியாண்டான், அப்போதே திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று, பக்தியோடு சரமச்லோகார்த்தத்தை உபதேசிக்கச் சொல்லிப் பிரார்த்தித்தார். அப்போது நம்பி முதலியாண்டானுக்கு முகங்கொடுக்காமலேயிருந்தார்.

முதலியாண்டான், நம்பிக்கு ஆறு மாதங்கள் சுச்ரூஷை செய்து கொண்டிருந்தார். அதுகண்டு உகந்த நம்பி, "நீர் யதிராஜருடைய சம்பந்தத்தால் இப்போது மிகவும் பிரகாசிக்கிறீர். கல்வியாகிற மதம் செல்வமாகிற மதம் குலமாகிற மதம் என்னும் மும் மதங்கள் செருக்குற்றவர்களிடம் உள்ளன. செருக்கற்ற நல்லோர்களிடம் இம்மூன்றுமே நேர் எதிராக 'தமங்கள்' (அடக்கங்கள்) ஆகின்றன. இந்த மூன்று மதங்களும் அற்ற உம்து ஆசார்யரையே சரணமடையும். அவரே உமக்குச் சரமச்லோகார்த்தத்தை உபதேசிப்பார்' என்று பதிலுரைத்தார். உடனே முதலியாண்டான், சமம், தமம் முதலான குணங்கள் நிறைந்த யதிராஜரை வணங்கி, எல்லாச் செய்தியையும் விண்ணப்பித்து நின்றார்.

### அத்துழாய் பட்ட துன்பம்

இதற்கிடையே - பெரியநம்பியின் குமாரியும், நற் குணங்கள் நிரம்பியவளுமான 'அத்துழாய்' என்பவள் பெருந் துன்பத்தோடு மாமியார் வீட்டிலிருந்து திரும்பி வந்து, தன் தந்தையிடம் "தந்தையே! அடியேனது மாமியார் இராத்திரி வேளையில் நான் தனியாக குளத்திற்குச் செல்லும்போது துணைக்கு அழைத்ததற்கு, கூட வருவதற்கு நான் வேலைக் காரியா? வேண்டுமாகில் பிறந்தகத்திலிருந்து வேலைக்காரியை சீதனவேளாட்டியாக அழைத்து வா' என்று கூறி அனுப்பி விட்டாள். நீர் எனக்கு இப்போது ஓர் வேலைக்காரியை ஏற்பாடு செய்து அனுப்ப வேண்டும்" என்று கூறினாள்.

உடனே பெரியநம்பி, நீ கவலையற்றவளாய், நடந்த தனைத்தையும் மடத்திலுள்ள உன் தமையனிடம் சொல்;

அவன் உன் துன்பத்தைத் தீர்ப்பான் என்றார். அப்பெண்ணும், யதிராஜரை அடைந்து, அனைத்தையும் விரிவாக விவரித்தாள். செயல் வல்லவரான யதிராஜரும், ஆசார்ய புத்ரியின் அவ் வார்த்தையைக் கேட்டு, சரமச்லோகார்த்தத்தை அளிக்கும்படி பிரார்த்திக்கும் முதலியாண்டானைப் பார்த்து, அவரிடம், ''தாசரதியே! (உமக்கும் இப்பெண்ணுக்கும்) நன்மையை விரும்பி ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளாய்; இப் பெண்ணோடு கூட இவளது புகுந்தகத்திற்குச் சென்று புக்ககத்தார் நியமிக்கும் காரியங்களைச் சீதனவேளாட்டியாக இருந்து செய்வாயாக என்றார்.

## முதலியாண்டான் பெருமை

முதலியாண்டானும், அந்த யதிராஜருடைய நியமனத்தை ஏற்று அப்போதே அத்துழாயுடன் அவள் புக்ககம் சென்று, அவர்களிட்ட வேலைகளனைத்தையும் செய்து கொண்டு அங்கேயே இருந்தார். அப்போது ஒரு சமயம் அங்குள்ள அந்தணர் தலைவன் ஒருவன், சாஸ்த்ரத்தின் உண்மைப் பொருளை விட்டு, ஒரு வாக்யத்திற்கு அவப்பொருளுரைத் தான். அங்கிருந்த முதலியாண்டான், அவ்வார்த்தையைக் கேட்டு, ''பேரறிவாளரே! நீர் இவ்வாக்கியத்திற்குச் சொன்ன பொருள் சரியல்ல: ஆசார்ய பரம்பராப்தமான மற்றொரு சிறந்த பொருள் இதற்கு உண்டு'' என்று கூறினார்.

அதைக்கேட்ட அவன் கோபங்கொண்டு ''ஏ சமையற் காரா! உனக்குத் தொடர்பில்லாத இவ்வாராய்ச்சி உனக்கெதற்கு? நீ தண்ணீர் கொண்டு வரப்போ; குள்ள நரி போன்ற நீ எங்கே? தேவார்ச்சகன் போன்ற நான் எங்கே? (பண்டிதர்களே அறியவல்ல) சாஸ்த்ரம் எங்கே? மடையனான (அறிவிலியான: சமையற்காரனான) நீ எங்கே?'' என்று முதலியாண்டானை செவி சுடு வார்த்தைகளைச் சொன்னான். இவ்வண்ணம் அவமதிக்கப்பட்ட போதிலும் முதலியாண்டான், அவனிடம்

முன்பின் வாக்யங்களுக்குப் பொருந்தும்படியாக அந்த வாக்யத்தின் பொருளைத் தெளிவுபடுத்தினார்.



முதலியாண்டான்

அத்துழாயும், அங்கிருந்த வைஷ்ணவ ச்ரேஷ்டர்களனை வரும் முதலியாண்டானுடைய அவ்வாக்யார்த்தச் சிறப்பைக் கேட்டு வியந்து "எல்லாமறிந்த தேவரீருக்கு வேலை புரியும் இழிதொழில் எப்படி ஏற்பட்டது?" என்று கேட்டனர். முதலியாண்டானும் எனது ஆசார்யரான யதிராஜருடைய ஆஜ்ஞையால் ஏவப்பட்டே (அவரது ஆசார்ய புத்ரி வஸிக்கும்) உங்களுடைய இச்சிறந்த திருமாளிகையில் இக்கைங்கர்யம் செய்கிறேன்" என்று கூறினார்.

உடனே அவ்வீட்டிலுள்ள அனைவரும் "அந்தணரே! நீர் வேலைக்காரர் என்றெண்ணி, அறியாமையாலே நாங்கள் உம்மை இவ்வளவு நாள் ஆணையிட்டு வந்ததையும், நாங்கள் உமக்குச் செய்த அபசாரங்களையும் மன்னித்தருள்வீர். எங்களிடம் கருணைகூர்ந்து உமது இருப்பிடம் சேர்வீர்" என்று பிரார்த்தித்தார்கள். அதற்கு முதலியாண்டான், "எவருடைய ஆணையால் நான் இக்கைங்கர்யம் செய்ய நியமிக்கப் பெற்றேனோ, அந்த யதிராஜரது ஆணையில்லாமல் நான் வேறு இடத்திற்கு எப்படிச் செல்வேன்? நீங்களே கூறுங்கள்" என்று உரைத்தார். உடனே அவர்கள், யதிராஜரிடம் நடந்தது அனைத்தையும் தெளிவாக விண்ணப்பித்தார்கள். அதற்குப் பின், யதிராஜரும் ஓர் சிஷ்யரைக் கொண்டு முதலியாண்டானைத் தம்மிடம் வரவழைத்து சரமஸ்லோகார்த்தத்தை உபதேசம் செய்தார்.

**10. நடுநாயக மணி**

*பொருந்திய தேசம் பொறையும் திறலும் புகழும் - நல்ல*
*திருந்திய ஞானமும் செல்வமும் சேரும் - செறுகலியால்*
*வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த*
*அருந்தவன் எங்களிராமானுசனை அடைபவர்க்கே.*
*(இராமானுசனை அடைபவர்க்கு எல்லாப் பயன்களும் சேரும்.)*

**திருவரங்கப் பெருமாளரையரிடம் அருளிச் செயல் கேட்டல்**

திருவரங்கப் பெருமாளரையரிடம் சென்று, யதிராஜர் அவர்களிடமிருந்து அருளிச் செயல் முழுவதையும் கேட்டு, முதலியாண்டான் முதலிய எல்லாச் சீடர்களுக்கும் அதை முழுவதும் உபதேசித்து, தமது மடத்தில் சில மாதங்கள் வாழ்ந்து வந்தார்.

**திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டல்**

அப்போது ஒரு சமயத்தில் ஸ்ரீரங்கத்திற்குத் திருமாலை யாண்டானை அழைத்துக் கொண்டு வந்த திருக்கோட்டியூர் நம்பி யதிராஜரின் மடத்தை அடைந்தார். "இராமாநுஜரே!

திருமாலையாண்டானிடத்தில் திருவாய்மொழிக்கு வ்யாக்யானம் கேளும்'' என்று அவரிடம் நியமித்துவிட்டுத் திருக்கோட்டியூர் சென்றார். அதற்குப் பின் திருமாலையாண்டானிடத்தில் எம் பெருமானார் அங்கேயே திருவாய்மொழிக்குப் பொருள் கேட்டுக் கொண்டிருந்தார்.

## திருமாலையாண்டானின் சீற்றம்

திருமாலையாண்டான் - ஆளவந்தார் தமக்கு அருளிய முறையில் திருவாய்மொழிப் பாசுரங்களுக்கு அர்த்தத்தை யதிராஜருக்குச் சொல்லி வருகையில், ''ஊனில் வாழ்'' என்று தொடங்கும் பதிகத்தில் முதல் இரண்டு பாசுரங்களில் ஆழ்வார் மஹாப்ரீதியோடு பாசுரம் அருளிச் செய்கிறார் என்று (ஆளவந்தார் அருளியதாகக்) கூறி விட்டு, மூன்றாம் பாசுரத்தில் ''அறியாமாமாயத் தடியேனை வைத்தாயால்'' என்று ஆழ்வார் வருத்தத்தோடே பாசுரம் அருளியதாக நிர்வஹித்து, அத்திரு வாய்மொழியின் முன்பின் பாசுரங்களில்லாத வருத்தத்தை அப்பாசுரத்தில் மாத்திரம் அர்த்தமாக சிஷ்யரான எம் பெருமானார்க்குக் கூறினார்.

இதைக்கேட்ட எம்பெருமானார் ''ஆசார்யரே! இப் பாசுரத்திற்கு இது அர்த்தமன்று; முன்பின் பாசுரங்களுக்குச் சேர 'அறியாமாமாயத்தடியேனை, அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து வைத்தாயால்' என்று ப்ரீதி தோற்ற ஆழ்வார் இந்த மூன்றாம் பாசுரத்திலும் அருளுகிறார் என்பதே பொருந்தும்'' என்று கூறினார். திருமாலையாண்டான் இதை ஏற்க மறுத்து, ''சிஷ்யரே! என் முன்பே (எனது ஆசார்யர் அருளிய அர்த்தத்தை மறுக்கும்) இவ்வார்த்தை உம்மால் சொல்லத்தகாதது'' என்று யதிராஜரைப் பார்த்துக் கூறி, கோபத்தோடு தம் இருப்பிடம் சேர்ந்தார். (பகவத்விஷய காலக்ஷேபம் அன்று முதல் தடைபட்டு விட்டது).

## திருக்கோட்டியூர் நம்பியின் விளக்கம்

அச்செய்தியைக் கேட்ட திருக்கோட்டியூர் நம்பி, திருக்கோட்டியூரிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு விரைந்து வந்து,

''மாலாதரரே! ஸ்ரீ க்ருஷ்ணன் ஸாந்தீபினியிடம் கல்வி கற்றது போல் உம்மிடம் யதிராஜர் இப்போது அர்த்தம் கேட்கிறார்.

மஹாத்மாவான ஆளவந்தார் நெஞ்சில் உள்ள அர்த்தமே இப்போது ஸ்ரீ இராமாநுஜருடைய நெஞ்சில் தோன்றும். ஆகையால் அவருக்கு அறியாததை அறிவிப்பதாக நினையாதீர். ஆளவந்தாருடைய நெஞ்சமும், யதிராஜருடைய நெஞ்சமும் ஒன்றேயாகும். இதைக் கருத்தில் கொண்டு அவருக்கு அர்த்தத்தை உபதேசிக்கக் கடவீர். லஷ்மிஸம்பந்தரான இந்த லஷ்மணமுனி ஸாதாரணமான மனிதரல்லர். எம்பெருமானின் அவதாரமேயாவார்'' என்று சொன்னார். உடனேயே திருமாலை யாண்டானும், மறுபடியும் யதிராஜருக்குத் திருவாய் மொழியின் அர்த்தத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார்.

அப்படிக் காலக்ஷேபம் நடந்து வரும் போது, திருவாய் மொழியில் ஓரிடத்திற்குத் திருமாலையாண்டான் ஒரு பொருளைச் சொன்னார். இப் பொருளைக் கேட்ட யதிராஜர் ''ஆசார்யரே! யாமுநாச்சார்யர் இப்படிப் பொருளைச் சொல்லி யிருக்க மாட்டார்'' என்று உரைத்தார். திருமாலையாண்டான் ''நீர் யாமுநாசார்யரை (உயிரோடிருக்கும்போது) ஒரு நாளாவது கண்ணால் கண்டதுகூட இல்லை. அப்படியிருக்க, அவருடைய திருவுள்ளத்தை நீர் உறுதியாகச் சொல்லக் காரணமென்ன வென்பதைச் சொல்லும்'' என்று கேட்டார்.

யதிராஜர் ''த்ரோணாசார்யருக்கு ஏகலைவன் போலே, யாமுநாசார்யருக்கு நான் (சிஷ்யனாக) இருப்பவன்'' என்று பதிலுரைத்தார். அவ்வார்த்தையைக் கேட்ட திருமாலை யாண்டான், திருக்கோட்டியூர் நம்பி அருளியது மெய்யே என உணர்ந்து, மிகவுகந்து, ஸ்ரீ இராமானுஜரை எம்பெருமானின் அவதாரமாக நினைத்து, ''யாமுநாசார்யரிடம் கேளாத அர்த்தங்களை உம்மிடமிருந்து இப்போது நான் கேட்கிறேன்'' என்று சொல்லி, ஆனந்தமடைந்தார். ஸ்ரீ இராமானுஜரும் திருவாய்மொழி வ்யாக்யானத்தைப் பூர்ணமாகக் கேட்டு, ஆசார்யரான திருமாலையாண்டானை பக்தியோடு ஆராதித்தார்.

## எம்பெருமானாரும், திருவரங்க பெருமாளரையரும்

*அதற்குப் பின் திருமாலையாண்டான் தமது குமாரரான சுந்தரத்தோளுடையானை யதிராஜருக்கு சிஷ்யராக்கி, ''யதிராஜரே! திருவரங்கப் பெருமாளரையரிடம் ஒரு விசேஷார்த்தம் உள்ளது. அதை மஹாத்மாவான அவரிடமிருந்து கேட்கக் கடவீர்'' என்று உரைத்தார். யதிராஜரும், அரையரிடமிருந்து அவ்வார்த்தை பெறுவதற்காக, ஆர்வத்தோடும் பக்தியோடும் ஆறுமாத காலம் அன்போடு பணிவிடை செய்தார்.*

*யாமுநாசார்யருடைய குமாரரான திருவரங்கப் பெருமாளரையர் யதிராஜரைப் பார்த்து மிக உகந்து ''என்னுடைய ஸர்வஸ்வத்தையும் (எனக்கு எல்லாச் சொத்துமாயிருக்கும் ரஹஸ்யார்த்தத்தை) கொள்ளை கொள்ளவோ நீர் இப்படி கைங்கர்யம் செய்கிறீர்?'' என்று சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு, ''யதிராஜரே! சரம புருஷார்த்தத்தை சொல்கிறேன் கேட்பீராக. சடகோபரான நம்மாழ்வாரைத் தவிர தேவுமற்றறியாதவராக முற்காலத்தில் மதுரகவியாழ்வார் எப்படியிருந்தாரோ அப்படியே நீரும் இப்போது இருப்பீராக.''*

குருரேவ பரம் பிரம்ம குருரேவ பரம் தனம்
குருரேவ பர: காமோ குருரேவ பராயணம்
குருரேவ பராவித்யா குருரேவ பராகதி:
யஸ்மாத் ததுப தேஷ்டாஸௌ தஸ்மாத் குரு தரோகுரு:

*'குருவே மேலான பரஹ்மம்; குருவே மேலான தனம்; குருவே மேலான காமம்; குருவே மேலான ப்ராப்யம்; குருவே மேலான கல்வி ; குருவே மேலான ப்ராபகம்; அப்பரம் பொருளையே உபதேஸிப்பதால் குரு அதைவிட உயர்ந்தவன். தீ மனம் கெடுப்பவன் ஆசார்யன், ஆதலால் உறங்கும் பெருமாளே உலாவும் பெருமாளாக வந்தார் என்று ஆசார்ய விசுவாசம் கொள்வீர்'' என்று உபதேஸித்தார். இவ்வாறு கர்ம,*

ஞான, பக்தி, ப்ரபத்தி ஆகிய நான்கிலும் சிறந்த ஐந்தாவது உபாயமாயமே ஆசார்ய நிஷ்டை என்பதை வெளியிட்டார் அரையர்.

**திருமுடி, திருவடி ஸம்பந்தங்களாலே உத்தாரகரான நடுநாயகமணி :**

இவ்வண்ணமாக ஐந்து ஆசார்யர்களிடமிருந்து அறிய வேண்டிய எல்லா அர்த்தங்களையும் அறியப் பெற்ற யதிராஜர், உலகிற்கு நன்மை செய்வதிலேயே ஈடுபட்டவராய், ஸ்ரீரங்கத்தில் சிஷ்யர்களோடு கூடியவராய், நித்யஸூரிகளோடு கூடிய பரமபத நாதனைப் போலே உகப்புடன் விளங்கினார். குடிகளால் கொண்டாடப்படும் அரசனொருவன் நல்லோர் களான மந்திரிகளிடம் தன் பிள்ளைக்காக நிதிகளைச் சேமித்து வைப்பது போலே, ஆளவந்தாரும் யதிராஜரின் நன்மையைக் கருதி, தனது ஐந்து சிஷ்யர்களிடம் எல்லா அர்த்தங்களையும் சேமித்து வைத்திருந்தார்.

மஹாத்மாவான அத்தகைய யதிராஜர்க்கு பெரிய நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமலையாண்டான் முதலிய ஆசார் யர்கள் எல்லா அர்த்தங்களையும் அளித்து (அவர் உத்தார காசார்யர் என்பது விளங்கும்படி) தமது குமாரர்களையும் சீடர்களாக்கினார்கள். யதிராஜர்க்கு முன்புள்ள ஆசார்யர்கள் (நம்மாழ்வாருக்கு திருவடியாயிருந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை தியானித்ததன் மூலம் ஏற்பட்ட) திருமுடி ஸம்பந்தத்தின் வலிமையினாலே நன்கு முக்தி பெற்றார்கள். அவருக்கு பின்பு இவ்வுலகில் வாழ்ந்த ஏராளமான ஜனங்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினாலே பரமபதம் பெற்றார்கள்.

இவ்வண்ணமாக முன்புள்ளார்க்கும் பின்புள்ளார்க்கும், ஜகதாசார்யரான ஸ்ரீ இராமானுஜரோடு ஸம்பந்தபலம் இல்லா விடில் விஷ்ணுவின் பரமபதத்திற்கு செல்வது அரிதாயிற்று. ஒரு முத்துமாலைக்கு நடுவே நாயகரத்னமானது ப்ரகாசிப்பது போலே, முன்பும் பின்பும் விளங்கிய மஹாத்மாக்களான

ஆசார்யோத்தமர்களுக்கு நடுவில் யதி சக்ரவர்த்தியானவர் நடுநாயக மணியாக விளங்கினார்.

**கிடாம்பி ஆச்சான் பரிவு**

ஸ்ரீ இராமானுஜாசார்யார் உலகனைத்தும் உய்யும் பொருட்டு, கத்யத்ரயத்தையும், விஷ்ணுவின் நித்ய திரு வாராதனத்தை விளக்கும் நித்யக்ரந்தத்தையும் அருளிச் செய்தார்.

ஸ்ரீரங்கநாதனுடைய த்ரவ்யத்தைத் திருடி வந்த அர்ச்சகர்களுக்கு யதிராஜர் தம்மை நியமிப்பது எப்போதும் இடையூறாயிருந்தது அர்ச்சகர்களில் தலைவனாய், மனிதர்களில் கடைப்பட்டவனான ஒரு அர்ச்சகன் ஸ்ரீ இராமானுஜரைக் கொல்ல திட்டமிட்டான். பணத்தில் ஆசை கொண்ட அந்தணன் ஒருவனை பணம் கொடுத்து வசப்படுத்தி, "ஸ்ரீ இராமானுஜர்க்கு விஷ அன்னத்தை பிட்சையாக இடுவாய்" என்று அவனிடம் சொல்லி வைத்திருந்தான். அவனும் அதை ஏற்று தன் மனைவியைக் கூப்பிட்டு 'நீ இன்று இராமானுஜர் பிட்சைக்கு வரும்போது விஷங்கலந்த அன்னத்தை பிட்சையாக இட வேணும்" என்று நியமித்து வைத்தான்.

நல்லவளான அப்பெண்மணி அதற்கு இசையவில்லை. கணவனால் பயமுறுத்தப்பட்ட அவள் விஷங்கலந்த அன்னத்தை அளித்து, யதிராஜர் திருவடிகளில் வணங்கி முனிவரே, இதை உட்கொள்ள வேண்டாம். என் தலைவர் உம்மிடம் பகைமை கொண்டுள்ளார்" என்று கண்ணீரோடு கூறினாள். இதைக் கேட்ட இராமானுஜர் பிட்சை உணவை ஏற்பதை விட்டு உபவாஸமிருந்தார்.

யதிராஜர் பற்றிய செய்தியை கேள்விப்பட்ட திருக் கோட்டியூர் நம்பி சிஷ்யரிடம் பரிவு கொண்டவராகையாலே கருணையோடு திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். நமது ஆசார்யன் எழுந்தருளுகிறார் என்று கேள்விப்பட்ட யதிராஜரும், தென் திருக்காவேரி மணலின் நடுவில் தன் சிஷ்யர்களோடு கூடியவராய் நம்பியை எதிர்கொண்டு சென்றார். கடுங்கோடை

காலத்தில், நடுப்பகலில் கொதிக்கும் காவேரி மணலில் தண்டம் போலே சடக்கென நம்பியின் திருவடிகளிலே விழுந்தார்.

யதிராஜரிடம் பரிவு கொண்டவன் யாரென்று அறிந்து கொள்வதற்காக நம்பியானவர் இராமானுஜரை 'எழுந்திரு' என்று சொல்லவில்லை. ஆத்ரேய கோத்திரத்திற்கு அணியாய் திகழ்ந்த 'ப்ரணதார்த்திஹரர்' என்னும் இராமானுஜ சிஷ்யர் ஒருவர் பரிவு கொண்டு சூரியனின் கடுமையான கிரணங் களாலே கொதிக்கும் மணலில் கிடக்கும் தன் ஆசார்யரைப் பார்த்து பொறுக்காதவராய், "ஆசார்ய - சிஷ்யக்கிரமம் வெகு அழகாயிருக்கிறதே! என்று கடிந்து கொண்டு 'யாரேனும் அதிமெல்லிய பூமாலையை வெயிலில் எறிவார் உண்டோ? என்று கூறித்தாமே நம்பியின் கோபத்தையோ, உடையவரின் தாபத்தையோ பற்றி சிறிதும் கவலைப் படாமல் உடையவரின் திருமேனியை இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினார்.

அதே சமயம் ஸ்ரீ நம்பிகளின் மோனம் கலைந்து "இத்தகையோரைத் தான் காணும் பொருட்டு நான் இதுவரை பொறுத்திருந்தேன்" என்று கூறி ஸ்ரீ இராமானுஜரைப் பார்த்து, "இன்று முதல் ஸ்ரீ கிடாம்பியாச்சான் இட்ட உணவையே கொள்ளக் கடவீர்" என்றார். அன்று முதல் ஸ்ரீகிடாம்பி யாச்சானே அவருக்கு புருஷபாகமாக ஆகாரம் சமைத்துக் கொடுத்தார்.

## 11. யஜ்ஞமூர்த்தியை ஜயித்தல்

*பேதையர் வேதப்பொருளிதென்றுன்னி, பிரமம் நன்றென்று*
*ஓதி மற்றெல்லாவுயிருமஃதென்று, உயிர்கள் மெய்விட்டு*
*ஆதிப்பரனோடொன்றாமென்று சொல்லுமவ்வல்லலெல்லாம்*
*வாதில் வென்றான் - எம் இராமாநுசன் மெய்மதிக்கடலே.*
*(பிற சமயங்களை வாதில் வென்றவன் இராமானுசன்.)*

### யஜ்ஞமூர்த்தியின் கல்விச் செருக்கு

அக்காலத்தில், மாயாவாத (அத்வைத) மதத்தைச் சேர்ந்த யஜ்ஞமூர்த்தி என்னும் புகழ்பெற்ற மஹாவித்வான் ஒருவன் எல்லா வித்வான்களையும் ஜயித்து, (ஏகதண்ட) ஸந்யாஸாச்ரமத்தையும் ஏற்றுக் கொண்டு, சிஷ்யச் செல்வம்,

கல்விச் செல்வம் முதலானவற்றோடு கூடியவனாய், ஒப்பற்ற பெருமையை உடையவனாய் வாழ்ந்து வந்தான்.

அவன் யதிராஜருடைய பெருமையைப் பற்றிக் கேள்விப் பட்டு, அவ்விராமநுசரை ஜயிப்பதற்காக, கவடிகளில் பல சாஸ்திர நூல்களை எழுதி, ஆயிரக்கணக்கான அக்கவடி களை ஓர் வண்டியில் கட்டி எடுத்துப் போட்டுக் கொண்டு, தன் வித்யாகர்வமெல்லாமல் தோற்றப் பெரிய மதிப்போடு சிஷ்ய ஸமூஹத்தால் சூழப்பெற்றவனாய், மிக வேகமாக ஸ்ரீரங்கத் திற்கு வந்து ஸ்ரீஇராமாநுஜரைப் பார்த்து, "இராமாநுஜரே! என்னோடு நீர் நேரே சாஸ்த்ர தர்க்கம் புரிய வேணும்" என்று கூறினான்.

யஜ்ஞமூர்த்தியின் வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ இராமானுஜரும், "என்னால் நீர் வாதத்தில் ஜயிக்கப் பட்டீரானால் நீர் என்ன தண்டனையை ஏற்கிறீர்? அதை முதலில் சொல்லும்" என்று கேட்டார். யஜ்ஞமூர்த்தியும், "இராமாநுஜரே! உம்மால் ஜயிக்கப்பட்டால், உமது மதத்தைத் தழுவி, என் தலையில் உமது பாதுகைகளைத் தாங்கி, உமது பெயரையே எனக்குப் பெயராகக் கொள்கிறேன். அதுபோலே நீர் இப்போது என்னால் ஜயிக்கப்பட்டால் என்ன செய்வீர்" என்று யதிராஜரிடம் கேட்க, ஸ்ரீ இராமானுஜர் "வித்வானே! உம்மால் நான் ஜயிக்கப்பட்டால் நான் எழுதியுள்ள க்ரந்தங் களைக் கைவிட்டு விடுகிறேன். இனி எந்த நூலும் எழுதவும் மாட்டேன்" என்று யஜ்ஞமூர்த்தியிடம் கூறினார்.

**வாதப்போர் :**

யஜ்ஞமூர்த்தியும், யதிராஜரும் தமது சாஸ்த்ரவாதப் போருக்குப் பதினெட்டு நாட்களை மேலெல்லையாக நிர்ணயித்துக் கொண்டு, சாஸ்த்ரங்களில் தம் திறமையனைத் தையும் காட்டிக் கொண்டு, (பதினாறு நாட்கள் வெற்றி தோல்வியில்லாமல்) வாதப்போர் புரிந்தனர். பதினேழாவது நாளன்று யஜ்ஞமூர்த்தியின் விதண்டாவாதங்களாலே, யதிராஜ ருடைய நேர்மையான வாதங்கள் தள்ளப்பட்டன போலத்

தோற்றமளித்தன. மிகவும் உகப்படைந்த யஜ்ஞமூர்த்தியும் அன்று வாதம் முடிந்தவுடன் தன் மடத்திற்குச் சென்றார்.

## யதிராஜரின் மனவருத்தம்

அதற்குப் பின் தமது மடத்திற்குச் சென்ற இராமானுஜர் நெஞ்சு கலங்கியவராய், தமது திருவாரதனப் பெருமாளான வரதராஜப் பெருமாளை ஆராதித்து, ''பேரருளாளப் பெருமாளே! புருஷோத்தமனே! நெடுங்காலமாக இந்த வைஷ்ணவ தர்சனம் நம்மாழ்வார், நாதமுனிகள், ஆளவந்தார் காலங்களில் எங்கும் எப்போதும் தோல்வி யடையாதபடி இந்த மதம் தேவரீரால் நன்கு நடத்தப்பட்டு வருகிறது.

ஜகந்நாதனே! அடியேன் காலத்தில் அது தோல்வி யடைந்து விடும் போலிருக்கிறதே! இதுவரையில் தேவரீருடைய ஸ்வரூபம், ரூபம், குணம் முதலியவை உண்மை என்று விளங்கும்படி ப்ரமாணங்களை தேவரீர் நடத்திக் கொண்டு போந்தீர். இப்போது என் காலத்தில் ஒரு பொய் வாதியை உகப்போடு கைக்கொண்டு அந்த ப்ரமாணங்களையே அழிக்கத் திருவுள்ளம் பற்றிவிட்டீராகில், அப்படியே செய்யும்'' என்று விண்ணப்பித்து, உணவு கொள்ளாமல் உறங்கச் சென்றுவிட்டார் யதிராஜர்.

## பேரருளாளனின் பேரருள்

யதிராஜர் உறங்கும்போது கனவில் தோன்றிய கருணைக் கடலான வரதராஜப் பெருமாள், ''குழந்தாய்! வருந்தாதே! யதிராஜரே! நீர் வல்லவரன்றோ! மிக முயன்று ஸம்பாதிக்கப் பட்ட ஒரு பெரிய அறிவாளியை உமக்கு சிஷ்யனாக அளித்திருக்கிறேன், உமது பரமாசார்யரான ஆளவந்தாரால் இயற்றப் பெற்ற மாயாவாத கண்டனம் கொண்டு நீர் யஜ்ஞமூர்த்தியை ஜயிப்பீர்'' என்று கூறியருளினார்.

## யஜ்ஞமூர்த்தி ஆச்ரயித்தல்

அதற்குப் பின், யதிராஜர், தெளிந்து ஆழ்ந்த நெஞ்சை யுடையவராய், யஜ்ஞமூர்த்தியை வெற்றி கொள்வதற்காக,

அந்த வாதஸபைக்குப் புறப்பட்டார். யதிராஜரை வாதஸபையில் கண்ட யஜ்ஞமூர்த்தி, வியப்புற்றான். "நேற்று மிக வருந்தியவராய் தம் இருப்பிடம் சேர்ந்த யதிராஜர், இன்று அதிக கம்பீரமான கஜேந்திரனைப் போல விளங்குவதற்குக் காரணம் யாது?" என்று சிந்திக்கலுற்றான்.

அது வரையில் மாயாவாத மதத்திலேயே ஊன்றியிருந்த அந்த யஜ்ஞமூர்த்தி, யதிராஜரைப் பார்த்து, 'இவர் இவ்வுலகில் ஹரியின் அம்சாவதாரமாகப் பிறந்தவரே' என்று அறுதியிட்டு, அவரை ப்ரதக்ஷிணம் பண்ணி, யதிராஜர்க்கு அப்போதே சிஷ்யரானார். யஜ்ஞமூர்த்தியைக் கண்டு வியப்புற்ற யதிராஜர் "யஜ்ஞமூர்த்தியே! இது என்ன? ஏன் நீர் வாதம் செய்யவில்லை?" என்று கேட்டார். யஜ்ஞமூர்த்தியும், கைகூப்பியவராய் யதிராஜரைப் பார்த்து, தேவரீர்க்கு பகவான் விஷ்ணுவே ப்ரத்யக்ஷமாக ஸேவை ஸாதித்திருக்கிறார். இப்போது தேவரீருக்கும் விஷ்ணுவுக்கும் வேற்றுமையில்லை; ஆகையால் தேவரீர் திருமுன்பே அடியேன் எப்படி வாதம் புரிவேன்?" என்று கூறினார்.

யஜ்ஞமூர்த்தியும் ஏகதண்டத்தை தூரத்தில் எறிந்து, ஸ்ரீ இராமானுஜரை வணங்கி, கைகூப்பியவராய், "யதிராஜரே! உம்மால் நான் ஜயிக்கப்பட்டேன். சரணமடைந்த என்னை ரக்ஷிப்பீர். யஜ்ஞோபவீதம் த்ரிதண்டம் முதலானவற்றை அளித்து என்னை உமது சிடனாக்குவீர்" என்று வேண்டினார். யதிராஜரின் சிஷ்யரானார்.

**அருளாளப்பெருமான் எம்பெருமானார்**

பெருமானுடைய 'அருளாளப் பெருமாள்' என்னும் திருநாமத்தோடு, தமது 'எம்பெருமானார்' என்னும் நாமத்தையும் சேர்த்து, 'அருளாளப் பெருமான் எம்பெருமானார்' தேவராஜமுனி என்னும் திருநாமத்தை யஜ்ஞ மூர்த்திக்குச் சூட்டினார் எம்பெருமானார்.

மேலும் பல அரங்குகளோடு கூடிய மிகப் பெரிய மடத்தைக் கட்டுவித்து, பெருமையிலே தன்னையொத்த அவரை அம்மடத்திலே வாழச் செய்தார் யதிராஜர்.

## 12. எம்பெருமானார் இருவரா?

*என்னையும் பார்த்து என்னியல்வையும் பார்த்து, எண்ணில் பல்குணத்த*
*உன்னையும் பார்க்கில் அருள்செய்வதே நலம், அன்றி என்பால்*
*பின்னையும் பார்க்கில் நலமுளதே? உன் பெருங்கருணை*
*தன்னையென் பார்ப்பர்? இராமாநுச! உன்னைச் சார்ந்தவரே.*
*(இராமானுச! எனக்கு அருள் செய்வதுதான் நலன்.)*

### தேவராஜ முனிவரின் பெருமை

இப்படிப்பட்ட பெருமையோடு எழுந்தருளியிருக்கும் யதிராஜரை தொண்டனூர் நம்பியும், மஹாபாகவதர்களில் தலைசிறந்தவரான மருதூர் நம்பியும், அநந்தாழ்வானும், யஜ்ஞேசரும் (எச்சானும்) ஆகிய இந்நால்வரும் ஸ்ரீ இராமானுஜரை ஆச்ரயிப்பதற்கு எழுந்தருளினார்கள்.

அவர்களுக்கு தேவராஜமுனிவரைக் கொண்டு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தருளினார் யதிராஜர். அப்போது பயமடைந்த தேவராஜ முனிவர், ''குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே உடையவர் இக்காரியத்தை என்னைக் கொண்டு செய்வித்திருக்கிறார். நீங்கள் 'எம் பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்றிருங்கள்'' என்று சொன்னார்.

ஒருமுறை ஸ்ரீரங்கத்திற்குச் சிலர் ஜகதாசார்யரான எம் பெருமானாரை ஸேவிப்பதற்காக எழுந்தருளினார்கள். திருவரங்கம் திருவீதியிலிருக்கும் ஒருவரைப் பார்த்து, ''எம் பெருமானார் மடம் எங்கே உள்ளது? என்று கேட்டனர். அதைக்கேட்ட அவர் எந்த எம்பெருமானாருடைய மடத்தைக் கேட்கிறீர்கள்?'' என்று பதில் கேள்வி கேட்டார். இதைக்கேட்ட அவர்கள் ''உலகத்தில் ஒப்பற்ற புகழ்பெற்ற எம்பெருமானார் ஒருவரேயன்றோ இருக்கிறார். இரண்டாவது எம்பெரு மானாரைப் பற்றி நாங்கள் எப்போதும் கேள்விப்பட்ட தில்லையே'' என்று கூறினர்.

''அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்னும் யதிச்ரேஷ்டர் ஒருவர் இங்கு வந்து இந்தத் திருவரங்கப்

பெருநகரிலேயே வாழ்கிறார்'' என்று பதில் கூறினார். அவருடைய வார்த்தையைக் கேட்டு வியந்து ''எவர் நமது வைஷ்ணவஸித்தாந்த ப்ரவர்த்தகராய், கருணைக்கு ஓர் கொள்கலமாய், இராமானுஜர் என்று பெயர் பெற்றவராய் ஜகதாசார்யரான எம்பெருமானாரோ, அந்த மஹாபுருஷரைப் பற்றியே நாங்கள் கேட்கிறோம்'' என்று கூற யதிராஜரான எம்பெருமானாருடைய மடத்திற்குச் செல்லும் வழியை காட்டினார். அருளாளப் பெருமாள் எம்பெருமானார் இப்பேச்சு வார்த்தையை (யாத்ருச்சிகமாக) முழுவதும் கேட்டு, நன்னெஞ்சினரானகையாலே, (''எம்பெருமானாருக்குப் போட்டியாகிவிட்டோமே' என்று) மிகவும் கலங்கியவராய் வருத்த முற்றார்.

## அருளாளப் பெருமாள் எம்பெருமானாரின் ஆசார்யநிஷ்டை

அந்த தேவராஜ முனி அந்தத் தமது மடம் முழுவதையும் அடியோடு உடனே இடித்துவிட்டு, அதை விட்டு விலகி (எம்பெருமானார் மடத்திற்குச் சென்று), யதிராஜருடைய திருவடித்தாமரைகளை பிடித்துக் கொண்டு, ''யதிராஜரான எம்பெருமானாரே! மறுபடியும் நான் (அஹங்காரத்தால்) மயங்குவதற்காக அடியேனைத் தனி மடத்தில் வைத்துவிட்டீர். இதைக்காட்டிலும் அடியேற்கு வேறு ஆத்மநாசமில்லை. தேவரீருடைய திருவடித்தாமரை நிழலில் எப்போதும் தேவரீர்க்குக் கைங்கர்யம் செய்து கொண்டு, சரீரம் விழும் வரை இங்கேயே நிலையாக வாழ்கிறேன்'' என விண்ணப்பித்தார்.

## திருவாராதன கைங்கர்யமருளப் பெறுதல்

யதிராஜர் 'நித்யம்' என்று பெயர் பெற்றதாய் எம்பெருமானுக்குத் திருவாராதனம் செய்யும் முறையை விளக்குவதான க்ரந்தத்தை அருளிச் செய்து, தேவராஜ முனிவருக்கு அதை உபதேசித்து, ''இந்தத் திருவாராதன முறைப்படியே நமது மடத்தில் உள்ள வரதராஜப் பெருமாளுக்கு தினத்

தோறும் ஆராதனம் செய்வீர். சரீரம் விழும் வரையில் இதுவே உமக்குக் கைங்கர்யமாகும்'' என்று நியமனம் செய்தார்.

### ஞானசார ப்ரமேயசாரமருளல்

யதிராஜருடைய ஆஜ்ஞையினாலே தேவராஜ முனிவரும் உலகம் உய்வதற்காக எல்லா சாஸ்த்ரங்களின் ஸாரார்த்தங்கள் நிறைந்த 'ஞானசாரம்', ப்ரமேயசாரம் என்னும் இரு க்ரந்தங் களைத் தமிழில் இயற்றினார். இவ்வுலகில் ஆசார்யனே சிஷ்யனுக்கு மேலான தெய்வமாவான் . ஆசார்யனின் திருவடித் தாமரையில் கைங்கர்யமே அவனுக்கு மேலான ப்ராப்யமாகும். ஆசார்யனை எம்பெருமானுடைய நேர் அவதாரமாக நினைக்க வேண்டும்.'' முதலான விசேஷார்த்தங்களை ஸகல சாஸ்த்ரங் களையும் அவர் அந்நூல்களில் அளித்துள்ளார்.

### அநந்தாழ்வானுடைய புஷ்பகைங்கர்யம்

யதிராஜர், சிஷ்யர்களுக்குத் திருவாய்மொழியின் அர்த்தத்தை அருளிச் செய்து வந்தார். அப்போது ''ஒழிவில் காலமெல்லாம்'' (திருவாய் 3-3) என்னும் திருவாய்மொழியில் ''திருவேங்கடமுடையானுக்குக் காலமுள்ளவரை கைங் கர்யம் செய்ய வேண்டும்'' என்னும் அர்த்தப்ரஸ்தாவம் ஏற்பட்டது.

அப்போது யதிராஜர் ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பார்த்து, ''சிந்துபூ மகிழும் திருவேங்கடமாகிற புஷ்பமண்டபத்திலே, திருவேங்கடமுடையானுக்கு உகப்பாக அன்போடு பூத் தோட்டங்களோடு கூடிய பெரிய திருநந்தவனம் அமைத்து, எப்போதும் ஒழிவில் காலமெல்லாம் துளவமாலை ஸமர்பித்துத் திருவாராதனம் செய்யவல்ல மஹாபுருஷர் இங்காரேனு முண்டோ?'' எனக் கேட்டார்.

அவருடைய வார்த்தையைக் கேட்ட அனந்தாழ்வான் உடனே எழுந்து ''அடியேன் இப்போதே தேவரீர் நியமனப்படி செய்கிறேன்'' என்று கூறினார். யதிராஜர் மனமகிழ்ந்து நீரே ஆண்பிள்ளை! என்று கடாக்ஷித்தார். யதிராஜரை வணங்கி

நியமனம் பெற்றுக் கொண்டு திருவேங்கட மலையை அடைந்து, திருவேங்கடமுடையானை வணங்கி, அத்திருமலையிலே பெரிய திருநந்தவனம் அமைத்து, அதற்கு 'இராமானுஜன்' என்று திருநாமம் சாத்தி, ஸ்ரீ இராமானுஜருடைய ஆஜ்ஞைப்படி உகப்போடு திருமலையப்பனுக்குப் பூமாலைதனையும், துளவ மாலைகளையும் ஸமர்ப்பித்துக் கொண்டு வந்தார்.

## 13. திவ்யதேச யாத்திரை

*வைப்பாய வான்பொருளென்று, நல்லன்பர் மனத்தகத்தே*
*எப்போதும் வைக்கும் இராமாநுசனை, இருநிலத்தில்*
*ஒப்பாரில்லாத உறுவினையேன் வஞ்சநெஞ்சில் வைத்து*
*முப்போதும் வாழ்த்துவன் என்னாம் இது அவன் மொய் புகழ்க்கே?*
*(இராமானுசனையே முப்போதும் வாழ்த்துவேன்.)*

யதிராஜர் சிஷ்யர்களோடு கூடியவராய் திவ்யதேச யாத்திரையை தொடங்கினார். முதலில் திருவேங்கடமலையை ஸேவிக்கப் புறப்பட்டார். புறப்பட்டவுடன் கரம்பனூர், உத்தமர் கோவில் முதலான திவ்யதேசங்களை வணங்கிய யதிராஜர், இடைகழியில் எம்பெருமான் வாழும் திருக்கோவிலூருக்குச் சென்று உலகளந்த திரிவிக்கிரமனை ஸேவித்தார்.

### அஷ்டஸஹஸ்ரக்ராமத்தில் இரு சிஷ்யர்கள்

அஷ்டஸஹஸ்ர வகுப்பினர் வாழும் அஷ்டஸஹஸ்ர க்ராமத்தைக் நோக்கிப் புறப்பட்டார். வித்வான்கள் நிறைந்த அவ்வூரில் 'வரதாசார்யர்' என்றும் 'யஜ்ஞேசர் (எச்சான்)' என்றும் பெயர் பெற்றவர்களாய், யதிராஜருடைய சிஷ்யர்கள் வாழ்ந்து வந்தனர். அவ்விருவருள் பருத்திக் கொல்லை அம்மாள்' என்று பெயர்பெற்ற வரதாசார்யர் ஏழையாயிருந்தார். குருபக்தியுடைய யஜ்ஞேசரோ செல்வமுடையவராயிருந்தார்.

### யஜ்ஞேசரின் செல்வச் செருக்கு

(தம்முடன் கூடவந்த) ஸ்ரீ வைஷ்ணவர்களை ஆராதிப்பதற்காக செல்வம் நிறைந்த சிஷ்யரான யஜ்ஞேசரிடம் இரு சிஷ்யர்களை முதலில் அனுப்பினார், ஸ்ரீ இராமானுஜர். அவர்களும் அங்கு சென்று யஜ்ஞேசரிடம் கூற அவரும்

யதிராஜர் சிஷ்யர்களோடு எழுந்தருளியிருப்பதைக் கேள்விப் பட்டு வழி நடந்து களைத்தவர்களான அவ்விருவரையும் கவனிக்காமல், இராமானுஜரை ஆராதிப்பதற்காகப் பொருள் களைச் சேகரிப்பதில் ஈடுபட்டிருந்தார். அவ்விரு சிஷ்யர் களும் திரும்பி வந்து எம்பெருமானாரிடம் அச்செய்தியைக் கூறினார்கள்.

இராமானுசர் அச்செய்தியைக் கேட்டு, யஜ்ஞேசரிடம் செல்லும் நினைவைக் கைவிட்டு, சிஷ்யர்களோடு, ஏழையான பருத்திக் கொல்லையம்மாளின் வீட்டிற்குச் சென்றார். அப்போது வரதாசார்யர் உஞ்சவ்ருத்தி செய்வதற்கு அக்ஷய பாத்ரத்தை எடுத்துக் கொண்டு வெளியில் சென்றிருந்தார். பருத்திக்கொல்லை லஷ்மியம்மாள் என்னும் பெயருள்ள அவருடைய பத்னியாகிற மங்கைநல்லாள் யதிராஜரை வணங்கி பக்தியோடு ஆராதித்தாள்.

**பருத்திக்கொல்லை லஷ்மியின் ஆசார்யநிஷ்டை**

அவர்களுக்கு விருந்து படைக்க எண்ணங்கொண்டாள். என்னிடமோ ஒரு குந்துமணி நெல்கூட இல்லை. யதிராஜரோ பெருத்த ச்ரமத்துடனிருக்கிறார். என்ன செய்வேன்? கணவரோ உஞ்சவ்ருத்தி செய்யப் போய்விட்டார். அவர் தானியம் கொண்டு வந்தாலும் இவர்களுக்கு அது காணாதே என பலவாறு யோசித்து வேறு வழியின்றி, இந்த கிராமத்தில் வாழும் என்மேல் தவறான பிரியத்துடன் இருக்கும் பணக்கார வைச்யனிடம் சென்று சிஷ்யர்களை ஆராதிப்பதற்கான பொருட்களை வாங்கி வருகிறேன் என்று நினைத்தாள்.

**லஷ்மியின் ததியாராதனம்**

நற்குணமுடையவளும், நல்லொழுக்கமுடையவளு மான அம்மங்கைநல்லாள் அந்த வைச்யனுடைய வீட்டிற்கு விரைவில் சென்றடைந்து, அவனை நோக்கி, சிஷ்ய ஸமூஹத்தோடு கூடியவராய் எமது ஆசார்யர் எம் வீட்டிற்கு வந்திருக்கிறார். அவர்களுடைய ஆராதனத்திற்காக எல்லா

திரவியங்களையும், எல்லா சமையல் பாத்திரங்களையும் இப்போதே விரைவில் அனுப்புவீர்'' என்று கூறினாள்.

உடனே அந்த வைச்யன் வரதாசார்யரின் வீட்டிற்கு, அரிசி, பருப்பு, காய்கறிகள், பால், தயிர், நெய் முதலான வற்றை அனுப்பினான். யதிராஜரின் திருமுன்பே எல்லாப் பொருள்களையும் வைத்து, கைகூப்பியவனாய் நின்றான். இராமானுஜர் அந்த வஸ்துக்களையும், அந்தப் பதிவ்ரதை யையும் கடாக்ஷித்து, அவளுடைய ஆசாரஜ்ஞானம், ஒழுக்கம், பக்தி, சாஸ்த்ரஸாரஜ்ஞானம் ஆகியவற்றைக் கண்டு வியப்புற்ற நெஞ்சினராய், வினயத்தால் விளங்கா நிற்கும் அவளை நோக்கி ''பேரருளாளனான எம்பெருமானுடைய திருவாராதனத்தின் பொருட்டு, நீயே விரைவில் நீராடி சமையலைச் செய்வாய்'' என்று நியமித்தார். மேலும் தமது சிஷ்யர்களான சில பெரியவர்களை சமையல் செய்யத் துணையாயிருக்கும் படி நியமித்தார். தாமும் நீராடி, ஸ்ரீ இராமானுஜர் வரதனுக்கு திருவாராதனம் செய்து, அவ்வன்னத்தைப் படைத்து அமுது செய்தார். பக்தியோடு அளிக்கப் பெற்றதாய், (அதனாலேயே) அங்கேயே இனிது எழுந்தருளியிருந்து, அம்மங்கை நல்லா ளாலே உபசரிக்கப்பட்டு மிகவுகந்தார்.

## வரதாசார்யரின் ஆனந்தம்

உஞ்சவிருத்தி செய்து முடித்த வரதாசார்யர் வீட்டிற்கு எழுந்தருளினார். மனைவியிடமிருந்து நடந்த செய்தி முழு வதையும் அறிந்து மிகவும் பரபரப்படைந்தவராய், தமது ஆசார்யரான யதிராஜரை வணங்கி அவர் திருப்தியடைந் திருப்பதைக் கண்டு நல்லொழுக்கமுடைய தமது மனைவியை பலவாறு கொண்டாடி மகிழ்ந்தார்.

## வைச்யன் திருந்தியது

யதிராஜருடைய ஸ்ரீபாததீர்த்தத்தையும், சேஷ ப்ரஸாதத் தையும் அன்போடு எடுத்துக் கொண்டு, தம்பதிகளிருவரும் அந்த வைச்யனின் வீட்டிற்குச் சென்றனர். வைச்யனைத் திருத்துவதில் உறுதி கொண்டவளான லக்ஷ்மி, அந்தத் தீர்த்தப்ரஸாதங்களை அவனுக்கு அளித்தாள். அறிவு கெட்டுக்

கிடந்த அந்த வைச்யனுக்கு, அந்த ஸ்ரீ பாத தீர்த்தத்தைப் பருகியதாலும், அந்த சேஷப்ரஸாதத்தை உண்டாதாலும் நல்லறிவு ஏற்பட்டது.

அவன் - லஷ்மியைக் கைகூப்பி நின்று, "தாயே! எனக்கு நற்குணவதியான நீயே தாயும், தந்தையும், ரக்ஷகமுமா யிருக்கிறாய். அறிவு கெட்ட நான் காமவசப்பட்டு, உனது தன்மையை அறியாமல் உன்னிடம் கெட்ட எண்ணம் கொண்டேன். அதைப் பொறுத்தருள்வாய். உனது ஆசார்யரின் திருவடித் தாமரையில் என்னைச் சேர்ப்பித்து, நான் செய்த பாபங்களுக்கு ப்ராயச்சித்தம் செய்வித்து, அடியேனை எப்படி யாவது நல்வழிப்படுத்துவாய்" என்று சொன்னான்.

அவள் சொன்னது அனைத்தையும் கேட்டு வியப்புற்ற பருத்திக்கொல்லை அம்மாளும், அவனை உடனே அழைத்துச் சென்று யதிராஜரின் திருவடித்தாமரைகளில் சீடனாக ஸமர்பித்தார்.

## யஜ்ஞேசரின் வருத்தம் :

அஷ்டஸஹஸ்ரக்ராமத்திலிருந்த யக்ஞேசரோவெனில் யதிராஜரின் வரவை திடீரென்று கேள்விப்பட்டவுடன், அவருக்கு ஆராதனம் செய்வதற்காகப் பலவிதமான பொருள் களைச் சிறிது நேரத்தில் சேகரித்து, தனது உறவினர்களோடு கூடி நின்று, யதிராஜரின் வரவை எதிர்நோக்கிக் கொண் டிருந்தார். யதிராஜர் பருத்திக்கொல்லையம்மாள் வீட்டில் ஆராதிக்கப்படும் செய்தியை கேள்வியுற்ற யஜ்ஞேசர் நெஞ்சு மிகக் கலங்கி வருத்தமுற்றார். யதிராஜர் இருந்தவிடம் சென்று, அவரது திருவடித் தாமரைகளில் விழுந்து அழத் தொடங்கினார்!

## யதிராஜரின் நல்வார்த்தைகள்

ஆசார்யரான யதிராஜர் கருணையோடு திருக்கைகளால் யஜ்ஞேசரை வாரி எடுத்து, யக்ஞேசரை நோக்கி "யஜ்ஞேசரே! ஒரு வைஷ்ணவனுக்கு (1) பஞ்சஸம்ஸ்காரபூர்த்தி, (2) ஸ்ரீமந் நாராயணனை ஆராதிப்பது. (3) அர்த்த பஞ்சகத்தை அறிவது (4) ஆசார்யனுக்கு வசப்பட்டவனாய் வாழ்வது என்னும் நாலு

பெருமைகளும், இவற்றால் ஏற்படும் ஆத்மஹிதமான ஐந்தாவது பெருமையும் பாகவதர்களுக்குப் பணிபுரிந்தா லொழிய சித்திக்கமாட்டா.

புகழுக்கு ஆசைப்பட்டு நீர் ஆடம்பரத்துக்காகவே தர்மத்தைச் செய்கிறீர். யஜ்ஞேசரே! டம்பத்திற்காக தர்மம் செய்பவர்களின் வீட்டில் நாம் நுழையமாட்டோம். இவ் வுலகில் ஸாத்விகர்களாயிருப்பவர்களுடைய அன்னம் முதலானவற்றையே நாம் நம்முடைய பெருமாளுக்கு ஸமர்ப்பிப்போம்'' என்று கூறினார்.

யஜ்ஞேசர், கைகூப்பி நின்று, ''அபசாரங்களை மன்னித் தருளி என்னை கைக் கொண்டருள வேணும். தேவரீர் எழுந்தருளியதால் உண்டான ஆநந்தத்தினால், வந்திருந்த வைஷ்ணவர்களை மறந்து, தேவரீருடைய ஆராதனத்தின் பொருட்டு முயற்சி செய்து கொண்டிருந்து விட்டேன். என்னைக் கருணையோடு ரக்ஷித்தருள வேணும்'' என்று கூறினார்.

இதைக்கேட்ட யதிராஜர் அவரை நோக்கி உன்னிடம் வைஷ்ணவவிருந்தோம்பலைத் தவிர மற்ற எல்லா நற் குணங்களும் இருக்கின்றன. அதனால் இன்று தொடங்கிப் படிப்படியாக, இங்கு எழுந்தருளும் பாகவதர்களுக்கும், இங்கேயே நிலையாக எழுந் தருளியிருக்கும் (பருத்திக் கொல்லையம்மாள் போன்ற ஏழை) வைஷ்ணவர்களுக்கும் உகப்போடு நீ பணிபுரிய வேண்டும். உன் மனத்திற்கு இசைந்திருந்தால், அவர்களுக்கு தினந்தோறும் (வேண்டிய வற்றை) அளிக்க வேண்டும். இக்காரியத்தை ச்ரத்தையுடன் முயன்று நீ செய்ய வேண்டும்'' என்று அருளினார்.

## 14. திருவேங்கடமலை யாத்திரை

***படிகொண்ட கீர்த்தி இராமாயணமென்னும் பத்தி வெள்ளம்***
***குடி கொண்ட கோயிலிராமாநுசன் குணங் கூறும், அன்பர்***
***கடி கொண்ட மாமலர்த்தாள் கலந்துள்ளங்கனியும் நல்லோர்***
***அடி கண்டு கொண்டுகந்து என்னையுமாளவர்க் காக்கினரே.***
***(இராமாநுசனின் அடியார்களே எனக்கு நல்வழி காட்டினர்.)***

திருவேங்கட மலையின் தெற்கு திக்கில், திருமலைக்கு ஏறும் வழியில் எல்லாப் பாபங்களையும் போக்குவதாய், சிறந்ததான கபில தீர்த்தம் உள்ளது. அந்தத் தீர்த்தக்கரையில் நம்மாழ்வார் முதலான முனிவர் தலைவர்கள் பதின்மரும் திருமலையை எப்போதும் ஸேவித்துக் கொண்டு (அர்ச்சா ரூபத்துடன்) வாழ்கிறார்கள். அதனாலேயே அந்தக் கபில தீர்த்தத்திற்கு 'ஆழ்வார் தீர்த்தம்' என்னும் வேறு பெயரும், விளங்குகிறது. ஸ்ரீ இராமானுஜரும் அந்த ஆழ்வார்த் தீர்த்தக் கரைக்கு எழுந்தருளி, அந்தத் தீர்த்தத்தில் நீராடி, அங்கேயே சிலகாலம் வாழ்ந்தார்.

### விட்டலதேவன் ஆச்ரயித்தல்

அதற்குப் பின்-அந்த நாட்டை ஆளும் விட்டல தேவன் என்னும் அரசன் யதிராஜரின் பெருமையைக் கேள்விப்பட்டு ஸேவித்து மிகவும் வியப்புற்று, அவருக்கு அப்போதே சிஷ்யனானான். யதிராஜர்க்கு அன்புடன் பெரும் தனத்தையும், தொண்டைமண்டலத்திலுள்ள 'விலமண்டியம்' என்னும் முப்பது வயல்கள் கொண்ட கிராமத்தையும் காணிக்கையாக ஸமர்ப்பித்தான். யதீந்த்ரரும் அந்த க்ராமத்தைத் சிஷ்யர்களுக்கு அன்புடன் அளித்தார்.

'ஆழ்வார் தீர்த்தக்கரையிலேயே எழுந்தருளியிருக்கும் யதிராஜரிடம் அநந்தாழ்வான் முதலான வைஷ்ண வச்ரேஷ்டர்கள் அனைவரும் கூடி அவரை - வணங்கி, - ''ஜகதாசார்யரான எம்பெருமானாரே! சேஷசைலாதிபதியான திருவேங்கடமுடையானை மங்களாசாஸநம் செய்வதற்குத் திருமலையின் மேல் ஏறியருள வேணும். ஜகத்ப்ரபுவான திருவேங்கடமுடையானை தேவரீர் மங்களாசாஸநம் செய்தால் தான் அவன் உலகில் தடையற்ற ஐச்வர்யமுடையவனா வான்'' என்று விண்ணப்பித்தார்கள்.

### திருமலையேற மறுத்தல்

யதிராஜர் அவர்களுடைய அவ்வார்த்தையைக் கேட்டு, ''பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்கள் திருமலையை

ஆதிசேஷனாகவே எண்ணி அதன்மேல் ஏறாமல், அதை வணங்கி, இங்கேயே எழுந்தருளியிருந்து திருவேங்கட முடையானையும் திருமலையையும் மங்களாசாஸநம் செய்தனர். நமது பூர்வாசார்யர்களான ஆழ்வார்களாலே எந்தெந்த அநுஷ்டானங்கள் கைக்கொள்ளப்பட்டனவோ அவையே சிஷ்யனான என்னால் பின்பற்றப்படுகின்றன. ஆகையால், நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களை ஸேவித்துக் கொண்டு இங்கேயே வாழ்கிறேன்'' என்று கூறினார்.

அவ்வார்த்தையைக் கேட்ட அநந்தாழ்வான் ''யதிராஜரே! தேவரீர் திருமலையில் ஏறாவிடில், உமது சிஷ்யர்களான எங்களாலும் எப்போதும் அது பின்பற்றப்படும்'' என்று கூறினார். அவ்வாக்யத்தைக் கேட்ட யதிராஜர், அவ்வார்த்தை யையும், ஆழ்வார்களின் அநுஷ்டானத்தையும் நன்கு ஆராய்ந்து, 'திருமலையில் ஏறுவதா ஏறலாகாதா' என்று சஞ்சலப்படும் நெஞ்சுடையவராய்ச் சிந்தித்து பின் திருமலை யில் ஏறுவதற்குத் திருவுள்ளங் கொண்டார்.

## பெரிய திருமலை நம்பி எதிர்கொண்டழைத்தல்

அதற்குப்பின் யதிராஜர் திருவேங்கடமலையை வணங்கித் திருமலையில் ஏறலுற்றார். பெரிய திருமலைநம்பியும், திருவேங்கடமுடையானுடைய மிகப்பாவமான தீர்த்த, ப்ரஸாதங்களை எடுத்து வந்து, தமது சிஷ்யரான ஸ்ரீ இராமானுஜரை எதிர்கொண்டழைத்தார். பெரிய திருமலை நம்பியின் திருவடிகளை வணங்கி, தீர்த்தப்ரஸாதங்களை ஏற்றுக்கொண்டு, ''ஆசார்யரே! அடியேனுக்கு ப்ரஸாதம் கொண்டு வருவதற்கு தேவரீரே எழுந்தருள வேண்டுமா? சிறியார் எவரையாவது அனுப்பியிருக்கக்கூடாதோ?'' என்று நம்பியிடம் கேட்டார். அவ்வார்த்தையைக் கேட்ட நம்பி ''திருவேங்கடமலையில் எல்லா வீதிகளிலும் நீண்ட நேரம் நன்கு தேடிப் பார்த்தபோதிலும், எங்கும் என்னைவிடச் சிறியாரைக் காணவில்லை'' என்று யதிராஜரிடம் கூறினார். இதைக்கேட்ட யதிராஜர் மிகவும் வியப்புற்றார்.

## திருமலையப்பனை ஸேவித்தல்

*பின்னர் அநந்தாழ்வானால் அமைக்கப்பெற்ற (இராமாநுசன் எனும் திருநாமமுடைய) பெரிய நந்தவனத்தையும் கண்டு வியப்படைந்தார். அநந்தாழ்வானிடம் பேரருளைப் பொழிந் தார். மஹாவராஹப்பெருமானை ஸேவித்து "மார்கழி மாதத்தில் ஸுக்லபக்ஷத்தில் துவாதசியில் அருணோதய வேளையில், ஸ்வாமிபுஷ்கரிணியில் தீர்த்தஸ்வீகாரம் செய்து, திருவேங்கட முடையானுடைய திருக்கோயிலுள் பிரவேசித்தார்.*

*ஆநந்தநிலயமெனும் திவ்யவிமானத்தையும் ஸேவித்துப் பேரானந்தமுற்றவராய், (அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும் குலசேகரன் படியைக் கடந்து) திலதமுலகுக்காய் நின்ற, தண்ணார் வேங்கடவிண்ணோர் வெற்பனை, பாதாதி கேசாந்தமாக அநுபவித்து 'அலர்மேல் மங்கையுறை மார்பா! புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்" என்று அடிக் கீழமர்ந்து புகுந்து, பூவார்கழல்களைக் கிட்டி அநுபவித்து அப்பெருமான் திருமுன்பே கைகூப்பி நின்றார்.*

## ஸ்ரீ ராமாயணார்த்தம் கேட்டல்



திருவேங்கடமலை : மலையடிவாரம், உடையவர் திருமலை நம்பிகளிடம்
ஸ்ரீ ராமாயண காலக்ஷேபம் கேட்ட இடம்

ஸ்ரீய:பதியான அப்பெருமான் "உமக்கும். உமது ஸம்பந்தம் பெற்றவர்களுக்கும், உபயவிபூதிச் செல்வத்தையும் (நம் தெற்கு வீடான திருவரங்கத்திலே) தந்தோமே நாம், அதில் ஐயமில்லை என்பதை மூன்று முறை கூறுகிறோம்" என்று திருப்பவளச் சோதிவாய் திறந்து அருளிச் செய்தார். பின்னர் திருமலையிலிருந்து இறங்கி, மலையடிவாரத்தில் ஸ்ரீ ராமாயணார்த்தத்தைக் கேட்டுக் கொண்டு ஒரு வருஷம் வாழ்ந்தார் யதிராஜர்.

## கோவிந்தரின் ஆசார்ய பக்தி

திருமலைநம்பியின் திருமாளிகையில் அன்போடு தினந்தோறும் கைங்கர்யம் செய்துவரும் கோவிந்தரை அப்போது கண்ட யதிராஜர் மிகவும் உகப்படைந்தார். திருமலை நம்பிக்குப் படுக்கை விரித்த பிறகு கோவிந்தர் அதில் படுத்துவிட்டு எழுந்திருப்பதை யதிராஜர் ஒருநாள் பார்த்து, இதை துர்க்குணமாக எண்ணி, (கோவிந்தரைத் திருத்து வதற்காக) திருமலைநம்பியிடம் விண்ணப்பிக்க திருமலை நம்பியும் கோவிந்தரைப் பார்த்து, "எனக்காக விரிக்கப்பட்ட படுக்கையில் நீ படுத்தாய் என்று கேள்விப் பட்டேன். இப்படிச் செய்வது தக்கதா? இதனால் என்ன பலனை அடைவாய் தெரியுமா?" என்று கேட்டார்.

அதைக்கேட்ட கோவிந்தர் "ஆசார்யரின் படுக்கையில் படுத்தவனுக்கு நரகமே பலனாகும்." "இருப்பினும் தேவரீருக்குத் தடங்கலில்லாமல் தூக்கம் விளையுமாகில், எனக்கு நரகமும் நன்மையே" என்று பதில் அளித்தார். இதைக்கேட்ட யதிராஜர் - ஆசார்யருடைய படுக்கையில் படுத்தது ஆசார்ய பக்தியினாலேயே என்று உணர்ந்து மிகவும் உகந்த நெஞ்சினரானார்.

ஒருநாள் ஸ்ரீ இராமானுஜர் திருமலைநம்பியின் திருநந்தவனத்திற்குச் சென்றபோது, அங்கு ஒரு பாம்பின் வாயிலே கோவிந்தர் கையைவிட்டு எடுப்பதையும், உடனே குளித்துக் கைங்கர்யத்துக்காக முயல்வதையும் கண்டு, கோவிந்தரைப் பார்த்து, நீர் செய்த காரியம் என்னவென்று உரைப்பீர்!"

என்று கேட்க, கோவிந்தரும் யதிராஜரே! நாவிலே முள் தைத்து மிகவும் வருந்தி நிற்கும் ஒரு பாம்பைக் கண்டு, அதன் வாயிலே கைவிட்டு முள்ளை எடுத்துவிட்டுக் குளத்தில் குளித்து வந்தேன்'' என்று பதிலுரைத்தார். யதிராஜரும் 'இவருடைய ப்ராணி தயை எத்தகையது!' என்று வியப்புற்றார்.

### கோவிந்தரை தானமாகப் பெறுதல்

அதற்குப்பின் அர்த்தத்தோடு கூடிய ராமாயணத்தை திருமலை நம்பியிடமிருந்து முழுவதையும் கேட்டறிந்த யதிராஜர், ஆசார்யரான அவரை வணங்கிப் பூசித்து, ''ஆசார்யரே! திருவரங்கத்திற்குச் செல்ல அடியேனுக்கு விடை கொடுத்தருள வேணும்'' என்று நம்பியிடம் விண்ணப்பித்தார். கருணைக்கடலான நம்பியும் யதிராஜரைக் கடாக்ஷித்து, 'வெகு தூரத்திலிருந்து எழுந்தருளியிருக்கும் தேவரீருக்கு அடியேன் என்ன ஸமர்ப்பிப்பேன்?'' என்று கூறினார்.

எம்பெருமானார் அவ்வார்த்தையைக் கேட்டு, ஆசார்யோத்தமரான நம்பியைக் குறித்து, ஆசார்யரே! தேவரீர் இவ்வண்ணம் திருவுள்ளம் பற்றினால் கோவிந்தரை எனக்கு அளிக்க வேணும்'' என்று விண்ணப்பித்தார். அதற்குப் பெரிய திருமலை நம்பி மிகவுகந்தவராய் கோவிந்தரை யதிராஜருக்கு (நீர்) தாரை வார்த்து தானம் செய்து கொடுத்தார்.

ஆசார்யரான திருமலை நம்பிக்கு கைங்கர்யம் செய்யப் பெறாமையால் கோவிந்தருக்கு முகம் முதலான அவயவங்கள் வெளுத்துவிட்டன. இப்படி மஹா புருஷரான கோவிந்தருக்கு உடம்பு வெளுத்துவிட்டதைக் கண்ட யதிராஜர், ''கோவிந்தரே! திருமலைக்குச் சென்று திருமலைநம்பியை வணங்கி திரும்பி வருவீர்'' என்று உரைத்தார். உடனே (இரண்டு) ஸ்ரீவைஷ்ணவர்களோடு கூட கோவிந்தரை திருமலைக்கு அனுப்பிவிட்டுத் காஞ்சியிலே எழுந்தருளியிருந்தார்.

கோவிந்தரும் திருமலைக்குச் சென்று திருமலை நம்பியின் திருமாளிகை வாயிலை அடைந்தார். அங்குள்ளவர்கள் கோவிந்தர் வந்திருப்பதை நம்பிக்கு விண்ணப்பிக்க அதைக்

கேட்ட நம்பி மிகக் கோபம் கொண்டவராய், ''வைஷ்ண வர்களே! 'பித்தனே! திரும்பிப் போ' என்று கோவிந்தரிடம் சொல்லுவீர்களாக'' என்று உரைத்தார்.

அதைக்கேட்ட நம்பியின் தேவிகள் நம்பியைப் பார்த்து, ''வெகு தூரத்திலிருந்து வந்திருப்பவனாய், நம் அடியானான கோவிந்தனுக்குத் தீர்த்த ப்ரஸாதங்களாவது கொடுக்கக் கூடாதா?'' என்று விண்ணப்பித்தாள். மனைவியின் இவ் வார்த்தையைக் கேட்ட நம்பி, 'விற்ற பசுவுக்குப் புல்லிடு வாருண்டோ?' என்று கூறிவிட்டார். கோவிந்தரும் ஆசை யற்றுப் போனவராய், ஆசார்யரின் திருமாளிகையை வணங்கி, உடனே திருமலையிலிருந்து புறப்பட்டுக் காஞ்சிபுரத்தைச் சென்றடைந்தார்.

கோவிந்தர் திருமலைக்குப் போய்வந்த செய்தியை கேட்ட யதிராஜர், வியப்புற்றவராய், திருமலைநம்பியின் ஸர்வஜ்ஞத் வத்தைக் கொண்டாடி, தமது வாத்ஸல்யம் முதலிய குணங் களைக் காட்டி, கோவிந்தருடைய வருத்தத்தை தீர்த்து. கோவிந்தரோடு ஸ்ரீரங்கத்திற்குப் புறப்பட்டார். அப்போது 'அஷ்டஸஹஸ்ரம்' எனும் கிராமத்தை அடைந்து, யஜ்ஞேசரால் அளிக்கப்பட்ட ஆராதனத்தை ஏற்றுக்கொண்டு ஸ்ரீரங்கத்தை அடைந்தார்.

### 15. எம்பார்

*போந்ததென் னெஞ்சென்னும் பொன்வண்டு, உனதடிப் போதிலொண்சீ*
*ஆந்தெளிதேனுண் டமர்ந்திட வேண்டி, நின்பாலதுவே*
*ஈந்திட வேண்டு மிராமாநுச விதுவன்றியொன்றும்*
*மாந்தகில்லா(து), இனி மற்றொன்று காட்டி மயக்கிடலே.*
*(இராமானுச! நின் திருவடிகளிலேயே என்னை இருத்து.)*

### கோவிந்தரின் ஆசார்ய நிஷ்டை

யதிராஜருடைய கோஷ்டியில் ஆசார்யரையே தெய்வ மாகக் கொண்ட கோவிந்தருக்கு அந்த யதீந்த்ரருடைய திரு மேனியின் அநுபவமும், அவருடைய திருவடிகளில் கைங்கர்யமும், அவரோடு உசாவுவதும் பெருத்த அநுபவமாக



எம்பார்

ஏற்பட்டு வந்தன. தூக்கத்தையும், சோம்பலையும் வென்ற வராய், எப்போதும் ஆசார்ய கைங்கர்யம் செய்து கொண்டு எம்பெருமானார் கோஷ்டியை, அநுபவித்துக்கொண்டு அவர் ஸந்நிதியிலேயே வாழ்ந்து வந்தார்.

அப்போது ஒரு சமயம் கோஷ்டியிலே யதிராஜரும், சிஷ்யர்களும், கோவிந்தரின் வைராக்யம், ஆசார்யபக்தி முதலான நற்குணங்களைக் கண்டு வியப்புற்று, அவரைத் புகழ்ந்தனர். கோவிந்தர் அப்புகழுரையைக் கேட்டு, ''இந்தத் துதிகள் எனக்குப் பொருந்தியவையே'' என்று ஆசார்யன் திருமுன்பே மிகவும் தற்புகழ்ச்சி செய்து கொண்டார். அதைக் கண்ட யதிராஜர், ''உம்மை மற்றவர்கள் க்ருபையோடு புகழ்ந்துரைத்தால், நீர் நைச்யாநுஸந்தானம் செய்ய வேண்டி

யிருக்க, தற்புகழ்ச்சி செய்து கொண்டீரே; கோவிந்தரே! அறிவாளியான உமது ஸ்வரூபத்துக்கு இது தகுமா?'' என்று கோவிந்தரைக் கேட்டார்.

அதற்கு கோவிந்தர் காளஹஸ்தியிலே சடையை தரித்துக் கொண்டு உடம்பெங்கும் சாம்பலைப் பூசிக்கொண்டு, 'உள்ளங்கைகொணர்ந்த நாயனார்' எனும் பெயரை வைத்துக் கொண்டு, அவர்களுடைய மத ஒழுக்கத்தில் ஈடுபட்டிருந்தேன். பாலில் கலந்த நீர் அதன் வர்ணத்தையே பெறுவதுபோலே அவர்களை ஒத்தவனாய் இருந்தேன்.

யதிராஜரே! நாராயண ஸ்வரூபியாய் தேவரீருடைய திறமையாலே (ஹம்ஸம் பாலையுண்டு நீரைப் பிரிப்பது போலே) அவர்களிட மிருந்து பிரித்தெடுக்கப்பட்டு தேவரீருக்கு அடிமையானேன். தேவர்களுக்கும் கிட்டாத இந்தக் கருணை அடியேனுக்கு கிட்டியதாலே அடியேன் என்னையே துதித்துக் கொள்கிறேன். இது உம்முடைய துதியே யன்றோ!'' என்றார்.

இதைக்கேட்ட ஸ்ரீஇராமானுஜர் 'நல்லீர், நல்லீர்' என்று உகந்தவராய், ''உம்முடைய குணங்கள் நமக்கும் உண்டாம்படி உமது குற்றமற்ற நெஞ்சாலே எம்மை எப்போதும் அன்புடன் நினைப்பீராக; அதுவே எனக்குப் போதும்'' என்று கூறி கோவிந்தரை வாரி எடுத்து அணைத்துக் கொண்டருளினார்.

### கோவிந்தரின் ராஸிக்யமும், குருபக்தியும்

ஒருசமயம் விடியற்காலை வேளையிலே, காலையில் செய்யவேண்டிய நித்யகர்மங்களைச் செய்யாமல் ஒரு வேசி யின் வீட்டு வாசலில் கோவிந்தர் நிற்பதைக் கண்டு, ஒருவர், எம்பெருமானாரிடம் விண்ணப்பித்தார். யதிராஜர் அதைக் கேட்டு, 'தாஸியின் வீட்டு முன்னால் நீ எதற்காக நின்றாய்?'' என்று கோவிந்தரைக் கேட்டார்.

''யதிராஜரே! தேவரீரைப் பற்றிய செவிக்கினிய தாலாட்டுப் பாடல்களை, பாடவல்லார் பாடுவதை அங்கு கேட்டேன். தேவரீருடைய குணாநுபவத்தால் கட்டுண்டு மேலே செல்லமாட்டாமல் அங்கேயே நின்றேன்'' என்றார்.

தாலாட்டுப் பாடல் பாடப்பட்டது உண்மையே என்று அறிந்து இவருடைய குருபக்தியை நினைத்து யதிராஜர் வியப்பை அடைந்தார்.

**வைராக்யம்**

ஒரு முறை கோவிந்தரின் தாய், ''கோவிந்தரே! உமது மனைவி இப்போதே ருதுமதியாக (புஷ்பவதியாக - பூப்படைந்தவளாக) ஆனாள்'' என்று கூறினாள். அதைக் கேட்டு கோவிந்தர் தம் தாயைக் குறித்து, ''அம்மா! யதிராஜரை விட்டு நான் எப்போது தனியாய் ஏகாந்தத்தில் இருக்கிறேனோ அப்போது என் மனைவியை எனக்குக் காட்டுவாய்'' என்று கூறினார். நீண்ட நாள் அவர் சொன்ன சமயத்திற்குக் காத்திருந்தும் அக்காலம் கிடைக்கப்பெறாமல், அந்தத் தாயார் யதிராஜரிடம் வந்து அனைத்தையும் சொன்னாள்.

யதிராஜர் கோவிந்தரைக் கூப்பிட்டு சாஸ்த்ர விதிப்படி உமது மனைவிக்கு ருதுகாலத்தில் ருதுசாந்தியைச் செய்வீராக. இருள் இருக்குமிடம் தேடி அவளோடு ஒரே படுக்கையில் சயனிப்பீராக'' என்று கூறினார். ஆசார்யருடைய அந்த வார்த்தையை ஏற்றுக்கொண்ட கோவிந்தர் வீட்டிற்கு வந்து மனைவியோடு படுக்கையில் வீற்றிருந்து காமத்தை வென்றவ ராகையாலே அவ்விரவு முழுவதும் அவளுக்கு ஜ்ஞாநம், பக்தி, வைராக்யம் ஆகிய அனைத்தையும் உபதேசித்தார்.

மணாட்டுப் பெண்ணிடமிருந்து இவையனைத்தையும் தெளிவாகக் கேட்டறிந்து கவலையும், வருத்தமும் கொண்ட தாயார் தம் பிள்ளையைப் பார்த்து, ''கோவிந்தா! சாஸ்திரமறிந்த நீ இப்படிச் செய்யலாமா?'' என்று கேட்டாள். தாய் வார்த்தையைக் கேட்ட கோவிந்தர், ''தாயே! ஆசார்யருடைய கருணையால் நிறைந்த ஒளியோடு அந்தர்யாமியான எம் பெருமான் ப்ரகாசித்துக் கொண்டிருக்கும் போது, காமம், ஆசை முதலானவற்றை விளக்கும் இருள் என் நெஞ்சில் தென்பட வில்லையே! என்று பதிலுரைத்தார். தன் பிள்ளையின் இந்த நடத்தையை கண்டு மிக வருந்தியவளாய், யதிராஜருக்கு, அதை விண்ணப்பித்தாள்.

எதிராஜரும் அதைக் கேட்டு கோவிந்தரை அழைத்துக் கொண்டு வரச்சொல்லி, ''வைஷ்ணவரே! இரவிலே நீர் என்ன (நல்ல) காரியத்தைச் செய்தீர்?'' என்று புன்சிரிப்போடு கேட்டார். அதற்கு கோவிந்தர்- ''இருளைத் தேடி நீ உன் மனைவியை அடைவாய்' என்று தேவரீரால் நியமிக்கப் பெற்றது. அந்தர்யாமியான எம்பெருமான் எப்போதும் ப்ரகாசித்துக் கொண்டிருக்கையில் நான் எங்குமே இருளைக் காணவில்லையே'' என்று விண்ணப்பித்தார்.

**ஸந்யாசம் அளித்தல்**

கோவிந்தரின் அவ்வார்த்தையைக் கேட்டு, யதிராஜர் மிகவும் திருப்தியுடன் உகப்படைந்து வியப்புற்றவராய், கோவிந்தரைக் நோக்கி கோவிந்தரே! க்ருஹஸ்தாச்ரம தர்மத் தைக் கடைப்பிடிக்கும் பெரியவர்களுக்கு சாஸ்த்ரங்களில் அநுமதிக்கப்பட்டுள்ள பத்னிபோகம் முதலானவற்றில் உமக்கு வைராக்யம் ஏற்பட்டு விட்டதாகில் நீர் உடனே ஸந்யாஸத் தைக் கைக்கொள்ள வேண்டும்'' என்று கூறி பேரருளுடன் ஸந்யாஸத்தை அளித்தார்.

**எம்பார் என்னும் திருநாமம் அளித்தல்**

(கோவிந்தருடைய ஜ்ஞாநபக்திவைராக்யங்களைக் கண்டு உகந்த) எதிராஜர் கோவிந்தருக்கு எம்பெருமானார் என்னும் தம் திருநாமத்தையே இட்டருளினார். அதைக் கண்டு பயந்த கோவிந்தர் கைகூப்பியவராய் யதிராஜரைக் குறித்து ''ஆசார்யரே! தேவரீரை மூவுலகினரும் எம்பெருமா னார் என்றே அறிந்திருக்கின்றனர். லோகாசார்யரான தேவரீர் ஆதிசேஷனின் அம்சமாகவே இருப்பவர் என்பதில் ஐய மில்லை. பாபியான எனக்கு முக்தியளிப்பதான எம்பெரு மானார் என்னும் திருநாமம் எப்படிப் பொருந்தும்? ஆசார்ய னுக்கும், சிஷ்யனுக்கும் ஒரே பெயரை வைப்பது இவ் வுலகில் கொண்டாடப்படுவதில்லை. யஜ்ஞமூர்த்திக்கு ஏற்பட்டது போல் எனக்கும் ஸ்வரூப ஹாநியே ஏற்படும். ஆகையால் தேவரீருடைய திருநாமத்தைத் தாங்குவதற்கு எனக்கு சக்தியில்லை'' என்று கூறினார்.

இவ்வாக்யத்தைக் கேட்டு, ஸ்ரீ இராமானுஜர் மிக வுகந்தவராய், பெருமானார்' என்னும் பதத்தின் முதலிலும், முடிவிலும் இருக்கும் 'ப்' 'ஆர்' என்னும் அக்ஷரங்களைச் சேர்த்து எம்பெருமானார் என்பதற்குப் பதிலாக 'எம்பார்' என்னும் தமிழ் நாமமாக ஆக்கி கோவிந்தருக்கு அருளுடன் அளித்தார். அது தொடங்கி கோவிந்தருக்கு 'எம்பார்' என்னும் திருநாமம் வழங்குவதாயிற்று.

ஸ்ரீ யதிராஜனின் குணாநுபவமும் அவர் திருமேனியில் ஈடுபாடுமே கோவிந்தருக்கு ''உண்ணுஞ்சோறு, பருகு நீர், தின்னும் வெற்றிலையுமெல்லாம்'' என்ற நிலையில் எம்பெருமானார் வடிவழகிலீடுபட்டு இயற்றிய பாசுரம்.

*''பற்பமெனத் திகழ் பைங்கழலுன்றன் பல்லவமே விரலும்*
*பாவனமாகிய பைந்துவராடை பதித்த மருங்கழகும்*
*முப்புரிநூலொடு முன்கையிலேந்திய முக்கோல் தன்னழகும்*
*முன்னவர் தந்திடு மொழிகள் நிறைந்திடு முறுவல் நிலாவழகும்*
*கற்பகமே விழி கருணைபொழிந்திடு கமலக் கண்ணழகும்*
*காரிசுதன்கழல் சூடிய முடியும் கனக நற்சிகை அழகும்*
*எப்பொழுதும் யதிராசன் வடிவழகென்னி தயத்துளதால்*
*இல்லையெனக் கெதிரில்லையெனக் கெதிரில்லையெனக்*
*கெதிரே.*

**16. ஸ்ரீபாஷ்யம் சாதித்தல்**

*வாழ்வற்றது தொல்லை வாதியர்க்கு, என்றும் மறையவர் தம்*
*தாழ்வற்றது தவம் தாரணி பெற்றது, தத்துவ நூல்*
*கூழற்றது குற்றமெல்லாம் பதித்த குணத்தினார்க்கு அந்*
*நாழற்றது, நம்மிராமாநுசன் தந்த ஞானத்திலே.*
*(இராமானுசன் தந்த ஞானத்தின் பயன்.)*

**சாரதா பீட யாத்ரை**

பேரறிவாளரான எதிராஜர் ''யாமுநாசார்யர் பரமபதம் எழுந்தருளியபோது திருவரங்கத்தில் 'உலகை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீ பாஷ்யத்தைச் செய்வேன் என்று ஆணையிட்டோம். ஆகையால் ஸ்ரீ பாஷ்யத்தை இப்போதே நாம் அவச்யம்

இயற்ற வேண்டும்'' என்று எண்ணி, ப்ரஹ்மசூத்ரப் பொருளை ஆராய்ந்து வரைய விரும்பினார். நம்மாழ்வாரின் பாசுரங்களின் ஆழ்பொருள்களை ஆராய்ந்தார். இவர் பாஷ்யத்தை இயற்றும் முன்பே பலர் விரிவுரைகளை எழுதியிருந்தார்கள். அவை,

1) **போதாயந பாஷ்யம் :** இது வியாசபகவான் சீடர்களில் ஒருவரும் மகரிஷியுமான போதாயநர் எழுதியது.

2) **திரமிட பாஷ்யடம் :** திரமிடாசார்யர் எழுதியது.

3) **ப்ரமாணந்தி :** ப்ரஹ்ம சூத்திரத்திற்கு வார்த்திகா என்ற உரை எழுதியிருக்கிறார்.

4) குஹா தேவாசாரியர் பாஷ்யம்

5) ஆசார்ய பாருசி பாஷ்யம்

6) **பகவத் ஸ்ரீவத்லாங்கமிச்ர பாஷ்யம்:** இவரது நூல் ப்ரஹ்மசூத்ர பாஷ்யங்களில் பழமையானது என்பர்.

7) **நாதமுனிகள் :** விசிஷ்டாத்வைத தத்துவத்தின் யோகரஹஸ்யம், ந்யாயதத்வம் முதலிய நூல்களைப் புனைந்தவர்.

8) **யாமுனாசார்யர் அல்லது ஆளவந்தார் :** ஸம்வித் ஸித்தி, ஈசுவரஸித்தி, ஆத்மஸித்தி ஆகமப்ரமாண்யம் முதலிய நூல்களை வகுத்தவர்.

இவற்றில் ஜ்ஞாநியான யதிராஜர் 'போதாயநருடைய ப்ரஹ்ம ஸூத்ர வ்ருத்தி க்ரந்தத்தை ஸேவிக்காமல் உபநிஷத்துக்களுக்குப் பொருளுரைப்பது இயலாது' என்று நிச்சயித்து, கூரத்தாழ்வானோடு (காஷ்மீரத்திலுள்ள) சாரதா பீடத்துக்குச் சென்றார்.

சாரதா பீடத்தில் உள்ள வித்வான்கள் அனைவரையும் வாதத்தினால் ஜயித்தார். சரஸ்வதி தேவி எதிகட்கிறைவரைக் கண்டு, 'கப்யாஸ ச்ருதியின் பொருளைச் சொல்லுவீர்' என்று கேட்டாள். பேரறிவாளரான யதிராஜர் அவளைப் பார்த்து 'கம்' எனப்படும் ஜலத்தை பானம் பண்ணுவதால் 'கபி' என்று

ஸூர்யன் கூறப்படுகிறான். அவனாலே மலர்விக்கப்படும் தாமரை 'கப்யாஸம்' என்று ஓதப்படுகிறது. 'அந்தத் தாமரையை யொத்த இரு கண்கள் விஷ்ணுவுக்கு உள' என்பது 'தஸ்ய யதா கப்யாஸம் புண்டரிகம் ஏவ மஷிணி (சாந் 1-6-6) என்னும் வேதவாக்கியத்தின் பொருளாகும்'' என்று கூறி, சாரதா தேவியை உகப்பித்தார். உகந்தவளான அவளால் கொடுக்கப் பட்ட போதாயந வ்ருத்தியைக் எடுத்துக் கொண்டு அவர் திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார்.

சாரதா பீடத்தில் உள்ள, வித்வான்கள் அங்குள்ள ஸ்ரீ கோசங்களைப் பரிசோதிக்கும் போது, வ்ருத்தி க்ரந்தம் அங்கு இல்லாமல் இருப்பதைக் கண்டு, யதிராஜரே அதைக் கொண்டு போயிருக்க வேண்டும் என்று ஐயமுற்று, யதிராஜரிடமிருந்து பலாத்காரமாக வ்ருத்தி க்ரந்தத்தைப் பிடுங்கிக் கொண்டு சாரதா பீடத்துக்குத் திரும்பி விட்டனர்.

அப்போது மிக வருந்திய யோகீந்த்ரரைக் கண்டு கூரத் தாழ்வான், ''யதிராஜரே! இப்போது வருந்த வேண்டாம். இரவு நேரங்களில் அடியேனால் அந்த க்ரந்தம் முழுவதும் ஸேவிக்கப்பட்டு விட்டதாகையால் தேவரீருடைய கடாக்ஷத் தால் இப்போதும் என் நெஞ்சில் உள்ளது'' என்று சொன்னார். ஸ்ரீ இராமானுஜர் அந்த வாக்யத்தால் மிகவுகந்தவராய், ஆழ்வானோடு விரைவில் ஸ்ரீரங்கத்தை அடைந்தார்.

யதிராஜர் கூரத்தாழ்வாரைப் பார்த்து, 'கூரேசரே! நான் பாஷ்ய வாக்யத்தைச் சொல்லும்போது உம்முடைய திரு வுள்ளத்திற்கு அது ஸரி எனப்பட்டால் எழுதும். இல்லை யேல் மௌனமாயிரும்' என அருளினார். கூரத்தாழ்வானும் 'அப்படியே' என்று இசைந்து ஸ்ரீ பாஷ்யத்தை எம்பெரு மானார் சொல்லச் சொல்ல விரைவாக எழுதிக் கொண் டிருந்தார்.

அப்போது ஒரு நாள் யதிராஜர் ஜீவனுக்கு பகவத் சேஷத்வமில்லாத ஜ்ஞாத்ருத்வத்தை மாத்திரம் சொல்லும் வாக்யம் ஒன்றைக் கூறினார். யதிராஜர் கூறிய அவ்வாக்யத்

தைக் கூரத்தாழ்வான் எழுதாமல் இருந்தார் . யதிபதியோ, அவரை 'எழுதும்; எழுதும்' என்று மறுபடியும் மறுபடியும் நிர்ப்பந்தித்தார். கூரத்தாழ்வான் அப்போதும் மௌனமாய் எழுதாமலிருந்தார். அதைக்கண்டு கோபங் கொண்ட யதிராஜர் கூரத்தாழ்வானைப் பார்த்து, ''ஆழ்வான்! அப்படியானால் நீரே ஸ்ரீபாஷ்யம் எழுதும்'' என்று உரைத்துவிட்டு, சென்றார்.

அதற்குப் பின் யதிராஜர் அவர் வாக்யார்த்தத்தை மறுபடியும் மறுபடியும் ஆராய்ந்து, (கூரத்தாழ்வான் மௌன மாயிருந்ததின் காரணத்தை உணர்ந்து) கூரத்தாழ்வானை வரவழைத்து ஸ்ரீ பாஷ்ய நிர்மாணத்தை மறுபடியும் தொடங் கினார். பகவத்சேஷத்வத்தோடு கூடிய ஜ்ஞாத்ருவத்தை ஜீவனுக்குச் சொல்லும் வாக்யத்தை யதிராஜர் அருள, அறிவாளியான, கூரத்தாழ்வான் அதை விரைவில் எழுதினார்.

வேதார்த்த நிரூபணமாக பாஷ்யத்தை அருளிச் செய்து அதனை சாரதா பீடத்துக்கு அனுப்பி உலகோர் அறிய அதை நன்கு வெளிப்படுத்த வேண்டும் என்று யதிராஜர் திருவுள்ளங் கொண்டார்.

உடனே அங்கு கூடியிருந்த கிடாம்பியாச்சான், கிடாம்பிப் பெருமாள் முதலான ஸ்ரீவைஷ்ணவர்களிடம் ஸ்ரீ கோசத்தை கொடுத்தனுப்ப, அவர்க்கும் அப்படியே கொண்டு சென்று சாரதா பீடத்தை எய்தினர்.

ஸரஸ்வதியும் அதைக் கண்டு மகிழ்ந்து அந்த ஸ்ரீ கோசத்தை தன் முடிமேற் கொண்டு பாராட்டி உடையவருக்கு 'ஸ்ரீ பாஷ்யகாரர்' என்று திருநாமம் சார்த்தி உபசாரங்களுடன் அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பி மகிழ்ந்தாள்.

உலகத்துக்கு அருள் புரிவதற்காக யதிராஜரான ராமாநுஜர் பேரருளோடு ஸ்ரீபாஷ்யத்தையும், வேதாந்த தீபத்தையும் வேதாந்த ஸாரத்தையும், வேதார்த்த ஸங்க்ரஹத்தையும், கீதாபாஷ்யத்தையும் சாஸ்த்ரங்களையொட்டிய மிகத் தெளி வான முறையில் இயற்றி, ஸ்ரீயாமுநாசார்யரின் முதல் மனக் குறையைப் போக்கினார்.

## திக்விஜயத்துக்கு புறப்படுதல்

இனி, எல்லா திக்குகளிலும் சென்று திக் விஜயம் செய்து, ஆங்காங்குள்ள திவ்யதேசங்களை மங்களாசாஸநம் செய் வதற்காக, - சிஷ்யர்கள் புடைசூழ, திருவரங்கத்திலிருந்து சோழ மண்டல யாத்திரைக்குப் புறப்பட்டார்.

## சோழதேச திக் விஜயம்




சோழ மண்டலத்திலுள்ள திருக்குடந்தை முதலான திவ்யதேசங்களை மங்களாசாஸனம் செய்து அங்குள்ள பண்டிதர்களை சாஸ்த்ர வாதம் செய்து ஜயித்து, அவர்களை சிஷ்யராக்கிக் கொண்டு யதிகட்கிறைவர் பாண்டிய மண்டலத் திலுள் நுழைந்தார்.

## பாண்டிய மண்டல திக் விஜயம்

பாண்டிய நாட்டையடைந்து அங்குள்ள திவ்ய தேசங் களை ஒவ்வொன்றாக மங்களாஸாஸனம் செய்து, அங்குள்ள பண்டிதர்களை ஜயித்து திருக்குருகூர் என்னும் ஆழ்வார்

திருநகரியை அடைந்தார். அவ்வூரில் (அர்ச்சாரூபியாக) எழுந்தருளியிருக்கும் நம்மாழ்வாரை மங்களாஸாஸனம் செய்தார். ''கலியும் கெடும் கண்டு கொண்மின்'' (திருவாய் மொழி 5 - 2 - 1) என்று முன்பு நாம் வரப்போகிற காலத்தின் விஷயமாகச் சொன்ன இவரை (இராமாநுசனை) காணப் பெற்றோமே! என்று நினைத்த ஆழ்வார் உடையவரிடத்தில் அளவு கடந்த அன்புடையவரானார்.

அப்போது யதிராஜர் ''குரைகழற்கு பாதுகமாய் கூடினான் வாழியே'' என்கிறபடி ஆழ்வார் திருவடிகளுக்கு பாதுகை போல பொருந்தி நின்று ''இன்று தொடங்கி திருவடி நிலைகளுக்கு என்றும் இராமாநுசன்'' என்னும் திருநாமம் ஆக வேணும் என்று பிரார்த்தித்தார்.

ஆழ்வாரும் திருவுள்ளம் உகந்து அன்று முதல் தம் திருவடி நிலைகளுக்கு 'இராமாநுசன்' என்று பெயர் சாத்தி மகிழ்ந்தார்.

### திருக்குறுங்குடி நம்பியின் கேள்வி

யதிராஜரைக் கண்ட திருக்குறுங்குடி நம்பி, ''எம்பெரு மானரே! இந்த ஜனங்களை ரக்ஷிப்பதற்காக ஸ்ரீ தேவியோடு கூடி நின்று ராமன், க்ருஷ்ணன் முதலான பல அவதாரங்கள் நம்மால் எடுக்கப்பட்டன. அந்த அவதாரங்களில் எல்லா ஜனங்களும் என்னை (ராமாவதாரத்தில்) ஓர் அரசனாகவும், (க்ருஷ்ணாவதாரத்தில்) ஓர் இடையனாகவும் ப்ராக்ருத மனிதனாக எண்ணினார்களே யொழிய, 'நம்மை ரக்ஷிப்பதற்கு எம்பெருமானே வைகுண்டத்திலிருந்து எழுந்தருளியிருக் கிறான்' என்று எவரும் எண்ணவில்லை. பரமாத்மாவான என்னை அடையவில்லை. அப்படிப்பட்ட அவர்களனை வரும் எந்த உபாயத்தினால் இப்படி உம்மால் வசப்படுத்தப் பட்டிருக்கிறார்கள். அவ்வுபாயத்தை எனக்கு கூறுவீர்'' என்றார்.

திருக்குறுங்குடி நம்பியின் அவ்வார்த்தையைக் கேட்ட ஸ்ரீ இராமானுஜர் அவரைப் பார்த்து ''கேட்க வேண்டிய

முறையில் கேட்டால் இப்போதே விரைவில் கூறுகிறேன்'' என்று விண்ணப்பித்தார்.

அவ்வார்த்தையைக் கேட்டு அதை உண்மை என்று எண்ணிய லோகநாதனான திருக்குறுங்குடிநம்பி மஹாத்மாவான யதிராஜருக்கு திவ்யமான பட்டு விரிப்பினால் அலங்கரிக்கப் பட்ட திவ்ய ஸிம்ஹாஸனத்தை அளித்து, தம்முடைய திவ்ய ஸிம்ஹாஸனத்திலிருந்து பூமியில் இறங்கி ஜகத்பதியாய், லஷ்மீநாதனான அந்த நம்பி பக்தியோடு கூடியவராய் நின்றார்.

(நிலத்தில் நின்று கொண்டிருந்த) ஸ்ரீ இராமானுஜரும் தம்முடைய ஆசார்யரான பெரிய நம்பியே அந்த திவ்ய ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருப்பதாக பாவித்து பூமியில் நிற்கும் திருக்குறுங்குடி நம்பியின் செவியில் ''எல்லா மந்திரங்களைக் காட்டிலும் மந்திர ரத்தினமான த்வயம் ஸுபத்தை அளிப்பது; மந்த்ரரத்னம் என்றும், த்வயம் என்றும், ந்யாஸம் என்றும் ப்ரபத்தி என்றும், ஸரணாகதி என்றும் பெயர்பெற்ற அது ஸ்ரீமந்நாராயணனுக்குரியதாகையாலே அனைவர்க்கும் நன்மை பயப்பதாகவும், எல்லாப் பயனையும் அளிப்பதாகவும் இருக்கிறது'' என்று த்வயமந்த்ரத்தைப் புகழ்ந்து, உபதேசித்து, திருக்குறுங்குடி நம்பிக்கு 'வைஷ்ணவ நம்பி' என்னும் தாஸ்ய நாமத்தையும் அளித்தார். ஜகத்பதியான திருக்குறுங்குடி நம்பியும் ''நான் ராமாநுஜாசார்யரின் சிஷ்யன் என்பதை உலகினர் அனைவரும் கேட்பீராக'' என்று அப்போதே அருளினான். அன்று முதல் 'ராமாநுஜநம்பி' என்னும் திருநாமமும் பெருமானுக்கு திருநாமமாயிற்று.

*ஸர்வேஷாம் ஏவ மந்த்ராணாம்*
*மந்த்ர ரத்ன ஸுபாவஹம்*
*ஸக்ருத் ஸ்மரண மாத்ரேண ததாதி பரமம் பதம்*
*மந்த்ர ரத்னம் த்வயம் ந்யாஸ*
*ப்ரபத்தி சரணாகதி*
*லஷ்மீ நாராயணாயேதி ஹிதம் ஸர்வ பலப்ரதம்''*

அப்போது திருக்குறுங்குடி நம்பி என்று பெயர் பெற்றவனாய், ஸர்வேச்வரனான அவ்வெம்பெருமான் தனது

ஆசார்யரான ஸ்ரீ இராமானுஜரை (ஆசார்யர்களுக்குரிய ப்ரஹ்ம ரதத்திலே ஏற்றி நகர்வலம் வரச் செய்து) பெருமைப் படுத்தினான். ஆசார்யரான யதிராஜரும் நம்பி யெம்பெரு மானைக் கைகூப்பி வணங்கி, ''புருஷோத்தமனே! எல்லா அபசாரங்களையும் பொறுத்தருள வேண்டும்' என்று விண்ணப்பித்து, சிஷ்ய ஸமூஹங்களால் சூழப் பெற்றவராய், திருக்குறுங்குடியிலிருந்து கேரள தேசத்திற்குப் புறப்பட்டார்.

**மலைநாட்டு விஜயம்**

மலைநாட்டில் ஆங்காங்குள்ள திருவண்பரிசாரம் திருவட்டாறு எனும் திவ்யதேசங்களை வணங்கியபின் திருவனந்தபுரத்திற்குச் சென்று அனந்தபத்மநாபனை ஸேவித்து வணங்கி, அங்கேயுள்ள வித்வான்களையும் ஜயித்து, 'இராமானுஜம்' எனும் பெயருடைய மடத்தையும் அங்கு நிலைநிறுத்தி அதற்குப்பின் கேரளத்தின் (திருச்செங்குன்றூர், திருவண்வண்டூர், திருவல்லவாழ், திருநாவாய், திருவித்து வக்கோடு, திருவாரன்விளை முதலான) திவ்யதேசங்களை மங்களா சாஸநம் செய்து, ஆங்காங்கிருக்கும் வேதத்திற்குப் புறம்பான பௌத்தர்களை வென்று வடதிசை நோக்கிச் சென்றார்.

**வடநாட்டு விஜயம்**

அதற்குப் பின் த்வாரகை, மதுரா, சாளக்கிராமம், அயோத்தி, பத்ரிகாச்ரமம், நைமிசாரண்யம், புஷ்கரம், ப்ருந்தாவனம் ஆகிய திவ்யதேசங்களையும், எம்பெரு மானுடைய ஸம்பந்தமுள்ள திருவாய்ப்பாடி, கோவர்த்தனம் முதலான மற்ற இடங்களையும் மங்களா சாஸனம் செய்து, ஆங்காங்குள்ள புறமத வித்வான்களை வெற்றிக் கொண்டார்.

பிறகு பூரிஜகந்நாதத்தில் ஜகந்நாதனை ஸேவித்து, ஸ்ரீ கூர்மம் சென்று கூர்மநாதனை வணங்கி ஸிம்மாசலத்தை அடைந்தார். அங்குள்ள வராஹ நரசிம்மனை வணங்கி அஹோபிலம் சென்றார். அங்குள்ள நரசிம்மனையும் வணங்கி திருவேங்கடமலையை அடைந்தார்.

## 17. திருவேங்கட நிர்வாஹம்

*நாட்டிய நீசச் சமயங்கள் மாண்டன, நாரணனைக்*
*காட்டிய வேதம் களிப்புற்றது, தென் குருகை வள்ளல்*
*வாட்டமிலா வண்தமிழ் மறை வாழ்ந்தது மண்ணுலகில்*
*ஈட்டிய சீலத்து, இராமாநுசன் தன் இயல்வுகண்டே.*
*(இராமானுசனால் விளைந்த பயன்கள் எண்ணில.)*

### சைவர்களின் ஆக்ஷேபம்

அப்போது சைவர்கள் திருவேங்கடமலையில் திருவேங்கடத்தப்பன் சங்கசக்ராதி திவ்யாயுதங்கள் இல்லாதிருப்பதைப் பார்த்து, ஸ்வாமி புஷ்கரிணிக் கரையிலிருக்கும் கந்தனாக எண்ணி அக்கோயிலை ஆக்ரமித்துக் கொண்டனர். சைவர்கள் அவனைக் கந்தன் என்றும் வைஷ்ணவர்கள் திருவேங்கடமுடையான் (இதிஹாஸ புராணங்களிலும், சிலப்பதிகாரம் முதலான தமிழ் இலக்கியங்களிலும், திவ்ய ப்ரபந்தங்களிலும் ப்ரஸித்தி பெற்ற) திருமால் என்றும் வாதம் செய்தமையாலே அங்கு ஒரு பெரிய சைவ வைஷ்ணவச் சண்டை ஏற்பட்டது.

### சைவர்களுடைய ஆக்ஷேபங்களுள் முக்கியமானவை

1) கோனேரிப்புஷ்கரிணிக்கு ஸ்வாமி புஷ்கரிணி எனப் பெயர். ஸ்வாமி என்பது குமாரஸ்வாமி, சுப்ரமணியன் அங்கு தவஞ்செய்து அங்கேயே அமர்ந்ததால் உள்ளே இருக்கும் மூர்த்தி சுப்ரமணியன் என்பது பொருந்தும்.
2) விஷ்ணு ஆலயத்திற்கான அடையாளங்கள் கோயிலில் காணப்படவில்லை.
3) அர்ச்சனைக்கு வில்வதளம் பயன்படுகிறது.
4) மூர்த்திக்கு திருக்கைகளில் சங்கு சக்கரங்களாகிய திவ்யாயுதங்கள் இல்லை.
5) மூர்த்தி நாகாபரணம் அணிந்திருக்கிறார்.
6) மூர்த்தியின் திருமேனியில் சடை காணப்படுகிறது.

**யதிராஜரின் ஸமாதானம்**

ஸ்ரீ எம்பெருமானார் ஸ்ம்ருதி புராணங்கள், வேங்கடாத்ரி மஹாத்மியம் முதலான பண்டை நூல்களில் ஸ்லோகங்களை எடுத்தோதி இந்த ஆக்ஷேபங்களுக்கு சமாதானம் அருளினார்.

1) புராணங்களில் இந்த க்ஷேத்ரத்தில் தவம் செய்ய பிரமன், சிவன், சுப்ரமணியன் இவர்கள் வந்ததாக கூறப்படுவதால், தவத்தின் பலனை தருபவன் இவர்களை விட பெரிய வனாயிருத்தல் வேண்டும். இத்தகைய பெரியவன் ஸ்ரீமந்நாராயணனே.

2) ஸ்வாமி எனப்படுபவன் யாவர்க்கும் இறைவனாய் படைப்பு, காப்பு, அழிப்பு, இவை மூன்றுக்கும் கடவுளான நாராயணனே. ஆத்மாக்கள் யாவும் அவனுக்கு ஸ்வம். அவன் ஸ்வாமி, வேங்கடக்கோன் (ஆதலால் அருகே அமையும் புஷ்கரிணி, கோனேரி, ஸ்வாமி புஷ்கரிணி.

3) மூர்த்தியின் திருமேனியிலே விஷ்ணுவுக்கேயான ஸ்ரீ கௌஸ்துபம், லஷ்மியை காணலாம்.

4) வில்வதளம் லஷ்மியின் அர்ச்சனைக்கு உரியது என்பது ஹாரிதஸம்ருதியில் காண்பது.

5) தொண்டைமான் சக்ரவர்த்திக்கு உதவி செய்யப் பெருமான் சங்கு சக்கரங்களை அளித்தான் என்பதால் இத் திவ்யாயுதங்கள் திருக்கரங்களில் இல்லை.

6) நாகபூஷணத்தைப் பற்றி:

   (i) பாத்மபுராணம் அத்யாயம் 26, இதில் காண்பது: விஷ்ணு தரித்துள்ள பீதாம்பரத்தில் நாக உருவில் வேலைப்பாடு உள்ளது.

   (ii) பவிஷ்யோத்தர புராணம் கூறுவது: ஆகாசராஜா ஸ்ரீநிவாஸப் பெருமானுக்கு நாகாபரணம் ஒன்று ஸமர்ப்பித்தான்.

   (iii) ப்ரஹ்மாண்ட புராணத்திலிருந்து தேறுவது:

*அத்யாயம் 2-ல் நாகராஜனான ஆதிசேஷன் விஷ்ணுவுக்கு எல்லா வகையிலும் அமைந்து கைங்கர்யம் செய்கிறான்; பீதாம்பரங்களையும் பூணாகவும் ஆகிறான்.*

*''பூம்பட்டாம் புல்கும் அணையாம் திருமாற்கு அரவு''*

(iv) திருமலையிலே விஷ்ணு, லட்சுமியுடனும் ஆதிசேஷனுடனும் இருப்பதாக புராணங்கள் ஓதுகின்றன.

7) *தாழ்சடையைப் பற்றி:*

(i) *சில அவதாரங்களிலே விஷ்ணு சடையோடு ஸேவை ஸாதித்தான்.*

(ii) *ஸ்ரீ பாஞ்சராத்ரம் ஸாத்வத ஸம்ஹிதையிலே சில சந்தர்ப்பங்களிலே விஷ்ணுவை ஜடை தரித்தவனாகவும், கையில் பலாச தண்டம் ஏந்தியவனாகவும் வணங்கச் சொல்கிறது.*

(iii) *ஸ்காந்த புராணம் - முதற்பாகம், அத்யாயம் 10: திருவேங்கடத்தில் ஸ்ரீநிவாஸன் சடையுடன் தோன்றினான்: வாமந புராணம் அத்யாயம்: 4ல் இதுவே கூறப்படுகிறது.*

8) *வராஹ புராணத்தில் ஸ்ரீ ஆதிவராஹப் பெருமாள் மொழிவதாக வருவது ''ஸ்ரீ நிவாஸன் புஷ்கரிணியின் தென்புறமாக ஆவிர்பவித்தான்.''*

**யதிராஜருடைய ஸமாதானம்**

*பாஷ்யகாரர் அவர்களனைவரையும் பார்த்துப் - ''சைவ அந்தணர்களே! உங்களுடைய தேவனான கந்தனுக்கே உரிய சூலம் முதலான ஆயுதங்களாகிற அடையாளங்களையும் எங்களது தேவனுக்கே உரிய சங்கம், சக்ரம் முதலான ஆயுதங்களான அடையாளங்களையும் இப்போதே செய்வித்து, திருவேங்கடமுடையானுடைய திருமுன்பே அந்த இருவகை ஆயுதங்கள் அனைத்தையும் வைத்துவிடுவோம்; அவன் எந்த ஆயுதங்களை தரித்துக் கொள்ளுகிறான் என்று பார்ப்போம். வீண் கலகம் எதற்கு? என்று கூறினார்.*

## திருமலையப்பன் சங்கு சக்ரங்களை தரிப்பித்தல்

அனைவரும் யதிராஜர் சொன்னதை ஏற்றுக் கொண்டு ஸமாதானமடைந்தனர். திருவேங்கடமுடையான் திருமுன்பே அவ்வாயுதங்களனைத்தையும் வைத்து, திருவாசலை உறுதியாகத்



இராமானுஜர், திருப்பதி

தாளிட்டுப்பூட்டி வெளியேறினார்கள். மறுநாள் காலையில் கோயிலுக்கு வந்து (கர்ப்பக்ருஹத்தைத் திறந்து பார்க்கையில்) திருவேங்கடமுடையான் சங்கு சக்கரம் தரித்திருப்பதையும், சூலம், டமருகம் (உடுக்கை) முதலான ஆயுதங்கள் அவன் காலின் கீழ் இருப்பதையும் கண்டு அனைவரும் வியப்புற்றனர்.

## திருவேங்கடவனின் மாமனாராதல்

அதற்குப்பின் ஸ்ரீபாஷ்யகாரர் சங்குசக்கரங்களை தரித்தவனான திருவேங்கடமுடையானை வணங்கி, மங்களாசாஸனம் செய்தார். அப்பெருமானுடைய திருமார்பில் பொன்னாலான

லஷ்மிதேவியை எழுந்தருளச் செய்தார். அதனால் எம்பெரு மானுக்கு யதிராஜர் (லஷ்மியை அளித்ததினாலே) மாமனா ராகவும், (சங்குசக்கரங்களை அளித்ததினாலே) ஆசார்யராகவும் ஆனார். அப்பனுக்கு சங்காழி அளித்த பிரான்'' என்று எல்லோராலும் போற்றப்பட்டார்.

### பூப்பிரதக்ஷிண ஸமாப்தி

பின்னர் திருவேங்கட மலையிலிருந்து காஞ்சி, மதுராந்தகம், வீரநாராயணம் சென்று மங்களாசாஸனம் செய்து ஸ்ரீரங்கத்தை வந்தடைந்தார். இவ்வண்ணமாக பூமியை (பாரத தேசத்தை) ப்ரதக்ஷிணம் செய்து அரங்க நகரப்பனை வணங்கி யதிராஜர் தம் மடத்தை அடைந்தார்.

### 18. கூரத்தாழ்வான்

*மொழியைக் கடக்கும் பெரும் புகழான், வஞ்ச முக்குறும்பாம்*
*குழியைக் கடக்கும் நம்கூரத்தாழ்வான் சரண் கூடிய பின்*
*பழியைக் கடத்துமிராமாநுசன் புகழ்பாடி அல்லா*
*வழியைக் கடத்தல், எனக்கு இனியாதும் வருத்தமன்றே.*

*(இராமானுசனைப் பாடுவதால் இனி எனக்கு வருத்தமில்லை.)*

### கூரத்தாழ்வானின் வைராக்யம்

ஒருமுறை எல்லா சாஸ்த்ரங்களிலும் வல்லவராய், ஆசார்ய ரான எம்பெருமானாரை ஆராதனம் செய்வதிலேயே ஈடுபட்ட வராய், பஞ்சகாலபராயணராய், கைங்கர்யச் செல்வம் மிக்கவ ரான கூரத்தாழ்வான் ஸ்ரீரங்கத்தில் உஞ்சவ்ருத்தியாலேயே காலத்தைக் கழித்துக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

ஒரு நாள் நடுப்பகல் வரையில் பெருமழை பொழிந்தது. காலம் கடந்து விட்டதால் கூரத்தாழ்வானால் அன்று உஞ்ச வ்ருத்தி செய்ய முடியவில்லை. ஏற்கனவே சேமித்து வைத் திருந்த பொருளும் இல்லையாகையால் எம்பெருமானுக்குத் (கைவசம் இருந்த) ஒரு பழத்தை அமுது செய்வித்து, தீர்த்தத்



கூரத்தாழ்வான்

தைப் பருகித் தம் திருமாளிகையிலேயே அன்று முழுவதும் இருந்துவிட்டார்.

**அரவணைப் பிரஸாதம்**

அப்போது பெரிய பெருமாளுக்கு இரவு வேளையில் பெரியஅவஸரம் அமுது செய்யப் பண்ணும் ஸமயமா யிருந்தமையால், அதில் திருச்சின்னம் ஒலிப்பதைக் கேட்டுக் கூரத்தாழ்வானின் பத்னியான ஆண்டாள் தன் கணவனிடம் பரிவாலே பெரிய பெருமாளை நெஞ்சிற் கொண்டு "உமது பக்தர் பட்டினியாய்ப் படுத்திருக்கிறார். நீர் குலாவிக் குலாவி அமுது செய்தருளுகிறீர்" என்று தனக்குள்ளாகவே சொன்னாள்.

அதைக் கேட்ட பக்தவத்ஸலரான பெரிய பெருமாள் தமது ஸ்ரீரங்கம் கோவிலை நிர்வஹித்து வந்த உத்தமநம்பி

யின் கனவில் தோன்றி பரமபாவனமான நமது அரவணைப் பிரஸாதத்தை - இரு குடைகள், சாமரம், வாத்யம் முதலான ஸகல விருதுகளோடு இப்போதே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு சென்று, மஹாத்மாவான கூரத்தாழ்வானுக்கு ஸமர்ப்பியும்'' என்று கூறினார். உத்தமநம்பியும் எழுந்து, கனவில் பெருமாள் நியமித்தபடியே ஸகல விருதுகளோடு அரவணைப் பிரஸாதத்தைத் தாமே (தலையாலே தாங்கி) சென்று, கூரத்தாழ்வானுக்கு ஸமர்ப்பித்தார்.

கூரத்தாழ்வானும் வியந்து அந்தப் பிரஸாதத்தை உடனே அன்புடன் ஏற்றுக் கொண்டு தன் மனைவியான ஆண்டாளைப் பார்த்து 'நீ நெஞ்சில் என்ன நினைத்தாய்? என்று வினவ அவளும் கைகூப்பி நின்றவளாய், ''ஸ்வாமிந்! லோகநாதனான இப்பெருமாளிடம் நான் எதையும் பிரார்த்திக்கவில்லை. பெரிய பெருமாள் அமுது செய்தருளும்போது திருச்சின்ன ஒலி கேட்டது. 'அரங்கனே! நீர் அமுது செய்தருளுகிறீர்; உமது பக்தரோ பட்டினி கிடக்கிறார்' என்று நெஞ்சால் நினைத் தேனேயொழிய வேறொன்றும் செய்யவில்லை'' என்று கூறினாள். உடனே கூரத்தாழ்வான் தமது மனைவியைப் பார்த்து 'நீ இப்படி நினைக்கலாமா?' என்று அவள் நினைத்ததைக் கண்டித்து, அந்த அரவணைப் பிரஸாதத்தை (தாமும் ஸ்வீகரித்து) அவளுக்கும் உகப்புடன் அளித்தருளினார்.

**கூரேச புத்ரர்களின் அவதாரம்**

அவ்விருவரும் அமுது செய்த இரு அரவணைத் திரளைகளே காரணமாகப் பரமபதிவ்ரதையான ஆண்டாள் கர்ப்பம் தரித்தாள். பராசரமஹரிஷி, வ்யாஸ மஹரிஷி ஆகிய இருவரின் அம்சமாக, மஹாதேஜஸ்விகளான இரு பிள்ளைகள் பெரிய பெருமாளின் அனுக்ரஹத்தால், சுபக்ருத் வருஷத்தில் வைகாசிப் பூர்ணிமையில் அனுஷ நக்ஷத்திரத்தில் கூரத்தாழ் வானின் குமாரர்களாக அவதரித்தனர்.

கூரத்தாழ்வான் 'குழந்தைகளுக்கு ஜாதகர்மம், நாம கரணம் முதலானவற்றை யதிராஜர் செய்விப்பார்; என்று

கையொழிந்து நின்றமையாலே, யதிராஜர் கருணையோடு கூரத்தாழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி, எம்பாரைப் பார்த்து ''ஆழ்வானுடைய பிள்ளைகளை எடுத்து வருவீர்'' என்று கூறினார். எம்பாரும் கூரத்தாழ்வானுடைய குழந்தைகளை எடுத்துக் கொண்டு, த்ருஷ்டி தோஷம் நீங்குவதற்காக ரக்ஷையின் பொருட்டு, குழந்தைகளுக்கு மந்த்ரரத்ந (த்வய) ஜபத்தாலே மங்களாசாஸனம் பண்ணிக் கொண்டு வந்து யதிராஜரிடம் அக்குழந்தைகளைக் காட்டினார்.

யதிராஜர் அக்குழந்தைகளுடைய ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையும், முகத்தின் அழகையும் கண்டு உகந்து, எம்பாரைப் பார்த்து, ''த்வயம் பரிமளிக்கிறதே! நீர் என் செய்தீர்? சொல்லும்'' என்று கேட்டார். கோவிந்தர் ''ஆசார்யரே! த்வயத்தை அநுஸந்தித்துக் கொண்டே வந்தேன் என்று கூறினார். அதைக் கேட்டு ஸ்ரீராமாநுஜர் எம்பாரைப் பார்த்து ''கோவிந்தரே! இக் குழந்தைகளுக்குச் செய்ய வேண்டிய த்வயோபதேசம் முதலான ஆசார்ய க்ருத்யங்களுக்கு முற்பட்டீர். ஆகையால், நீரே இவ்விரு குழந்தைகளுக்கும் முறைப்படி எல்லா அர்த்தங்களையும் சொல்லக் கடவீர்'' என்று கூறினார்.

அவ்விரு குழந்தைகளின் கழுத்திலும் 'ஐம்படைத்தாலி' எனப்படும் பஞ்சாயுதத் திருவாபரணங்களை யதிராஜர் தம் திருக்கையாலே சாத்தியருளி, நாமகரணத்தின்போது எம்பார் திருக்கையாலே திருவிலச்சினையும் முறைப்படி அக்குழந்தைகளுக்குச் செய்வித்து, அக்குழந்தைகளில் பெரியவருக்கு ஸ்ரீபராசர மஹரிஷியின் திருநாமமாக '**ஸ்ரீபராசரபட்டர்**' என்னும் திருநாமத்தை இட்டார். வேதவ்யாஸரின் திருநாமமாக '**வேதவ்யாஸ பட்டர்**' என்று மற்ற குழந்தைக்கு திருநாமமிட்டு, அக்குழந்தை (ராமபிரானைப் போலே) மிக ரமணீயமாயிருந்தமையால் 'ஸ்ரீராமபிள்ளை' என்னும் இரண்டாவது திருநாமத்தையும் யதிராஜர் இட்டருளினார்.

இவ்வண்ணமாக ஆளவந்தாரின் இரண்டாவது குறையையும் நீக்கியருளினார். ''கூரகுலத்துக்கு அணி விளக்கா

*யிருந்த கோவிந்த சிஷ்யரான பராசரபட்டர் ரங்கநாதனாலே (பிள்ளையாக) வளர்க்கப்பட்டு, யாமுநாசார்யருடைய இரண்டாவது மனோரதத்தை (ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் முதலான க்ரந்தங்களைச் செய்வதன் மூலம்) நிறைவேற்றினார்.''*

**மூன்றாவது மநோரத பூரணம்**

கோவிந்தப் பெருமாளாகிற எம்பாருக்கு சிறிய கோவிந்தப் பெருமாள் என்று ஒரு தம்பியிருந்தார். அந்த கோவிந்த பெருமாளுக்கு அப்போது ஒரு பிள்ளை பிறந்தது. அதைக் கேட்ட ஸ்ரீபாஷ்யக்காரர் (ஆளவந்தாருடைய மூன்றாவது குறைதீரும் காலமும் நெருங்கிற்று என்று) மிகவும் ஆனந்தத்தையடைந்தார். சிறிய கோவிந்தப் பெருமாளுடைய திருமாளிகைக்கு எழுந்தருளி, அவருடைய குமாரரைக் கடாக்ஷித்து **'ஸ்ரீபராங்குச நம்பி'** என்று அப்பிள்ளைக்குத் திருநாமமிட்டு மிகவுகந்தார். இவ்வண்ணமாக ஆளவந்தாருடைய மூன்றாவது குறையைத் தீர்த்தார். ''கோவிந்தப் பெருமாளின் வம்சத்தில் பிறந்தவராய், நல்லறிவுடைய பராங்குசநம்பி ஆளவந்தாருடைய மூன்றாவது குறையை அடியோடு போக்கினார். ஆகையால் வட்டமணி குலத்துக்கு அணி விளக்காய் விளங்கினார்'' என்று போற்றப்பட்டார்.

யதிராஜருடைய கடாக்ஷத்தாலே ஸ்ரீபராசரபட்டர், வேதவ்யாஸபட்டர், பராங்குசநம்பி என்னும் மூன்று குழந்தைகளும் நன்கு வளர்ச்சியடைந்தார்கள். லோக க்ஷேமத்தின் பொருட்டு ஆளவந்தார் ஆசைப்பட்ட மூன்று மநோரதங்களை இவ்வண்ணமாக யதிராஜர் நிறைவடைவித்தார்.

**19. ஸ்ரீ பராசர பட்டர்**

***பண்தரு மாறன் பசுந்தமிழ் ஆனந்தம் பாய்மதமாய்***
***விண்டிட எங்களிராமாநுச முனிவேழம், மெய்ம்மை***
***கொண்ட நல்வேதக் கொழுந்தண்டமேற்றி குவலயத்தே***
***மண்டி வந்தேன்றது வாதியர்காள்! உங்கள் வாழ்வற்றதே.***
*(இராமானுசனால் வாதியர் வாழ்வு வீழ்ந்து விட்டது.)*

## நம்பெருமாள் புத்ரஸ்வீகாரம்

ஸ்ரீபராசரபட்டரை பக்தவத்ஸலரான பெரிய பெருமாள் புத்ரராக ஏற்றுக் கொண்டார். ஸ்ரீரங்கநாயகியும் அவரைப் புத்ரனாக வளர்த்தாள். அறுசுவையோடு கூடிய தமது பிரஸாதத்தைத் தாம் அமுது செய்த பிறகு பெரிய பெருமாள் தமது புத்ரருக்கு அளித்து வந்தார். இவ்வண்ணம் காருணிகனான அரங்கனால் வளர்க்கப்பட்ட சிறுவரான பராசரபட்டர் ஜனங்களால் கொண்டாடப்பட்டவராய் வளர்ந்தார்.

அப்போது ஒருநாள் சிறுவரான பட்டர் நம்மாழ்வாருடைய 'நெடுமாற்கடிமை' பாசுரத்தை ஸேவித்துக் கொண்டிருக்கும் கூரத்தாழ்வானைப் பார்த்து, ''அப்பா! நீர் படிக்கும் நம்மாழ்வார் அருளிய பாசுரத்தில் 'சிறுமாமனிசர்' என்று வருகிறது. இதில் மனிசர்களாகிய ஒரு வஸ்துவில் சிறுமை, பெருமை, ஆகிய இரண்டு தன்மைகளும் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இருளும், ஒளியும் போலே ஒன்றுக் கொன்று முரண்பட்ட தன்மைகள் ஒரே பொருளில் இருக்க முடியாதே. இங்கு மனிசரிடத்தில் முரண்பட்ட சிறுமையும், பெருமையும் எப்படி ஒன்றுகூடி இருக்க முடியும்?'' என்று கேட்டார்.

யுக்தியோடு கூடியதான பிள்ளையின் இவ்வாக்யத்தைக் கேட்டுக் கூரத்தாழ்வான் 'நன்று நன்று' என்று உகந்தவராய், ''பிள்ளாய்! உனக்கு உபநயனம் ஆகாமையாலே வேத வாக்யத்தைக் கொண்டு ஸமாதானம் சொல்லுவது தகாது. (ஆனாலும், அருளாளப் பெருமாள் எம்பெருமானார் போலே வடிவு சிறுத்துப் புகழால் பெருத்திருப்பவர்களையே இங்கு ஆழ்வார் சிறுமாமனிசர்' என்கிறார்)'' என்று பதில் கூறினார்.

## பட்டரும் ஸர்வஜ்ஞபட்டரும்

அதற்குப் பின் பட்டர் ஒருநாள் சிறு குழந்தைகளோடு விளையாடிக் கொண்டிருக்கும்போது 'ஸர்வஜ்ஞபட்டர் வந்தார்' என்று திருச்சின்னம் ஒலிப்பதைக் கேட்டு, கைப்பிடி நிறைய மணலை அள்ளிக் கொண்டு ராஜவீதியில் தடையறச்

சென்று ஸர்வஜ்ஞபட்டனை அடைந்து, ''நீ ஸர்வஜ்ஞனாக இருந்தால் இதில் எத்தனை மணல் உள்ளது என்று இப்போதே சொல்லுவாய்'' என்று கேட்டார். அவன் பதில் ஏதும் சொல்ல இயலாதவனாய் வெட்கி நின்றான்.

சிறுவரான பட்டரோ சிரித்துக் கொண்டே 'இது ஒரு பிடி மண்' என்று சொல்லவும் உனக்குத் தெரியவில்லையே, இது கூடச் சொல்ல இயலாத உனக்கு ஸர்வஜ்ஞபட்டன் என்னும் விருது எப்படி பொருந்தும்? ஆகையால் அறிவிலியாய் விட்ட நீ அந்தப் பெயரையும், உனது எல்லா ஆடம்பரங்களையும் விட்டு இங்கு தங்காமல் இப்போதே கிளம்புவாய்'' என்று கூறினார். அவனும் வியந்து கூரேச புத்ரரான அக்குழந்தையைத் தலையிலே தாங்கி, மிகவும் ஆச்சர்யம் கொண்டவனாய் கூரத்தாழ்வான் திருமாளிகை சென்று வணங்கினான்.

சாஸ்த்ரமறிந்தவர்களில் சிறந்தவர்களான கூரத்தாழ்வானும், எம்பாரும் ஸ்ரீபராசர பட்டருக்கு சாஸ்த்ரங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் அருளிச்செயல் ரஹஸ்யார்த்தங்களனைத்தையும் அன்போடு கற்றுக் கொடுத்தனர்.

**20. உறங்காவில்லி தாஸர்**

***என்னைப் புவியில் ஒரு பொருளாக்கி, மருள்சுரந்த***
***முன்னைப் பழவினை வேரறுத்து, ஊழி முதல்வனையே***
***பன்னப்பணித்த விராமாநுசன் பரன் பாதமுமென்***
***சென்னித் தரிக்க வைத்தான், எனக்கேதுஞ்சிதைவில்லையே.***
*(நான் திருமாலை வணங்கும்படி செய்தவன் இராமானுசன். இனி எனக்கு அழிவில்லை.)*

உறையூரில் தநுர்தாஸர் (உறங்காவில்லி) என்று ஓர் மல்லர்தலைவர் இருந்தார். அந்த உறங்காவில்லிக்கு, தடங்கண்ணியாய், பூர்ண சந்திரன் போன்ற முகமுடையவளான பொன்னாச்சி என்னும் பெயருடைய மனைவி இருந்தார். அம்மல்லர் அவள் அழகில் மயங்கி அவளுடைய முகத்தைப் பார்த்துக் கொண்டே பொழுது போக்கிவந்தார். அப்போது

ஒரு சமயம் அரங்கனுக்குச் சித்திரையுத்ஸவம் நடப்பதைக் கேள்விப்பட்ட பொன்னாய்ச்சி ஸேவிப்பதற்காக ஆர்வத்தோடு வந்தாள். அவள் முகத்தைக் காண்பதிலேயே ஈடுபட்ட அந்த மல்லரும் நடையிட்டு வரும் அவளது முகத்துக்குக் குடைபிடித்துக் கொண்டு அவளது முகத்தை கண்ணழகை பார்த்துக் கொண்டு வந்து கொண்டிருந்தார்.

உறங்காவில்லியின் விசித்திரமான இச்செயலை சிஷ்ய ஸமூஹத்தால் சூழப்பெற்று, காவேரியில் நீராடி எழுந்தருளிய யதிராஜர் கண்டார். எம்பெருமானனுடைய மாயையால் பிடிக்கப்பட்டு, மனிதரில் கடையனராய், பெண்ணுக்கு அடியனாய், இவன் விளங்குகிறான். இவனை இப்போதே விரைவில் அரங்க நகரப்பனிடம் ஈடுபட்டவனாகச் செய்ய வேண்டும்'' என்று எண்ணி,

உறங்காவில்லியை விரைவில் மடத்துக்கு அழைத்து வரச் செய்தார். எம்பெருமானார் கடாக்ஷித்தருளியதாலே யதிராஜ ரால் அழைக்கப்பட்ட உறங்காவில்லியும் அவரிடம் வந்தார். யதீந்த்ரர் அவரைப் புன்முறுவலோடு கடாக்ஷித்து, உறங்கா வில்லியைக் குறித்து அப்பா! நீ யார்? எங்கிருக்கிறாய்? எதற்காக ஸ்ரீரங்கத்திற்கு வந்திருக்கிறாய்? இங்கு உனக்கு என்ன காரியம்? இதை யெல்லாம் என்னிடம் உள்ளபடி சொல் உனக்கு நன்மை உண்டாகும்'' என்று அருளினார்.

உறங்காவில்லியும் கைகூப்பி நின்று, - ''அடியேன் உறையூரில் இருப்பவன் 'உறங்காவில்லி' என்று என்னை அழைப்பார்கள். மற்போரில் வல்லவனாய், எல்லா மல்லர் களுக்கும் தலைவனாயிருக்கிறேன்! அரங்கநகரப்பனின் சித்திரைத் திருவிழா ஸேவிப்பதற்காக வந்திருக்கிறேன்'' என்றான்.

**எம்பெருமானாரின் சாதுர்யம்**

அதைக்கேட்டு யதிராஜர் புன்முறுவலோடு காம வசப்பட்ட பல ஜனங்கள் ஸ்த்ரீகளுக்கு ரஹஸ்யமாக அடிமைத்தொழில் புரிகின்றனர். உன்னைப்போல் (வெளிப் படையாக அதைச் செய்யும்) எவனையும் நான் உலகிலேயே

கண்டதில்லை. ராஜவீதியில் எல்லோரும் பார்த்துக் கொண்டிருக்கும்போது வீரனான உன்னால் இந்த அருவருக்கத்தக்க காரியம் எப்படி கூசாமல் செய்யப்பட்டது?'' என்று வினவினார்.

யதீந்த்ரருடைய அவ்வார்த்தையைக் கேட்டு (உறங்காவில்லி மிகவும் வெட்கமடைந்தவராய்) கைகூப்பி நின்று, ''ஐயா! பொன்னாய்ச்சி என்னும் விரிந்த கண்களையுடைய மங்கை நல்லாள் இருக்கிறாள். அவளுடைய கண்கள் தாமரையிதழ் போல் நீண்டு மிகப்பரந்து உள்ளன. அவளுடைய அப்பரந்த கண்களில் என் நெஞ்சு ஈடுபட்டுவிட்டது. அவளுடைய முகத்தாமரை ஸூர்ய கிரணங்களால் கொளுத்தப்பட்டால், அவளது கண்கள் வாடிவிடும்; ஆகையால் என் நெஞ்சமும் உறுதியாகக் கலங்கிவிடும். ஆசார்யரே! எனது செயல் இவ்வண்ணமாக எனது ரஸிகத்தன்மையால் ஏற்பட்டதேயாகும். தேவரீரது சிஷ்யனாகிவிட்ட எனக்கு தேவரீர் திருவுள்ளத்தில் உள்ளது எதுவோ அதை ஆணையிடும்'' என்று கூறினார்.

அதைக் கேட்ட யதிகட்கிறைவர், அவ்வுறங்காவில்லியைத் தம் திருவடிகளில் ஈடுபட்டவராகும்படி செய்வதற்காகச் சிரித்துக் கொண்டே- ''அப்பா! நீ கண்ட கண்களைவிட, மிகப் பரந்தவையாய், உலகில் உள்ள எல்லாக் கண்களையும் விடச் சிறந்தவையாய், அப்ராக்ருதமான கண்கள் இரண்டு ஒருவனுக்கு உள்ளன. அவ்வழகிய கண்களை இன்றே நான் உனக்கு காட்டுகிறேன்'' என்று கூறினார்.

**உறங்காவில்லியைத் திருத்தியது**

உடனே உறங்காவில்லியை அழைத்துக் கொண்டு யதிராஜர் ஸ்ரீரங்கம் கோயிலை அடைந்து, பாம்பணையில் பள்ளிக்கொண்டிருக்கும் ஆதிபுருஷனான ஸ்ரீரங்க ராஜாவை யதிராஜர் அந்த மல்லராஜாவுக்குக் காட்டியருளினார். முழந்தாள் வரை நீண்ட திருக்கைகளை உடையவராய் தாமரையிதழ் போல் நீண்டு பரந்த திருக்கண்களை உடையவனாய், புன்முறுவல் செய்பவனாய் மிக இனிய மிருதுவான

கன்னங்களை உடையவனாய், மாணிக்கங்கள் அழுத்தப்பெற்ற திருவாபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவனாய், அழகிய திருமேனியை உடையவனான ரங்கநாதனான விஷ்ணுவை அந்த மல்லர் கண்டார்.

பரந்த கண்களை உடைய ஸ்ரீரங்கராஜனை மல்லர் தலைவரான அவ்வுறங்காவில்லிக்கு நன்கு காட்டி, கருணையோடு ''தனுர்தாஸரே! இவரே உலகுக்குத் தலைவனான, லஷ்மீநாதனான ஸ்ரீரங்கநாதன்; இவரது ஒப்பற்ற கண்களின் பரப்பை இன்று நீர் நன்றாக நேரில் கண்டீரல்லவா?' என்றார். யதிராஜரின் உண்மையான அவ்வார்த்தையைக் கேட்டு, அவரது கருணையாலே, திருவரங்கனின் கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய் கண்களைப் பார்த்து மிகவுகந்து அவற்றிலே ஆழ்ந்து, கண்கொட்டாமல் நின்றார் உறங்காவில்லி.

யதிராஜருடைய ஸம்பந்தமாகிற பெரிய பலத்தாலும், ஸ்ரீ ரங்கராஜனுடைய கருணையின் பலத்தாலும், காமம் முதலான பெரிய உட்பகைகள் நீங்கப் பெற்ற அம்மல்லர் தலைவர் எம்பெருமானையே எல்லாமாகக் கொண்ட மஹாத்மாவானார்.

## எம்பெருமானை ஆச்ரயித்தல்

உறங்காவில்லியும் யதிராஜருக்குச் சீடராகி, எப்பொழுதும் கைங்கர்யம் செய்பவராய் அவருக்கு அருகிலேயே வாழ்ந்து வந்தார். உறங்காவில்லியைப் பற்றிய செய்தியை கேள்விபட்ட பொன்னாய்ச்சியார் மிகவும் வியப்புற்று, ஜ்ஞான வைராக்யங்கள் விளையப் பெற்றவளாய் அவளும் ஸ்ரீராமாநுஜரை வணங்கினாள். யதிராஜரும் அப்பொன்னாய்ச்சியாரை முன் போலே உறங்காவில்லியோடு சேர்ந்து வாழச் செய்தார். தம்பதிகளான அவ்விருவரும் ஸ்ரீராமாநுஜருக்கு அன்போடு கைங்கர்யம் செய்து வந்தார்கள்.

வாயுபுத்ரனான அநுமன் எப்படி ராமபிரானுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்து வந்தானோ, அப்படியே உறங்காவில்லியும் ஸ்ரீராமானுஜருக்குக் கைங்கர்யம் செய்து

வந்தார். ஒரு சமயம் அரங்கநகரப்பனின் உத்சவத்தின் போது தீர்த்தவாரி தினத்தில் உறங்காவில்லியின் கையைப் பிடித்துக் கொண்டு அங்கு சென்றிருந்த யதிராஜர் நீராடி, மறுபடி திரும்பிவரும் போது உறங்காவில்லியின் கையைத் தம் கையால் பிடித்துக் கொண்டு சிஷ்யர்களோடு தம் மடத்திற்குத் திரும்பினார்.

அப்படி எழுந்தருளும் அவ்வெம்பெருமானாரைக் கண்டு வியப்புற்ற அந்தணர் தலைவர்கள் ''தர்மாத்மாவான யதிராஜரே! நீர் இப்படி நடந்து கொள்வதற்குக் காரணம் என்ன? என்று கூறவேண்டும்''என்று கேட்டனர். அதைக் கேட்டு ஜ்ஞாநாதிகுணபூர்ணரான அவ்வாசார்யர் அவர்களை நோக்கி ''(1) கல்வியாகிற மதம், (2) செல்வமாகிற மதம், (3) நற்குடிப் பிறப்பாகிற மதம் என்னும் இம்மூன்றும் ஒருவருடைய செருக்கிற்கு காரணமாகின்றன. மதமற்ற நல்லோர்களுக்கோவெனில் இம் மூன்றுமே மதத்திற்கு நேர்மாறான தமத்திற்கு (அடக்கத்திற்கு)க் காரணமாகின்றன. இந்த மல்லர் இந்த மூன்று மதங்களும் அற்றவர். இக் காரணத் தாலேயே நீராடிய பின்பும் நான் இவருடைய கையைப் பிடித்துக் கொண்டு வந்தேன்'' என்று பதிலுரைத்தார்.

## 21. ஆசார்யரே மோக்ஷோபாயம்

***உண்ணின்று உயிர்களுக்கு உற்றனவே செய்து, அவர்க்கு உயவே***
***பண்ணும் பரனும் பரிவிலனாம்படி, பல்லுயிர்க்கும்***
***விண்ணின் தலை நின்று வீடளிப்பான் எம்மிராமாநுசன்***
***மண்ணின் தலத்துதித்து, மறைநாலும் வளர்த்தனனே.***

*(யாவருக்கும் வீடளிக்கவே இராமானுசன் வேதங்களை வளர்த்தான்.)*

ஒருமுறை ஆளவந்தாருடைய சிஷ்யரான மாறனேர் நம்பிக்கு ஆசார்யநியமனத்தாலே பெரியநம்பி ப்ரஹ்மமேதே விதியினாலே ஸம்ஸ்காரம் செய்தார். அதைக்கேட்ட வைஷ்ணவர்களனைவரும் 'ஸூத்ர ஸம்ஸ்காரம் செய்தவர்'. 'ஸூத்ரருக்கு எப்போதும் கைங்கர்யம் செய்தவர்.' 'வர்ணதர்மங்களை மீறியது ப்ராஹ்மணர்களுக்கு எப்படித் தகும்?' என்று

பெரியநம்பியை நிந்தித்தனர். தன் தந்தைக்கு அபகீர்த்தி ஏற்பட்டதைக் கேள்வியுற்ற நம்பி குமாரத்தியான அத்துழாய் வருத்தமுடன் தன் தந்தை உடன் வாழ்ந்து வந்தாள்.

## பெரியநம்பி உடையவருக்கு தர்மஸூக்ஷமத்தை உணர்த்துதல்

இவ்விஷயத்தைக் கேள்விப்பட்ட ஸ்ரீராமாநுஜர் தம் ஆசார்யரான பெரியநம்பியை வணங்கி. "அடியேன் உலகத்திலுள்ள ஜனங்களை வர்ணாச்ரமதர்மங்களோடு கூடியவராகச் செய்து வருகையில், வர்ணாச்ரமதர்மத்துக்கு முரண்பட்ட வேறுவழியைப் பின்பற்றி, வர்ணதர்மங்களை நீர் அழிப்பது பொருந்துமோ?" என்று வினவினார்.

பெரியநம்பி யதிராஜரைப் பார்த்துப் "உலகில் ஸாமாந்ய தர்மங்களை பரவச் செய்வதற்காக இஷ்வாகுவம்சத்தில் அவதரித்த ராமபிரானைக் காட்டிலும் நான் பெரியவனோ? (அவரால் ஸம்ஸ்காரம் செய்விக்கப் பெற்ற பறவை இனத்தவரான) கழுகரசரான ஜடாயுவைக் காட்டிலும் இந்த மாறனேர் நம்பி தாழ்ந்தவரோ? ஸாமாந்ய தர்மங்களில் ஈடுபட்ட தர்ம புத்திரரைக் காட்டிலும் நான் பெரியவனோ? (அவரால் ஸமஸ்காரம் செய்விக்கப் பெற்ற ஸுத்ர ஜாதியைச் சேர்ந்த) விதுரரைக் காட்டிலும் இந்த நம்பி தாழ்ந்தவரோ? யதிரராஜரே! பகவத் பக்தியுடையவர்கள் (ஸுத்ர ஜாதியில் பிறந்த போதிலும்) ஸுத்ரராகமாட்டார்கள்; பக்தன் ஸுத்ர ஜாதியில் பிறந்த போதிலும் ஸுத்ரனாக மாட்டான் · என்பது வேதப் பொருளேயாகும்" என்று விளக்கினார்.

## ஊமைக்குச் செய்த உபதேசம்

அதற்குப் பின் ஒரு நாள் யதிகட்கிறைவர் ஓர் ஊமையைப் பார்த்து, அவனை மடத்தினுள் அழைத்துக் சென்று, கதவையடைத்துக் கொண்டு, தம் திருமேனியை ஊமைக்குச் சுட்டிக்காட்டி "இந்த ஆசார்ய விக்ரஹத்தையே நீ உபாயமாக அறிவாய். அதுவே உனக்கு ரக்ஷகம்" என்று சைகையாலே அவனுக்கு விளக்கினார். ஊமையும் இதை நன்கு உணர்ந்தான்,

கதவிலுள்ள இடுக்கின் வழியாக இதைக் கண்ட கூரத்தாழ்வான் மிகவும் வியப்புற்றவராய், ''பெரிய குலத்திலே பிறந்து, வேதாங்கங்கள் ஆறையும் கற்றுக் கெட்டேனே! ஊமையாய் பிறந்திருந்தால் இந்த ரஹஸ்யத்தை யதிராஜர் எனக்கும் உபதேசித்திருப்பாரே'' என்று சொல்லி மயங்கினார்.

**திருக்கோஷ்டியூர் நம்பி மூலம் சரமோபாயத்தை உணர்த்துதல்**

'ஆசார்யருடைய திருமேனியே மோக்ஷோபாயமாக முடியுமோ?' என்று சிஷ்யர்களுடைய நெஞ்சில் எழக் கூடிய ஐயத்தைப் போக்கடிப்பதற்காகக் கூரத்தாழ்வான் முதலிய சிஷ்யர்களை அழைத்துக் கொண்டு திருவரங்கத்திலிருந்து திருக்கோஷ்டியூரை அடைந்து, அங்கு தம் திருமாளிகைக்குள் த்யானம் செய்து கொண்டிருந்த தம் ஆசார்யராம் திருக் கோட்டியூர் நம்பியைக் கண்டு அவரை வணங்கிய யதிராஜர் ''ஆசார்ய ச்ரேஷ்டரே! நீர் ஜபிக்கும் மந்த்ரம் என்ன? நீர் த்யானிக்கும் விஷயம் எது? அடியேனுக்குக் கூறுவீராக'' என்று கேட்டார். இப்படி யதிராஜர் கேட்டவுடன் ''யதிராஜரே! எனது ஆசார்யரான யாமுநாசார்யார் காவேரியில் (கவிழ்ந்து மூழ்கி நின்று) அகமர்ஷண ஜபம் செய்யும்போது அவருடைய முதுகு ஆமையின் முதுகு போலே விளங்குகிறது. அதுவே என்னுடைய த்யானத்திற்கு விஷயமாய் உள்ளது. நான் ஜபிக்கும் மந்த்ரமும் யாமுநருடைய திருநாமமே. ஆகையால் ஆசார்ய ருடைய திருமேனியே த்யானிக்கத்தக்கது. அவருடைய திருநாமமே ஜபிக்கத்தக்கது. மோக்ஷத்திற்கு ஆதிகாரணமா யிருப்பது ஆசார்யன் கருணையே'' என்று அருளினார்.

**22. மேல்நாட்டு யாத்திரை**

*நல்லார் பரவும் இராமாநுசன், திருநாமம் நம்ப*
*வல்லார் திறத்தை மறவாதவர்கள் யவர், அவர்க்கே*
*எல்லா விடத்திலுமென்றும் மெப்போதிலு மெத்தொழும்பும்*
*சொல்லால் மனத்தால் கருமத்தினால் செய்வன் சோர்வின்றியே.*
*(இராமானுசனின் அடியார்களுக்கே நான் தாஸன்.)*

**கூரத்தாழ்வான் காஷாயம் தரித்தல்**

தில்லைத் திருச்சித்ரகூடத்தில் (சிதம்பரத்தில்) பெரு வலிமையுடைய சோழ அரசன் (பிற்காலத்தில்) க்ருமிகண்டன் என்று புகழப்பெறப் போகிறவன் ஆட்சி புரிந்து வந்தான். சைவ மதத்தில் மிகவும் ஈடுபட்டவனாய், விஷ்ணுவை நிந்திப்பவனான அந்த துஷ்டன் 'வேதநெறியானது சைவ தர்மத்தையே கூறுகிறது' என்று எண்ணி, புரோஹிதர்களை கொண்டு வைதிகர்களோடு வாதம் புரிந்து வந்தான். தீய அறிவையுடைய அந்த க்ருமிகண்டனுக்கு ''நம் தேசத்திலுள்ள பண்டிதர்கள் அனைவரிடமும் 'சிவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை' என்று பலாத்காரமாகக் கையெழுத்து வாங்க வேண்டும்'' என்னும் ஆத்ம விநாசகமான எண்ணம் ஏற்பட்டது.

சில பண்டிதர்கள் அவனுடைய ஆணைக்கு பயந்து கையெழுத்திட்டார்கள். மற்றும் சில பண்டிதர்கள் அவனிடமிருந்து தாங்கள் விரும்பும் வீடு, வயல் முதலியவற்றைப் பெறவேண்டும் என்னும் ஆசையினாலே கையெழுத்திட்டார்கள். சில பண்டிதர்கள் வீடு, வயல் முதலானவற்றையும், பசுக்களையும் கைவிட்டுவிட்டு அவன் நாட்டையும் விட்டு ஓடி விட்டார்கள்.

அந்தப் பண்டிதர்களில் நாலூரான் என்ற ஒருவர் கையெழுத்துப் போடாமல் அந்தச் சோழ ராஜாவைப் பார்த்து ''அரசனே! இந்த ப்ராக்ருதர்களான பலவிதமான மனிதர்களிடம் கையெழுத்து வாங்குவதால் என்ன பயன்? யதிராஜரும், கூரத்தாழ்வானும் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கிறார்கள். தலைசிறந்த வித்வான்களாகவும் வைஷ்ணவர்களாகவும் இருப்பவர்கள். அவர்களிருவரும் கையெழுத்திட்டு விட்டால் மூவுலகமும் கையெழுத்திட்டதாகும். அப்போது உங்களுடைய மநோரதமும் நிறைவேறும்'' என்று சொன்னான்.

நாலூரானுடைய அந்த வார்த்தையை ஏற்றுக் கொண்டு அரசன் யதிராஜரையும் கூரத்தாழ்வானையும் அழைத்து வருவதற்காகத் தூதர்களை ஸ்ரீரங்கம் செல்வதற்கு அனுப்பி

னான். அந்த தூதர்களும் வேகமாக ஸ்ரீரங்கத்தை அடைந்து "எம்பெருமானார் எங்கே? எம்பெருமானார் எங்கே?" என்று கூவிக் கொண்டு அவருடைய மடத்தையடைந்தனர். யதிராஜர் நீராட்டம் கண்டருள்வதற்காக நீர்க்குடத்தை ஏந்திவந்த கூரத்தாழ்வானுடைய செவியில் அந்தச் செய்தி அனைத்தையும் ஓர் அந்தணர் தலைவர் ரஹஸ்யமாக விண்ணப்பித்தார். கூரத்தாழ்வானும் அப்போதே எம்பெருமானாரின் த்ரிதண்டத் தையும் கமண்டலத்தையும் காஷாய வஸ்திரத்தையும் தரித்துக் கொண்டு அவரிடம் சொல்லாமலே தூதர்களோடு சென்று விட்டார். பெரிய நம்பியும் வேகமாகக் கூரத்தாழ்வானைப் பின் தொடர்ந்தார்.

## எம்பெருமானார் வெள்ளை வஸ்திரம் தரித்தல்

இந்தச் செய்தி அனைத்தையும் முதலியாண்டான் தன் ஆசார்யருக்கு அப்போதே விண்ணப்பித்தார். யதிராஜரும் "அப்படியானால் கூரத்தாழ்வானுடைய வெள்ளை வஸ்திரத் தைக் கொண்டு வா" என்று நியமித்து அந்த வெள்ளை வஸ்திரத்தைச் சாத்திக் கொண்டு பெரிய நம்பிக்கும் கூரத் தாழ்வானுக்கும் மங்களாசாஸனம் செய்துகொண்டு எழுந்தருளி யிருந்தார். "தேவரீர் இங்கு எழுந்தருளியிருப்பது ஆபத்துக் கிடமாகையால் தகாது" என்று சிஷ்யர்களால் பிரார்த்திக்கப் பெற்ற எம்பெருமானார் திருவரங்களின் நியமனத்தையும் பெற்று மேற்கு நோக்கிப் புறப்பட்டார்.

## திருமலை நல்லான் சிஷ்யர்கள்

அந்தப் பிரயாணத்தில் ஆறு நாள் பகலும் இரவும் உணவு கொள்ளாமல் யதிராஜர் காற்றிலும், மழையிலும் வாடி வருந்தி, ஆறாவது நாள் இரவு காட்டில் ஓர் மலையின் அருகில் எரியும் நெருப்பைக் கண்டு வியப்புற்று, அதனால் அங்கு மனிதர்கள் இருக்கிறார்கள் என்று ஊகித்து சிஷ்யர்களோடு அங்கு சென் றார். மலையடியில் இருந்த மனிதர்கள் அவர்களுடைய பேரொலியைக் கேட்டு, வந்து, ஆதரவோடு மலையடி வாரத்துக்கு அழைத்துச் சென்று, இயன்றவரையில் உபசரித்

தனர். நீங்கள் எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்? எதற்காகக் காட்டுக்கு வந்தீர்கள்?'' என்று கேட்டார்கள். ''ஒரு காரணத்தினால் ஸ்ரீரங்கத்திலிருந்து நாங்கள் காட்டுக்கு வந்துவிட்டோம்'' என்று பதிலுரைத்தனர். அதைக்கேட்ட வேடமுதலிகள் ''ஸ்ரீரங்கத்தில் எம்பெருமானார் பாங்காக எழுந்தருளியிருக்கிறாரா?'' என்று கேட்டார்கள்.

அதற்கு வைஷ்ணவர்கள் ''காட்டில் வசிக்கும் நீங்கள் எம்பெருமானாரை எப்படி அறிந்தீர்கள்?'' என்று கேட்டனர். அதைக் கேட்ட வேடமுதலிகள் ''சங்குசக்ர சின்னங்களை யுடைய ஒரு மஹான் நந்தீபுரத்திற்கு முன்பொருகால் வந்திருந்தார். அவரை ஸேவித்த எங்களுக்குக் கருணையோடு பஞ்ச ஸம்ஸ்காரங்களை அருளினார். அத்திகிரி அருளாளனான வரதன், முன்பொருகால் அவரைக் கடாக்ஷித்து 'நீ நாட்டுக்கு நல்லானாகையாலே நமக்கும் நல்லான்' என்று அருளினான்.

அந்தணர்களே! இப்படி நல்லானான அப்பெரியவருடைய சிஷ்யர்கள் நாங்கள். எங்களுக்கு நல்வார்த்தை சொல்லும் போது 'உங்களுக்கு எம்பெருமானாரே பரமாசார்யர்; அவரது திருவடித் தாமரைகளே உங்களுக்குத் தஞ்சம் என்று அறிவீர்களாக. அதைக் காட்டிலும் ப்ராப்யமும், ப்ராபகமும் வேறில்லை' என்று அருளினார்'' என்று உரைத்தனர்.

சிஷ்யர்கள் அந்த வேட முதலிகளுக்கு 'இவரே அவ்வெம் பெருமானார்' என்று எம்பெருமானாரை அன்போடு காட்டித் தந்தார்கள். உடனே அவர்கள் யதிராஜருடைய திருவடிகளில் வணங்கி, எம்பெருமானாருடைய நிலையைப் பார்த்துக் கலங்கினார்கள். தேனையும், கேழ்வரகு, தினை முதலான தானியங்களை அன்போடு ஸமர்பித்தார்கள். 'நல்லான் என்னும் காளமேகம் இந்தக் காட்டின் நடுவிலும் மழை பொழிந் திருக்கிறதே' என்று ஸ்ரீராமானுஜ முனிவர் மிகவும் உகப் படைந்தார்.

மறுநாள் விடியற்காலையில் எழுந்திருந்து, காலை அனுஷ்டானங்களை முடித்த யதிராஜர் தம் சிஷ்யர்களில்

ஒருவரையும் வேட முதலிகளில் ஒருவரையும் சேர்த்து, பெரிய நம்பி, கூரத்தாழ்வான் ஆகியவர்களைப் பற்றிய செய்தியை அறிவதற்காக ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பினார். ஆசார்ய பக்தியுடைய நாற்பத்தைந்து சிஷ்யர்கள் மஹாத்மாவான யதிராஜரைப் பின் தொடர்ந்தனர்.

**கொங்கில் பிராட்டி சரித்திரம்**

வேடமுதலிகள் ஸ்ரீ வைஷ்ணவ ச்ரேஷ்டையான கொங்கில் பிராட்டி என அழைக்கப்படும் சைலாசலம்பாவின் கிருஹத்திற்கு ஸ்ரீராமாநுஜரை அழைத்துச் சென்றனர். அவர்களை கண்டு மிக உகந்த கொங்கில் பிராட்டி வணங்கி, ''அறுசுவை உண்டியை தேவரீர்களனைவர்க்கும் அளிக்கிறேன். அடியேனது குடிசையில் இனிதாக அமுது செய்ய வேணும்'' என்று கூறினாள்.

''கருணை நிறைந்த தாயே! உனது இனிய வார்த்தை யாலேயே நாங்கள் திருப்தியடைந்தோம்; எங்களுக்கு உணவு வேண்டாம்'' என்று அருளினார்கள். கொங்கில் பிராட்டி அதைக் கேட்டுக் கைகூப்பி நின்று ''தேவரீர்கள் சந்தேகப்பட வேண்டாம். அடியேன் யதிராஜருடைய சிஷ்யை; ஸ்ரீராமாநுஜ ருடைய ஸம்பந்தம் அடியேனுக்கு உண்டு. கேளுங்கள். முன்னொரு சமயம் அடியேன் என் கணவரோடு கூட ஸ்ரீரங்கம் சென்றிருந்தேன். அப்போது வீட்டின் மாடியிலிருந்த நான், யதிராஜர் தினமும் ஏழு வீடுகளில் பிட்சை எடுப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அப்போது அவர் - வேதவேதாந்தங்களைக் கரைகண்ட வித்வான்களாலும், மற்றுமுள்ள அரசர்களாலும், பெரியவர் களாலும் ஸேவிக்கப்படுவதைக் கண்டேன். அப்போது ஒரு நாள் அந்த மாடியிலிருந்து இறங்கி வந்து அவரைப் பார்த்து தேவரீர் பிக்ஷையெடுத்து தினமும் காலக்ஷேபம் செய்கிறீர். ஆனாலும் அரசர்க்கரசர்களாலும் படித்தவர்களாலும், வேத வேதாந்தம் கரைகண்ட அனைவராலும் ஸ்ரீரங்கராஜனைப் போலே ஆராதிக்கப்படுகிறீர். பக்தவத்ஸலரே! இதன் காரணத்தைச் சொல்லவேணும்' என்று கேட்டேன்.

அதற்கு ஸ்ரீ இராமானுஜர் 'பகவத் விஷயமுள்ள ஸாரமான மந்த்ரம் ஒன்றை நான் அவர்களுக்கு உபதேசித்திருக்கிறேன். குழந்தாய்! அதனாலேயே அவர்களனைவரும் என்னை ஸேவிக்கிறார்கள்' என்று கூறினார். இவ்வார்த்தையைக் கேட்ட அடியேன் ஸ்ரீ இராமானுஜரைப் பார்த்து, 'யதிராஜரே! எனக்கு தேவரீர் அந்த மந்த்ரத்தை உபதேசிக்க வேண்டும்' என்ற கேட்டேன். யதிராஜரும் முதலில் குருபரம்பரையை உபதேசித்து, அதற்குப்பின் த்வயத்தை நன்கு அர்த்தத்தோடு) உபதேசித்து, மங்களமான பாதுகைகளையும் அருளினார். அப்போது கண்ட யதிராஜரான ஆசார்யரை நான் இனி எப்போது காணப்போகிறேன்?'' என்று கூறி ஆசார்யரிடம் ஈடுபட்டவளாய், கண்ணீர்சோர நின்றனர்.

அவளுடைய நடத்தையை கண்டு உகந்த யதிராஜர் அப்பெண்மணியை சமைக்கச் சொல்லிவிட்டு தம் சிடர்களைப் பார்த்து, ''அவள் எப்படிச் சமைக்கிறாள் என்பதை நீங்கள் கவனத்தோடு பார்க்க வேண்டும்'' என்று நியமித்தார். அப் பெண்மணி ஸ்நானம் செய்து, அன்போடு 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று உரைத்து, யதிராஜருடைய பாதுகைகளைக் கோவிலாழ்வாரில் எழுந்தருளப் பண்ணி, வணங்கி, குருபரம்பரையை அநுஸந்தித்து, த்வயாநுஸந்தானம் செய்பவளாய், பாதுகைகளுக்குத் திருமஞ்சனம் செய்து சந்தனம், புஷ்பம் முதலான திரவியங்களைக் கொண்டு முறைப்படி திருவாராதனம் செய்து, ஆசார்யத்யானத்தில் ஈடுபட்டவளாய், தளிகைகளை அமுதுசெய்வித்தாள்.

ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவரையும் வணங்கி, பக்தியோடு கூடியவளாய், அமுது செய்ய வேண்டுமென்று அன்போடு பிரார்த்தித்தாள். சிஷ்யர்களிடமிருந்து இந்தச் செய்தி அனைத்தையும் கேட்ட யதிராஜர் கொங்கில் பிராட்டி என்னும் அப்பெண்மணியிடம் மிகவும் உகப்படைந்தவராய், 'அந்தப் பாதுகைகளை இப்போதே கொண்டுவா' என்று நியமித்தார். பக்தியோடு திருவாராதனம் செய்யப்படுமவையாய், அவளால் கொண்டுவரப்பட்ட அப்பாதுகை

களைக் கண்டு இராமானுஜர் அவளை நோக்கி இராமானுஜரால் ஸ்ரீரங்கத்தில் உபதேசிக்கப்பட்ட மந்திரத்தை கூறுமாறு வினவ அவளும் யதிராஜரின் காதில் அம்மந்திரத்தை உரைத்தாள்.

உகந்த யதிராஜரும் ''அப்படியானால் இந்த வைஷ்ணவர்கள் திரளிலே உனக்கு மந்த்ரோபதேசம் செய்த ஆசார்யர் இருக்கிறாரா, இல்லையா என்பதை விரைவில் கண்டு சொல்'' என்று நியமித்தார். எதிகட்கிறைவரின் அவ் வார்த்தையை அங்கீகரித்து, எல்லோரையும் பார்த்து, யதிராஜரின் அருகில் வந்து, அவருடைய திருவடித் தாமரை யைக் கண்டு உகந்து, ''இந்தத் திருவடிகள் அவருடையவை போல அழகாகக் காட்சியளிக்கின்றன. அந்தப் பெரியவருக்கு இருந்த த்ரிதண்ட காஷாயங்கள் இப்போது காணப்படாமை யாலே, இவரே யதிராஜர் என்று எப்படி நிர்ணயிப்பது?'' என்று உரைத்தாள்.

அதைக்கேட்ட பகவத் இராமானுஜர் உறுதியான ஆசார்ய நிஷ்டையுடைய அவளைப் பார்த்து ''நானே அவ்வெம் பெருமானார்; ஸ்ரீரங்கத்திலிருந்து இப்போது வந்திருக்கிறேன். ஒரு காரணத்தினால் (த்ரிதண்டமில்லாமல்) வெள்ளை வஸ்த்ரம் உடுத்திருக்கிறேன்'' என்று கூறினார். அவருடைய செய்தி யனைத்தையும் அறிந்த அப்பெண்மணி அவருடைய திருவடி களில் விழுந்து, அத்திருவடித் தாமரைகளில் ஈடுபட்ட வளாகையாலே பெருந்துன்பத்தையடைந்தாள்.

யதிராஜர் அவளையும் அவளுடைய எல்லா நற் குணங்களையும் கண்டுகந்து, லோகநாதனான கண்ணன் துர்யோதனாதியர்களான அரசர்களை விட்டு, பரிசுத்தமானவை யாய், குணமுடையவையான விதுரரின் அன்னங்களை அமுது செய்தான்; ஆகையால் பாவனத்வம் முதலான நற்குணங்கள் நிரம்பியிருப்பதால் மிகவும் போக்யமான இவளுடைய அன்னம் உண்ணத்தக்கதே; எக்குறையுமில்லை; என்று அருளினார். அதற்குப்பின் ஆசார்யருடைய ஆணையாலே சிஷ்யர்கள் அனைவரும் அவளுடைய வீட்டில் அமுது செய்தனர்.

தன் கணவனுக்கு ஜ்ஞானம் உண்டாவதற்காக மாடியி லிருந்த தன் கணவனை வரவழைத்து அறுசுவை உண்டியோடு உச்சிஷ்டத்தை அவனை உண்ணச் செய்தாள். விஷ்ணு பக்தையான அந்த மங்கை நல்லாள் கணவனைப் பார்த்து "ஸ்ரீரங்கத்திலிருந்து சிஷ்யர்களோடு கூட ஆசார்யரான யதிராஜர் ஒரு காரணத்தினாலே நமது வீட்டிற்கு எழுந்தருளி யிருக்கிறார். அமுது செய்ய வேண்டும் என்று அடியேன் பிரார்த்தித்த பின்பும் உறுதியான விரதமுடைய அவர் நீர் அவைஷ்ணவராயிருப்பதால் பட்டினி கிடக்கிறார். நீர் எனது ஆசார்யரான யதிராஜரை ஆச்ரயிக்க வேண்டும்" என்று கூறினாள்.

விடிந்தவுடன் அவனும் மனம் மாறி யதிராஜரிடம் சென்று, அவரை வணங்கிக் கைகூப்பி நின்றான். அவன் மனைவியாலே அவனுக்காகப் பிரார்த்திக்கப்பட்ட யதிராஜர் அவ்வந்தணனுக்கு அன்போடு பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்தார். அப்போதே அவருக்கு 'ஸ்ரீரங்கதாஸர்' என்னும் தாஸ்யநாமத்தையும் அளித்தார்.

### த்ரிதண்ட காஷாயங்களை ஏற்றுக் கொள்ளல்

அவ்விடத்தில் யதிராஜர் நான்கு நாட்கள் இனிது தங்கி, காஷாயவஸ்த்ரம், த்ரிதண்டம், கமண்டலம் ஆகியவற்றை ஸம்பாதித்து, தமது திருவாராதனப் பெருமாளான வரதராஜனின் திருமுன்பே அவற்றை வைத்து, முன்போலே தரித்துக் கொண்டார். ஸ்ரீரங்க தாஸரால் அன்புடன் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீராமானுஜராகிய ஆசார்ய ச்ரேஷ்டர் அந்தக் கிராமத்தி லுள்ள எல்லா ஜனங்களையும் தமது பரிபூர்ண கடாக்ஷத்துக்கு இலக்காக்கி, தமது சிஷ்யர்களாகச் செய்தார்.

பின்னர் மிதிலாபுரிக்குச் சென்றார். அங்கு சில காலம் வாழ்ந்து பின் சாளக்கிராமம் என்று இப்போது அழைக்கப் படும் இடத்தையடைந்தார். அங்கிருந்த அந்தணர்கள் மாயாவதி களாயிருந்தமையால் வைஷ்ணவோத்தமரான இராமானுஜரை

உபசரிக்கவில்லை. இப்படி பாகவதாபசாரத்தில் அழுந்தி நிற்கும் அவர்களைக் கண்ட எம்பெருமானார் அவர்களுக்கு அருள்புரிவதற்காகத் தம் சிஷ்யரான முதலியாண்டானைப் பார்த்து ''பகவத் பாகவதநிஷ்டையுடையவரே! இந்தக் கிராமத்திலுள்ளவர்கள் எந்தக் குளத்ததிலிருந்து எப்போதும் நீர் எடுக்கிறார்களோ, அக்குளத்தில் நீர் உமது ஸ்ரீபாதத்தை நீட்டிக் கொண்டிரும்'' என்று அருளிச் செய்தார்.

ஆசார்யபக்தராய், முதலியாண்டானும் அவ்வண்ணமே செய்தார். அவருடைய ஸ்ரீபாததீர்த்த மஹிமையாலே அவ்வூரார் அனைவரும் அஹங்காரம் நீங்கப்பெற்று யதிராஜரை ஆச்ரயித்தார்கள். எதிகட்கிறைவர் அவ்வூருக்கு உலகெங்கும் புகழ்பெற்ற சாளக்கிராமம் என்னும் திருநாமத்தைச் சூட்டி னார்.

அந்த சாளக்கிராமத்தைச் சேர்ந்தவராய், சாளக்கிராம ஐயன், ஆந்த்ரபூர்ணர் எனும் திருநாமங்களையுடைய வடுகநம்பியைக் கடாக்ஷித்து, அவருக்கு நம் தர்சனத்தின் அர்த்தங்களை உபதேசித்து அவரைத் தன் திருவடி நிழலாக ஆக்கிக் கொண்டார்.

தமது சிஷ்யரான தொண்டனூர் நம்பியைக் கண்டு அருள்புரிய விரும்பி மைசூர் மாநிலத்திலுள்ள தொண்ட னூருக்குப் புறப்பட்டார். அந்தத் தொண்டனூர் நம்பியும் ஆசார்யர் எழுந்தருள்வதைக் கேள்விப்பட்டு, உகந்த நெஞ்சின ராய் எதிர் கொண்டழைத்து, தம் திருமாளிகைக்கு அழைத்து வந்து, முறைப்படி ஆராதித்தார்.

## விட்டலதேவனை ஆச்ரயித்தல்

அக்காலத்தில் விட்டலதேவன் என்பவன் அந்த நாட்டை அரசாண்டு வந்தான். அவனுடைய பெண்ணை ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸு பிடித்திருந்தது. அந்த அரசன் மிகவும் வருத்த முற்று அந்த ரக்ஷஸ்ஸை ஓட்டுவதற்கு மாந்திரிகர்கள் பலரை அழைத்தான். அங்கு வந்த பல மாந்த்ரிகர்களும் அந்த ரக்ஷஸ்ஸை ஓட்டுவதில் வல்லமையற்றவர்களாய் சென்றனர். தொண்டனூர்

நம்பி, யதிராஜரை ஆராதிப்பதற்காக உஞ்சவ்ருத்தி செய்வதற்கு விட்டலதேவனுடைய தலைநகருக்குச் சென்றார். அங்கு ராஜாவின் அரண்மனையையடைந்து, மிகவும் வருந்தி நிற்கும் ராஜபத்னியைப் பார்த்து ''அம்மா! ஏன் வருந்துகிறாய்? இவ்வருத்தத்திற்குக் காரணத்தைக் கூறுவாய்'' என்றார். அந்த ராணியும் தன் பெண்ணைப் பற்றிய செய்தியனைத்தையும் அவரிடம் விண்ணப்பித்தாள். அதைக் கேட்ட தொண்டனூர் நம்பி ''அம்மா! என் ஆசார்யரான யதிராஜர் மந்திரங்களில் வல்லவராய் எழுந்தருளியிருக்கிறார். யோகியான அவர் உன்னுடைய பெண்ணைப் பார்த்தாரானால் இந்த துஷ்டப் பிசாசம் அவளைவிட்டு வெகுதூரம் சென்றுவிடும்'' என்று சொன்னார். (யாதவப்ரகாசரிடம் சிஷ்யராய் இருந்த போது) எதிகட்கிறைவர் ராஜகுமாரியைப் பிடித்திருந்த ப்ரஹ்ம ரக்ஷஸ்ஸை ஓட்டிய செய்தியை விரிவாகக் கூறினார். அதைக் கேட்டு வியப்படைந்த ராஜபத்னி அச்செய்தி அனைத்தையும் ராஜாவிடம் விண்ணப்பித்தாள். அவளுடைய வார்த்தையைக் கேட்ட அந்த அரசன் ''எவர் என்னுடைய பெண்ணைப் பிடித்திருக்கும் பிசாசத்தை ஓட்டுகிறாரோ அவரே ஆசார்யர்; அவருடைய திருவடிகளை நான் ஆச்ரயிப்பேன் என்று சொன்னான். தொண்டனூர் நம்பி யதிராஜருக்கு இச்செய்தி யனைத்தையும் விண்ணப்பித்தார்.

ராஜபத்னியால் தூண்டப்பட்டு மிகுந்த பக்தியோடு ஆசார்யரான யதிராஜரைத் தன் அரண்மனைக்கு எழுந் தருளும்படி பிரார்த்தித்தான். யதிராஜரோ மறுக்க, தொண்டனூர் நம்பி முதலானவர்கள் ''எம்பெருமானாரே! இந்த ராஜாவி னால் நம்முடைய வைஷ்ணவ தர்சனத்துக்குப் பல பெரும் சிறப்புகள் ஏற்படும் என்று கூறினர். எதிகட்கிறைவரும் அரசனின் அரண்மனைக்குப் புறப்பட்டார். அவ்வரசனும் எல்லாச் சேனைகளோடும் யதிராஜரை எதிர்கொண்டழைத்து, முறைப்படி ஆராதனம் செய்தான்.

ஆசார்யரான யதீந்த்ரருடைய ஸ்ரீபாததீர்த்தத்தை ராஜ புத்ரியைப் பருகச் செய்து, ஸ்ரீஇராமாநுஜருடைய சிஷ்யர்கள் அவளுடைய தலையிலும் அதை ப்ரோக்ஷித்தார்கள். அந்த

அரசனின் பெண் உடனே பிசாசத்தினால் விடுவிக்கப்பெற்று, பைத்தியம் நீங்கினாள். மிகவும் ஆனந்தமடைந்த அரசன் ஆசார்யரான இராமானுஜரை வணங்கி சிஷ்யனான். யதிராஜரும் அவனுக்கு பஞ்சஸம்ஸ்காரங்களைச் செய்தருளினார். **'விஷ்ணு வர்த்தனதாஸன்'** என்னும் தாஸ்யநாமத்தையும் அளித்தருளினார்.

## பௌத்தர்களை ஜயித்தல்

இவ்விஷயங்களை கேள்விப்பட்டு மிகவும் அஹங்காரம் கொண்ட பதினாயிரம் பௌத்தர்கள் யதிராஜரையடைந்து, அவரைச் சூழ்ந்து கொண்டு 'எங்களை வாதத்தில் வெல்லாமல், எங்களுடைய சிஷ்யனுக்கு வைஷ்ணவப் பெயரை வைத்து, வசப்படுத்தி, நீர் எப்படி எங்கு சென்று விடுவீர் பார்ப்போம். நீர் வித்வானாகில் எங்களோடு தர்க்கவாதம் புரியும்.'' என்று கூறினார்கள். பதினாயிரம் சமணர்களைப் பார்த்த பின்பும் யதிராஜர் நெஞ்சில் தைர்யம் உடையவராய், ஒரு பெரிய



ராமானுஜர் தொண்டனூர்

மண்டபத்தில் திரையிடச் செய்து, அந்தத் திரைக்குள்ளே ஆயிரம் நாவுடைய ஆதிசேஷனாகத் தாம் இருந்துகொண்டு, ஒவ்வொரு சமணன் சொன்ன ஒவ்வொரு யுக்திக்கும் பதினாயிரம் யுக்திகளோடு கூடிய பதிலைத் தெளிவாகக் கூறி, எல்லாச் சமணரையும் ஜயித்து விட்டார். அச் சமணர்களில் சிலர் யதிராஜருடைய திவ்யஸக்தியைக் கண்டு வியப்புற்று அவரை ஆச்ரயித்து சிஷ்யரானார்கள். சிலர் தோற்று ஓடிப் போனார்கள்.

## 23. திருநாராயணபுரம் ப்ரதிஷ்டை

*நின்றவண் கீர்த்தியும் நீள்புனலும் நிறைவேங்கடப்பொற்*
*குன்றமும் வைகுந்த நாடும் குலவிய பாற்கடலும்*
*உன்தனக்கெத்தனை யின்பந்தரும் உன்னிணை மலர்த்தாள்*
*என்தனக்கும் அது இராமாநுச! இவையீந்தருளே.*
*(இராமானுச! எனக்கு எல்லாச் செல்வங்களும் அருள்.)*

### யாதவாசலத்தை அடைதல்

யதிராஜர் தொண்டனூர் நம்பியாலும், எல்லா சிஷ்யர்களாலும் அரசனாலும் சூழப்பெற்றவராய், தொண்டனூரிலே அனைவரையும் ரக்ஷித்துக்கொண்டு எழுந்தருளியிருந்த போது பாடம் செய்யப்பட்ட திருமண்காப்பு கிடைக்காமையால் கலங்கி நின்றார். சரணமடைந்தவர்களின் வருத்தத்தைப் போக்கும், யாதவாசல நாயகனாகிய திருநாரணன் என்னும் எம்பெருமான் கனவில் தோன்றி, லோகாசார்யரான யதிராஜரைப் பார்த்து ''யதிச்ரேஷ்டரே! யாதவாத்ரியில் வெள்ளை மண் இருக்கிறது. விரைவில் அங்கு வாரும் கவலைப்பட வேண்டாம். அந்த யாதவாசலத்தில் நானும் வாழ்கிறேன். (பூமியில் புதைந்திருக்கும்) என்னை எடுத்து, பிரதிஷ்டை செய்து விரைவிலேயே எனக்குக் கோவில் கட்டுவீராக'' என்று சொன்னான்.

அதற்குப்பின் யதிராஜர் கனவு கலைந்து பரபரப்போடு எழுந்திருந்து கனவில் எம்பெருமானிட்ட கட்டளையை ப்ரீதியோடு சிஷ்யர்களுக்கு விவரித்தார். அரசனான விஷ்ணு

வர்த்தனையும் அழைத்து, அவனுக்கு அக்கனவை பற்றி கூறி, ''என்னோடு கூட யாதவாசலத்துக்கு நீயும் வரவேணும்'' என்று கூறினார்.

அதைக்கேட்டு அவ்வரசனும் மிகவுகந்து, வழியிலுள்ள காடுகளை வெட்டச் செய்து நன்கு வழி ஏற்படுத்திக்கொண்டு, ஆசார்யரோடு தானும் யாதவாத்ரிக்குக் கூட சென்றான். பஹுதான்ய வருஷத்தில் தை மாஸத்தில் யதிராஜர் யாதவாத்ரியிலுள்ள வேதபுஷ்கரிணியை அடைந்தார். அந்த யாதவாத்ரியில் திருநாராயணப் பெருமாளை தேடிப் பார்த்து எங்கும் காணாமல் குறை வரும்படி நாம் ஏதேனும் செய்தோமோ?' என்று கலங்கிக் கண்ணயர்ந்தார்.

**திருமண்காப்பு கண்டெடுத்தல்**

அப்போது யதிராஜருடைய கனவிலே திருநாரணன் ''கல்யாண தீர்த்தத்தின் கரையில் தென்மேற்கு மூலையில் மலைத்தாழ்வரையில் செண்பகமலர்ச் சோலை உள்ளது. அதனருகில் வடக்குத் திசையில் ஒரு துளசி மரம் உள்ளது. அதற்குக் கீழே ஒரு பெரிய புற்று உள்ளது. அந்தப் புற்றிலேயே நான் வாழ்கிறேன். புள்ளரையனான கருடனாலே ச்வேதத்வீபத்திலிருந்து வெள்ளை மண் என் ஆணையாலே கொண்டு வரப் பெற்று, கல்யாண தீர்த்தத்தின் வடக்குப் பகுதியில் என்றும் குறையாதபடி சேமிக்கப்பட்டுள்ளது. உமக்குத் தேவையானதாய், திவ்யமானதான திருமண் இவ்விடத்தில் உள்ளது'' என்று அருளிச் செய்தான்.

எம்பெருமானால் நேரே சொல்லுவது போலே ஸ்வப்னத்தில் சொல்லப்பட்ட இந்த வாக்கியத்தைக் கேட்ட யதிராஜர் மிகவுகந்தவராய், கனவில் கூறப்பட்ட துளஸி மரத்தையடைந்து, அதை வணங்கி, அதனடியிலிருந்த புற்றை வெட்டி, அங்கு ஒளிக்கடலாய்க் காட்சியளித்த யாத்வாத்ரி நாயகனைக் கண்டார்.

சகாப்தம் 1012க்கு மேற்பட்ட பஹுதான்ய வருஷம் தை மாஸம் ஸுக்ல பக்ஷ சதுர்த்தசி புனர்வஸு நக்ஷத்திரத்தில்

யாதவாசலத்தில் அந்தப் புற்றிலிருந்து திருநாராயணப் பெருமாள் மஹாத்மாவான யதிராஜருக்குக் காட்சியளித்தார். அவரைக் கண்டு உகந்த அனைவரும் சிங்கநாதம் செய்தார்கள். பேரி, மிருதங்கம் முதலிய வாத்தியங்களின் ஒலியும் பெரி தாக எழுந்தது. அந்தப் பெருமானை மஹா தேஜஸ்வியான யதிராஜர் பாலாலே திருமஞ்சனம் செய்து மூன்று தினங்கள் தாமே திருவாராதனம் செய்து, பிறவிப் பயன் பெற்றவராய் மிகவும் உகப்படைந்தார்.

அதற்குப்பின் கல்யாண தீர்த்தத்தின் வடக்குப் பகுதி யிலுள்ள மலையை அடைந்து, அதன் அடிவாரத்தில் எதிராஜர் த்ரிதண்டத்தாலே வெட்டி, வெண்மையான திருமண்காப்பைக் கண்டெடுத்தார். அரசனைக்கொண்டு அந்த மலையிலுள்ள காடு முழுவதையும் அழித்துப் பட்டணத்தை ஏற்படுத்தி, திருநாராயணபுரம் என்னும் திருநாமத்தையும் அதற்கு அளித்தார்.

உயரமான மதில்களும், கோபுரங்களும், மண்டபங்களும் விளங்காநிற்பதான கோயிலை அந்தத் திருநாராயணனுக்கு ஏற்படுத்தினார். முறைப்படி ஸம்ப்ரோக்ஷணம் முதலான கார்யங்களைச் செய்வித்து, நித்யோத்ஸவம் முதலான கார்யங்களையும் அவ்வக்காலங்களில் யதுகிரி நாதனான பெருமாளுக்கு செய்து கொண்டிருந்தார்.

**யதிராஜரும், டில்லி ராஜாவும்**

திருநாராயணனுக்கு ப்ரஹ்மோத்ஸவம் செய்ய விரும்பிய யதிராஜர் அந்தப் பெருமாளுக்கு அங்கு உத்ஸவமூர்த்தி இல்லாமையால் அவருடைய திருவடித் தாமரையைத் தியானித்துக்கொண்டு சயனித்திருந்தார். அப்போது திரு நாராயணன் யதிராஜரின் கனவில் தோன்றி "ராமப்ரியர் என்னும் என்னுடைய உத்ஸவமூர்த்தி டில்லி ராஜாவின் அரண்மனையில் இப்போது இருக்கிறார். அங்கு சென்று அவரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவாயாக" என்று நியமிக்க யதிராஜரும் டில்லி நோக்கிப் பயணமானார்.

தாம் வந்த காரியத்தைத் தெரிவிப்பதற்காக தன் சிஷ்யர்களை டில்லி அரசனிடம் அனுப்பினார். யதீந்த்ரரின் வரவையறிந்த டில்லியரசன் ராமாநுஜரைக் காண்பதற்காக உகப்புடன் வந்து அவரை எதிர்கொண்டழைத்து, வணங்கி, 'தங்களுடைய வரவுக்குக் காரணத்தைச் சொல்லவேணும்' என்று அன்புடன் வினவினான். யதிராஜரும் ''அரசனே! எங்களுடைய திருநாராயணப் பெருமாளின் உத்ஸவமூர்த்தியான ராமப்ரியர் இப்போது உமது அரண்மனையிலிருக்கிறார். அந்தப் பெருமானை நீர் உடனே தரவேண்டும்'' என்று கூறினார். அவ்வரசனும் முன்பு தென்னாட்டுப் படையெடுப்பின் போது கொள்ளையடிக்கப்பட்ட விஷ்ணு மூர்த்திகளையும் சைவ விக்ரஹங்களையும் ஒன்றுவிடாமல் யதிராஜருக்குக் காட்டினான்.

அந்த விக்ரஹங்களில் தாம் தேடிவந்த (திருநாராயணப் பெருமாளுக்குப் பொருந்தும்படியான) உத்ஸவமூர்த்தியைக் காணாமையால் கலக்கமுற்ற யதிராஜர் அவ்வரசனைப் பார்த்து எனக்கு மிக இனிய பெருமாளான ராமப்ரியர் நீர் காட்டிய இந்த விக்ரஹங்களில் காணப்படவில்லை. இவைபோல் மற்ற விக்ரஹங்கள் உம்மிடமிருந்தால் அவற்றையும் விரைவில் கொண்டுவரவேண்டும்'' என்று கூறினார்.

யதிராஜரது அவ்வார்த்தையைக் கேட்ட டில்லி அரசன் புன்சிரிப்புடையவனாய், ''உம்முடைய பெருமாளான அந்த ராமப்ரியர் என் அரண்மனையிலிருந்தால், உம்முடைய அழைப்பை ஏற்றுக் கொண்டு அவரே ஏன் உம் அருகில் வரவில்லை-'' என்று வினவினான். உண்மையான அவ் வார்த்தையைக் கேட்டு வெட்கமுற்று, பதில் சொல்ல முடியாதவரான யதிராஜர் கவலையும், வருத்தமும் நிறைந்தவராய், தம்மிருப்பிடத்தை அடைந்து, வருத்தத்தோடு உறங்கலானார்.

### யதிராஜரும், செல்வப்பிள்ளையும்

அப்பொழுது கனவில் தோன்றிய ராமப்ரியரான பெருமாள் ''பேரறிவாளரே! ஏன் வருந்துகிறீர்? இந்த அரசனின்

மகளாலே பிரியமாக ஆராதிக்கப்பட்டவனாய், அவளுடைய பள்ளியறையில் நான் வாழ்கிறேன். அங்கு வந்து என்னை அழைத்துச் செல்லும்'' என்று அருளிச் செய்தார். யதிராஜ ருடைய இந்தக் கனவுச் செய்தியை அறிந்த டில்லிராஜா மிகவும் வியப்புற்றவனாய், தன் பெண்ணின் பள்ளியறைக்கு அவரை அழைத்துச் சென்றான்.

''செல்வப்பிள்ளாய்! வாராய்'' என்று பேரன்புடன் யதிராஜர் அழைத்த அன்புக் குரலைக் கேட்டு அதற்கு வயப்பட்டு, திருவை மார்பில் தரித்தவராய், பீதாம்பரத்தை இடையில் அணிந்தவராய், நெற்றியில் கஸ்தூரி திருநாமத் தோடு விளங்காநிற்பவராய், திருவாபரணங்களால் அலங் கரிக்கப் பெற்றவராய் 'தன்னியலோசை சலன்சலன் என்றிட' என்கிறபடியே செம்பொற் சதங்கைகள் சலசலவென்று ஒலிக்க, அனைவரும் காணும்படி அப்பெண்ணின் படுக்கையாகிற ஆஸனத்திலிருந்து ராமப்ரியர் உகப்புடன் விரைவில் வந்தார். அப்படிப் பரபரப்போடு வந்து, அந்த ராமப்ரியராகிய பெருமாள் யதிராஜரின் மடியில் வீற்றிருந்தார்.

ஆனந்தக் கடலில் மூழ்கியவராய், திருமேனியில் மயிர்க்கூச்செறியப் பெற்றவராய் 'என் செல்வப்பிள்ளையே!' என்று அப்பெருமாளை ஆரத்தழுவினார். ராமப்ரியர் என்று ப்ரஸித்தி பெற்றிருந்த அந்தப் பெருமாளுக்கு யதிராஜரால் சாத்தப்பெற்ற 'செல்வப்பிள்ளை' (ஸம்பத்குமாரன்) என்னும் திருநாமம் அன்றுமுதல் உலகில் ப்ரஸித்தி பெற்றதாயிற்று. யதிராஜபுத்ரர் என்றே அந்த ராமப்ரியரை அனைவரும் அழைக்கலாயினர். மிகவும் வியப்புற்ற டில்லி ராஜாவும் யதிராஜரின் திருவடிகளில் வணங்கி பக்தியாலே யதிராஜரை உபசரித்து பேரானந்தமடைந்தான். பின்னர் செல்வப் பிள்ளையை அழைத்துக்கொண்டு யதிராஜர் யாதவகிரியாகிற திருநாராயணபுரத்திற்குச் செல்லத் தொடங்கினார்.

பரமஸாத்விகையான டில்லி ராஜகுமாரி இந்தச் செய்தியைக் கேட்டு மிகவும் வருத்தத்தையடைந்தாள். தந்தையை நோக்கி''என் நாயகனாகிற செல்வப் பிள்ளையை

நீர் யதிராஜருக்குக் கொடுத்துவிட்டீராகில், அவரது பிரிவை நான் ஒரு கணமும் சகிக்கமாட்டேன். எனது நாயகனுடைய தாங்கவொண்ணாத பிரிவால் இன்றே உயிரை விட்டு விடுவேன்'' என்று கூறினாள். பெண்ணிடம் பேரன்பு கொண்ட அரசன் அவளது வருத்தத்தைக் கண்டு யதிராஜரிடம் ''செல்வப் பிள்ளையாகிற அழகிய பெருமாளை என் பெண்ணின் பொருட்டு அளிப்பீராக'' என்று அவரிடம் பிரார்த்தித்தான்.

அரசனின் அவ்வார்த்தையைக் கேட்ட யதிராஜர் அவனைப் பார்த்து ''அரசனே! எங்களை நோக்கி உகப்புடன் தாமே வந்தவரான எங்கள் பெருமாளை உம்முடைய பெண்ணிற்கு எப்படிக் கொடுக்க முடியும்? இவரைப் பெறுவதற்கன்றோ நான் இங்கு வந்திருக்கிறேன். 'உம்முடைய பெருமாளான அந்த ராமப்ரியர் என் அரண்மனையிலிருந்தால் உம்முடைய அழைப்பை ஏற்றுக்கொண்டு அவரே ஏன் உம் அருகில் வரவில்லை?' என்று நீர் முன்சொன்ன வார்த்தையை இப்போது நினைத்துப் பார். நீ சொன்னபடி எங்களுடைய பெருமாள் எங்களிடம் வந்து விட்டார். அப்படி வந்த பெருமாளை உனக்கு எப்படித் தரமுடியும்?'' என்று கூறினார்.

யதிராஜருடைய வார்த்தையைக் கேட்டு வெட்கமுற்ற அவ்வரசன் பதில் சொல்ல இயலாதவனாய், மந்திரிகளோடு ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். அதன்படி அவ்வரசன் தன்னுடைய பெண்ணோடுகூட ராமப்ரியரைப் பல்லக்கில் எழுந்தருளச் செய்து, பல காணிக்கைகளோடு ராமப்ரியரை அன்போடு எதிகட்கிறைவர்க்கு அளித்து ஆனந்தமடைந்தான். தன் பிள்ளை ஒருவனை பெண்ணுக்கு துணையாக அனுப்பி னான். செல்வப்பிள்ளையோடு டில்லி ராஜகுமாரியும் பல்லக்கில் ஏறி அமர்ந்து, யாதவகிரிக்குப் புறப்பட்டாள்.

செல்லும் வழியிலேயே தாமரைத் தடங்கண்ணியான அந்தத் துலுக்கநாச்சியார் எம்பெருமானோடு சடக்கென ஐக்யமாகிவிட்டார். பல்லக்கில் செல்வப் பிள்ளை மாத்திரமே காணப்பட்டார். டில்லிராஜாவின் பெண்ணான நாச்சியார் அப்போது காணப்படவில்லை. அனைவரும் அதனால்

பெரும் வியப்புற்றார்கள். டில்லி ராஜகுமாரன் வியப்பையும், வருத்தத்தையும் அடைந்து, யதிராஜரோடு கூடத் திருநாராயண புரம் சென்று, எம்பெருமானிடம் பக்தியுடையவனாய் ஆனான்.

**செல்வப் பிள்ளை ப்ரதிஷ்டை**

அதற்குப்பின் யதிராஜர் செல்வப்பிள்ளையை விரைவில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு யாதவாசலத்துக்கு வந்து, சாஸ்திர முறைப்படி ஸம்ப்ரோக்ஷணம் செய்தார். எல்லா மஹோத்சவங்களையும் நடத்தி வைக்கும் உத்ஸவமூர்த்தியை ஏற்பாடு செய்து, எல்லா மஹோத்ஸவங்களையும் புத்ர வாத்ஸல்யத்தோடு செய்து கொண்டிருந்தார். அப் பெருமாளோடு ஐக்யமான டில்லிராஜகுமாரியை அர்ச்சை உருவில் எழுந்தருளச் செய்து, அப்பெருமானுடைய திருவடித் தாமரைகளின் இடையில் சாஸ்தரவிதிப்படி பிரதிஷ்டை செய்வித்தார் யதிராஜர்.

தன் பெண் ராமப்ரியருடன் சரீரத்தோடு ஐக்ய மடைந்ததைத் தன் பிள்ளையின் வாயிலிருந்தே கேள்விப்பட்டு, டில்லிராஜா பெருவியப்புற்று நாராயணனிடம் பக்தி யுடைய வனாகி, பெண்ணிடம் வாத்ஸல்யத்ினாலே ஜகதாசார்ய ரான யதிராஜரைப் பேரன்போடு ஆராதித்து தன்னுடைய மாப்பிள்ளையான செல்வப்பிள்ளைக்கு பெருஞ்செல்வத்தை ஸமர்ப்பித்தான்.

**பஞ்சநாராயண ப்ரதிஷ்டை**

யதிராஜர் விஷ்ணுவர்த்தன ராஜாவைக் கொண்டு தழைக்காட்டில் கீர்த்தி நாராயணன் என்கிற வான்புகழ் நாராயணன், தொண்டனூரில் லட்சுமிகாந்தன் என்கிற ஸ்ரீமந் நாராயணன், கதுகலத்தில் (தற்போதைய கடக் 'Gadag') வீரநாராயணன், விஜயாபுரத்தில் விஜய நாராயணன், வேலூரில் கேசவ நாராயணன் என்கிற பஞ்ச நாராயணப் ப்ரதிஷ்டை செய்தருளினார்.



தொண்டனூர் ஏரி

தம் திருநாமத்தைக் கொண்டு யதிராஜர் மடம் என்னும் பெரியமடத்தை அவ்வூரில் ஸ்தாபித்து, ராமாநுஜர் திரு நாராயணபுரத்தில் இனிது வாழ்ந்து வந்தார்.

மக்களின் குடிநீர் வசதிக்காக நீர் தேக்க திட்ட மொன்றையும் நிறைவேற்றி வைத்தார். மூன்று புரம் மலை களால் முக்கோண வடிவில் அமைந்த பள்ளத்தாக்கில் பாயும் நீரை தேக்கி "மோதி தலாப்" (முத்து ஏரி) என்று இக்காலத்தில் கூறப்படும் ஏரியை அமைத்தார். இரண்டரை மைல் நீளமும் ஒரு மைல் குறுக்களவும் கொண்ட இந்த ஏரி இன்றளவும் பலரின் தாகத்தை தீர்த்து வருகிறது.

இந்தப் பெரிய மலைக்கு (நாலு யுகங்களில்) நான்கு திருநாமங்கள் உண்டு. முதலாவதான கிருதயுகத்தில் மஹா புருஷராய், ஜ்ஞாநாதிபரிபூர்ணரான ஸனத்குமாரர் ப்ரஹ்ம லோகத்திலிருந்து திவ்யவிமானத்திலேறி பூமிக்கு வந்து, இங்கு நாராயணனைப் பிரதிஷ்டை செய்து அப்பெருமானை முறைப்படி திருவாராதனம் செய்ததால் அப்போது இந்த மலைக்கு 'நாராயணாத்ரி' என்று திருநாமமாயிற்று.

திரேதாயுகத்தில் 'தத்தாத்ரேயர்' என்று பிரஸித்திபெற்ற மஹாயோகியானவர் நாலு வேத புருஷர்களையும் நாலு சிஷ்யர்களாகக் கொண்டு வேத புஷ்கரிணிக் கரையில் தவம் புரிந்து கொண்டிருந்தார். அதனால் அந்த யுகத்தில் இந்த மலைக்கு 'வேதாத்ரி' என்று திருநாமமாயிற்று. த்வாபரயுகத்தில் யதுக்களின் தலைவனான கண்ணனாலே இப்பெருமான் ஆராதிக்கப் பட்டனாகையாலே இந்த மலை 'யாதவாத்ரி' என்று புகழ்பெற்றது. கலியுகம் வந்தவளவில் யதிராஜர் இப் பெருமானை ஆராதிக்கையாலே இம்மலைக்கு 'யதிசைலம்' என்னும் திருநாமம் உண்டாயிற்று.

யதிராஜரின் ஸேவையில்லாமையாலும், க்ருமிகண்ட னுடைய கொடிய தண்டனைக்கு பயந்தும் எல்லா ஜனங்களும் ஸ்ரீரங்கத்திலிருந்து பெண்டு பிள்ளைகளோடு கூட திரு நாராயணபுரத்திற்கே வந்தனர். நாராயணாசலமாகிற அக்காடு ராமாநுஜாசார்யரின் கருணையால் ஜனங்கள் நிறைந்த மஹா நகரமாயிற்று. எம்பெருமானார் இல்லாமையால் ஸ்ரீரங்கம் காடாயிற்று.

## 24. பெரியநம்பி, கூரத்தாழ்வான் நிலை அறிதல்

*இடுமே இனிய சுவர்க்கத்தில், இன்னும் நரகிலிட்டுச்*
*சுடுமே? அவற்றை தொடர் தருதொல்லை, சுழல் பிறப்பில்*
*நடுமே இனி நம்மிராமாநுசன் நம்மை நம் வசத்தே*
*விடுமே சரணமென்றால், மனமே! நையல் மேவுதற்கே.*
*(மனமே! இராமானுசனே சரணம் என்று கூறு.)*

### கூரத்தாழ்வானுக்கும் க்ருமிகண்டன் விவாதம்

அதற்குப்பின் ஓர் வைஷ்ணவச்ரேஷ்டர் ஸ்ரீரங்க நகரிலிருந்து ராமாநுஜரை ஸேவிப்பதற்காக திருநாராயண புரத்தையடைந்தார். ராஜ தூதர்களால் சோழ ராஜாவினிடம் அழைத்துச் செல்லப்பட்ட பெரியநம்பி, கூரத்தாழ்வான் ஆகிய இருவரைப் பற்றிய செய்தியையும் அவரிடம் யதிராஜர் ஆர்வத்தோடு கேட்டார். அவ் வைஷ்ணவர் ''எதிகட்கிறைவரே!

அவர்களைப் பற்றிய செய்தியைக் கூறுகிறேன் கேட்பீராக'' என்று பதிலுரைத்தார்.

தூதர்களால் சோழாராஜாவின் அருகில் அழைத்துச் செல்லப்பட்ட பெரியநம்பி, கூரத்தாழ்வான் இருவரையும் பார்த்து, சோழராஜன் ''சிவனைக் காட்டிலும் மேலானதில்லை' என்று எழுதுங்கள்'' என்று கட்டளையிட்டான்.

கூரத்தாழ்வானும் 'த்ரோணம் (பதக்கு) சிவத்தை (குறுணியை)க் காட்டிலும் மேலானதாயுள்ளது' என்று எழுதினார்.

யதிராஜரே! தான் எழுதியதைப் பரிஹஸிக்கும் அவ்வாக்யத்தைப் பார்த்துக் கோபம் கொண்ட அவ்வரசன் பெரியநம்பி கூரத்தாழ்வான் இருவருடைய கண்களையும் பிடுங்கும்படி தன் ஏவலாளர்களுக்கு ஆணையிட்டான். அரசனின் ஆணையைப் பின்பற்றி அந்த தூதர்கள் அவ் வண்ணமே செய்தார்.

**பெரியநம்பியின் பரமபதப்ராப்தி**

கண்ணைப் பிடுங்கியதால் வேதனையுற்ற பெரிய நம்பி வயது முதிர்ந்தவரானகையாலே வேதனை பொறுக்க முடியாமல் ஸ்ரீரங்கம் வரும் வழியில் ஓரிடத்தில் கூரத்தாழ்வான் மடியில் திருமுடியையும் அவருடைய பத்னியான ஆண்டாள் மடியில் திருவடித்தாமரைகளையும் வைத்துக்கொண்டு சயனித்து ஆளவந்தார் திருவடித்தாமரைகளை தியானித்துக் கொண்டே தம் திருமேனியை கைவிட்டார். அப்போது அவருக்கு 105 திருநக்ஷத்திரங்கள் ஆகியிருந்தன. அங்கேயே அவருக்கு முறைப்படி ஸம்ஸ்காரங்களை செய்து பெரியநம்பியின் பிள்ளை முதலானோர் கூரத்தாழ்வானை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்துச் சென்றனர்'' என்று கூறினார்.

பெரியநம்பி, கூரத்தாழ்வான் இருவரைப் பற்றிய செய்திகளை கேள்விபட்ட யதிராஜர் மிகவும் வருந்தி, தமது ஆசார்யரான பெரியநம்பிக்கு அப்போதே ஸ்ரீசூர்ண பரிபாலனத்தை நடத்தினார்.

கூரத்தாழ்வான் கண்ணற்றவராகி விட்டாரே என்று கவலை கொண்டவராய், கூரத்தாழ்வானுடைய ஆறுதலுக்காக 'சிறியாண்டான்' என்னும் சிஷ்யரை ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பி னார்.

## ஆழ்வானின் ஆசார்ய நிஷ்டை

க்ருமிகண்டனால் கண்ணிழந்தபின் கூரத்தாழ்வான் ரங்கநாதனை ஸேவிப்பதற்காகத் திருவரங்கத்திற்கு எழுந் தருளினார். அப்போது கோயில் வாசலில் இருந்த சிலர் அவரை உள்ளே நுழையக்கூடாது என்றும் சிலர் தடுத்தனர். சிலர் அவரை உள்ளே விடலாம் என்றும் கூறினர்.

கூரத்தாழ்வான் வியந்து காரணத்தை வினவ அவர்கள், ஸ்ரீரங்கம் கோவிலை நிர்வஹிக்கும் ரங்கநாதனின் அர்ச்சகர்கள், ''நமக்கும் சோழ ராஜாவுக்கும் எந்த விரோதமுமில்லை. ஸ்ரீ ராமானுஜருடைய தொடர்பால் இப்போது நமக்கு ராஜாவோடு விரோதம் வந்து விட்டது. (அந்த விரோதத்தைப் போக்கு வதற்கு) ராமானுஜருடைய ஸம்பந்தமுள்ள எவரும் கோயிலுக்குள் நுழையக் கூடாது என்று உத்தரவு போடுவோம்'' என்று முடிவு கட்டினார்கள். ''ஆழ்வானே! இருந்தபோதிலும் தேவரீர் அரங்கனை ஸேவிக்கக் கோயிலுக்குள்ளே போக லாம்'' என்று கூறினார்கள்.

இதை கேட்ட கூரத்தாழ்வான் மிகவும் துன்புற்றவராய் அவர்களைப் பார்த்து - ''நான் ஸ்ரீராமானுஜரோடு ஸம்பந்தம் உடையவனே என்பதில் ஐயமில்லை. ஆகையால் ரங்கநாத னுடைய ஸேவை எனக்கு வேண்டாம்; என்று கூறி, திரு மாலிருஞ்சோலைக்கு புறப்பட்டார்.

## மாலிருஞ்சோலையில் ஸ்தவங்கள் அருளிச்செய்தல்

அக்கூரத்தாழ்வான் அழகர்மலையில் சுந்தரத் தோளு டையானை பக்தியோடு வணங்கி அங்கேயே சிலகாலம் வாழ்ந்தார். அக்காலத்தில் (1) ஸ்ரீஸ்தவம் (2) ஸுந்தர

பாஹு¬ஸ்தவம் (3) அதிமாநுஷஸ்தவம் (4) ஸ்ரீவைகுண்டஸ் தவம் என்று பெயர் பெற்ற நான்கு துதிகளை அருளிச் செய்தார்.

ஸ்ரீராமாநுஜரால் அனுப்பப்பெற்ற சிறியாண்டான் ஸ்ரீ ரங்கத்திற்கு வந்து, கூரத்தாழ்வானைப் பற்றிய செய்தி அறிந்து, திருமாலிருஞ்சோலைக்குச் சென்றார். அங்கு அவர் கூரத் தாழ்வானைக் கண்டு வணங்கி, யதிராஜரைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் மஹாத்மாவான கூரத்தாழ்வானிடம் ராமாநுஜசார்யரின் ஆணைப்படி தெளிவாகவும், ஆறுதல் வார்த்தைகளோடும் விண்ணப்பித்தார். "பெரியநம்பியின் பிரிவினாலும் தேவரீர் கண்ணிழந்ததினாலும் மிகவும் துன்புற்றவராய் யாதவாத்ரியில் வாழ்கிறார்" என்று உரைத்தார். அதைக் கேட்ட கூரத்தாழ்வான் அவரைப் பார்த்து "ஜகதாசார்ய ரான ஸ்ரீராமாநுஜர் ஸு¬கமாக வாழ்கிறாராகில் அதுவே அடியேற்குப் போதுமானது" என்று கூறி மிகவுவந்தார்.

**க்ருமிகண்டனின் இறுதி முடிவு**

அதற்குப்பின் (க்ருமிகண்டன் என்று பெயர் பெறப் போகும்) சோழவரசன் 'சிவத்துக்கு (குறுணிக்கு) மேல் த்ரோணம் (பதக்கு) உண்டு' என்று கூரத்தாழ்வானால் பரிஹாஸமாக எழுதப்பட்ட வாக்யத்தைக் கேட்டபின் மிகவும் கோபம் கொண்டு, சோழத்தேசத்திலுள்ள விஷ்ணு ஆலயங் களில் மதிள் முதலியவற்றை இடித்து அழித்தான்.

அவன் ஸ்ரீரங்கத்தையும் அழிக்க நினைத்து, தன் சேநாவீரர்களோடு புறப்பட்டான். அப்போது வழியில் ஒரு நாள் மாலையில் ஒரு கிராமத்தில் தங்கினான். அன்றிரவு அவனது கழுத்தில் பெரிய புண் உண்டாயிற்று. அப்போதே அந்தப் புண்ணிலிருந்து ஏராளமான கிருமிகள் (புழுக்கள்) உண்டாயின. வயிற்று வலியும் ஏற்பட்டது. வயிற்று வலி யாலும், கழுத்துப் புண்ணாலும் (ஸ்ரீரங்கத்தை அடைவதற்கு முன்பே) அவன் இறந்தொழிந்தான்.

**25. யதிராஜர் தமருகந்த திருமேனியை அளித்தல்**

***ஞானம் கனிந்த நலங்கொண்டு, நாடொறும் நைபவர்க்கு***
***வானங் கொடுப்பது மாதவன், வல்வினையேன் மனத்தில்***

*ஈனங்கடிந்த விராமானுசன் தன்னை எய்தினார்க்கு அத்*
*தானங் கொடுப்பது தன் தகவென்னும் சரண் கொடுத்தே.*
*(சரண் கொடுத்து வானம் கொடுப்பவன் இராமானுசன்.)*

## யதிராஜரின் ஆனந்தம்

அதற்குப்பின் ஸ்ரீரங்கத்திலிருந்து வரதவிஷ்ணு எனப் படும் நடாதூராழ்வான் முதலான சிஷ்யர்கள் அனைவரும் எம்பெருமானாரிடம் இந்த நற்செய்தியைச் சொல்லுவதற்காக திருநாராயணபுரம் வந்தார்கள். யதிராசரை வணங்கி, "பெரிய நம்பிக்கும் கூரத்தாழ்வானுக்கும் தீங்குபுரிந்த அந்தச் சோழ ராஜா கழுத்துப் புண் முதலான நோய்களாலே இறந்தொழிந் தான்" என்று சொன்னார்கள்.

பின்னர் யதிராஜர் ஸ்ரீரங்கம் செல்ல விரும்பியவராய் எல்லா சிஷ்யர்களையும் அழைத்து, ஸ்ரீரங்கத்திலிருந்து இந்த யாத்வாத்ரிக்கு வந்து பன்னிரண்டு வருடங்கள் கடந்துவிட்டன. இப்போது அந்த ஸ்ரீரங்கதிவ்யதேசம் உபத்ரவமற்றதாய் விளங்கு கிறது. ஆகையால் அரங்கநகரப்பனை ஸேவிப்பதற்காக ஸ்ரீரங்கத்திற்கு செல்கிறேன். நீங்களனைவரும் யாதவாத்ரி நாயகனான திருநாராயணப் பெருமாளுக்கும் செல்வப் பிள்ளைக்கும் நித்யோத்ஸவம், மாஸோத்ஸவம், ஸம்வத்ஸ ரோத்ஸவம் ஆகியவற்றைக் குறையறச் செய்து கொண்டு இங்கேயே நிலையாக இனிது வாழ்வீர்களாக" என்று கூறினார்.

யதிராஜரின் அந்த வார்த்தையைக் கேட்ட அனைவரும் அவரது பிரிவைச் சிறிதும் பொறுக்க மாட்டாதவர்களாய், அவருடைய திருவடிகளில் விழுந்து கண்ணீர் விட்டுக் கொண்டு "கருணைக் கடலான ஆசார்யரே! நீரைப் பிரிந்த மீன்போலே தேவரீரைப் பிரிந்த நாங்கள் உயிர்வாழமாட்டோம். ஆகையால் தேவரீர் எங்கெல்லாம் எழுந்தருள்கின்றீரோ அங்கெல்லாம் அடிமைகளான எங்களையும் அழைத்துச் செல்லும்" என்று கூறினர்.

## தமருகந்த திருமேனியை அளித்தல்

அப்போது யதிராஜர் ''எனது ஸேவையில் ஈடுபாடுடைய இங்குள்ள அனைவரும் திருவாராதனம் செய்வதற்காக - எனது அவதார ப்ரயோஜனத்தை உணர்த்துவதாய், எனது ப்ரதிபிம்பம் போல் உள்ளதான எனது விக்ரஹம் இப்போது செய்விக்கப்பட வேண்டும்'' என்று திருவுள்ளங் கொண்டு வல்லவர்களான சிற்பிகளைக் கொண்டு மிகச்சிறந்த விக்ரஹத்தை அப்போதே நிருமிக்கச் செய்து, அதில் தம் சக்தியை பிரவேசிக்கச் செய்து, அன்போடு அதைத் தழுவிக்கொண்டு முறைப்படி அதைப் பிரதிஷ்டை செய்வித்து, எல்லா சிஷ்யர்களையும் அழைத்து, ''எனது பரிபூர்ண சக்தியையுடைய இந்த விக்ரஹத்தை தினந் தோறும் ஆராதிப்பீர்களாக. என்னிடமுள்ள ப்ரீதியை இந்த விக்ரஹத்திடமும் காட்டுவீர்களாக. என்னுடைய இந்த அர்ச்சாவிக்ரஹத்தின் அன்பாலே, நீங்களனைவரும் அஹங் காரம் அற்றவர்களாய் ஒருவருக்கொருவர் நட்புடையவர் களாய் வாழ்வீர்களாக என்று கூறினார். பின் அனைவராலும் விடைகொடுக்கப்பெற்று, யாதவாத்ரியிலிருந்து ஸ்ரீரங்கத் திற்கு எழுந்தருளினார்.

## ஸ்ரீரங்கத்தில் வரவேற்பு

தண்டகவனத்தில் 14 வருடங்கள் வாழ்ந்து, பதினைந் தாவது வருஷத்தில் அயோத்திக்குத் திரும்பி வந்த ராமனைக் கண்டு அயோத்திநகரவாசிகள் எப்படிப் பேரானந்தம் அடைந் தார்களோ அப்படியே ஸ்ரீரங்க நகரவாசிகளும் ஸ்ரீராமாநுஜரைக் கண்டு பேரானந்த மடைந்தார்கள். அப்போது எதிகட் கிறைவர்க்கு முதலியாண்டான் குடைபிடித்தார். தம்பியோடு கூடிய எம்பார் சாமரம் வீசினார். சங்கம், பேரி, துந்துபி ஆகிய வாத்யங்களின் முழக்கங்களோடும், அந்தணர்களின் வேத மந்திரங்களோடும் பக்தஜனங்களோடு கூடிய யதிராஜர் ஸ்ரீரங்கநகரத்தில் பிரவேசித்தார்.

ஸ்ரீரங்கராஜனை ஸேவித்து, பணமிழந்தவன் பணத்தைப் பெற்றதுபோலே உகந்தவராய்ப் பெரிய பெருமாளை வணங்கி, கைகூப்பி நின்றார் யதிராஜர்.

## யதிராஜரும் ஆழ்வானும்

அதற்குப்பின் கூரத்தாழ்வான் யதிராஜருடைய மங்கள மான வரவைக் கேள்விப்பட்டு, அவருடைய திருவடிகளிலே வணங்கினார். யதிராஜரும் அக்கூரத்தாழ்வானை எழுப்பி, இரு கைகளாலும் ஆரத்தழுவி, அன்பாலே அடிக்கடி கண்ணீர் மழையைப் பொழியவிட்டுக் கொண்டு துன்பக் கடலுள் மூழ்கியவராய், உமக்கு எப்படி இந்தப் பெருந்துன்பம் நேரிட்டது?'' என்று வினவினார். ஆழ்வானும் யதிராஜரைப் பார்த்து ''வைஷ்ணவர்களின் திருமண் காப்பு கோணலா யிருப்பதைப் பார்த்து முன்னொருகால் சிரித்திருப்பேன் போலும் அதனாலே இப்படிக் குருடனானேன். பாகவதாபசாரம் மிகக் கொடிய பாப மன்றோ'' என்று கூறினார். இப்படிச் சொன்ன கூரத்தாழ்வானைப் பார்த்து யதிராஜர் ''ஆழ்வான்! எல்லோர்க்கும் நல்லவரான உமக்கும் பாபமிருக்கமுடியுமோ? என்னுடைய தோஷத்தாலேயே இப்போது இந்தக் கஷ்டம் நேரிட்டுள்ளது'' என்று பதிலுரைத்தார். கருணைக் கடலான யதிராஜர் மிகவும் துன்புற்றவராய், கூரத்தாழ்வானோடு கூட தம் மடத்திற்கு விரைவில் எழுந்தருளினார்.

## 26. கூரத்தாழ்வான் திருக்கண் பெறுதல்

***சார்ந்தது என்சிந்தை உன் தாளிணைக்கீழ், அன்புதான் மிகவும்***
***கூர்ந்தது அத்தாமரைத் தாள்களுக்கு, உன்தன் குணங்களுக்கே***
***தீர்ந்தது என்செய்கை முன்செய்வினை நீ செய்வினையதனால்***
***பேர்ந்தது, வண்மையிராமாநுச! எம் பெருந்தகையே!***
*(இராமானுச! உன் தாளிணைக் கீழ் என் சிந்தை சார்ந்தது.)*

## யதிராஜரின் நிர்ப்பந்தம்

அதற்குப் பின் யதிராஜர் கூரத்தாழ்வானை அழைத்து ''வேண்டுவார் வேண்டின வரங்களையெல்லாம் கொடுப்ப தையே விரதமாகக் கொண்டவன் வரதராஜன். அவர் விஷய மாக ஒரு ஸ்தோத்ரத்தைச் செய்வீராக. அவ்வெம்பெருமான் உமக்குக் கண்களையளிப்பான் என்பது நிச்சயம்'' என்று கூறினார். கூரத்தாழ்வான் ''எனக்குக் கண்கள் வேண்டாம்''

என்றே ஆசார்யனிடம் கூறினார். அப்போது மறுபடியும் எம் பெருமானார் கூரத்தாழ்வானை ''ஸ்தோத்ரம் செய்ய வேண்டும்'' என்றே நிர்ப்பந்தித்தார்.

**வரதராஜஸ்தவம் அருளல்**

ஆழ்வானும் விரைவிலேயே வரதராஜஸ்தவத்தை நிறைவு செய்து யதிராஜர் இருக்குமிடத்தையடைந்தார்.

யதிராஜரை வணங்கி கூரத்தாழ்வான் ''எம் பெருமானாரே! தேவரீருடைய நியமனத்தினால் அடியேனால் இப்போது வரதராஜஸ்தவம் இயற்றப்பட்டது'' என்று கூறி அந்த ஸ்தோத்ரத்தை அவரிடம் விண்ணப்பித்தார். அதைக் கேட்டு ஸ்ரீராமாநுஜரும் மிகவுகந்தார். ஆழ்வான் எதிகட்கிறைவரைப் பார்த்து, ''ஆசார்யச்ரேஷ்டரே! நான் வரதராஜனிடம், 'லோகநாதனே! வைகுண்டமாகிற மேலான உலகில் தேவர் தலைவரான தேவரீரை நித்யஸூரிகள் எந்த (ஜ்ஞானக்) கண்ணால் எப்போதும் காண்கிறார்களோ, திவ்யமாய் அப்ராக்ருதமான அந்த (ஜ்ஞானக்) கண்ணை எனக்குக் கொடுப்பீராக என்று கேட்டேன். விரும்பிய வரத்தைக் கொடுக்கும் அந்தத் தாமரைக் கண்ணரான வரதராஜர் மிகவுகந்தவராய், அப்ராக்ருத திவ்யநேத்ரத்தை எனக்கு அளித்தார்'' என்று கூறினார். சிஷ்யரிடம் அன்புடைய யதிராஜர் அதைக்கேட்டு மிகவுகந்தவராய் ''கூரத்தாழ்வானே! இப்போதே நாம் காஞ்சி புரம் செல்வோம்'' என்று கூறி, கூரத்தாழ்வானோடு கூடியவ ராய், விரைவில் காஞ்சிபுரத்திற்குச் சென்றார்.

**ஆழ்வாரின் பிரார்த்தனை**

அப்போது கூரத்தாழ்வான் ஆசார்யரின் ஆஜ்ஞையாலே வரதனைக் கைகூப்பி வணங்கி, அந்தத் துதி நூலை விண்ணப் பித்தார். அதனால் உகந்த வரதன் ஆழ்வானைப் பார்த்து ''உமக்கு மங்களம் உண்டாகட்டும். நீர் விரும்பும் வரத்தைக் கொடுக் கிறேன். கேட்பீராக'' என்று கூறினான். அவ்வார்த்தையைக் கேட்ட கூரத்தாழ்வான் பக்தவத்ஸலனாய், யதிராஜரின் நெஞ்சுக் கினியவனான வரந்தரும் பெருமாளிடம் ''ஐயனே! தேவரீ

ருடைய க்ருபையினாலே எனக்கு எந்த லோகம் கிடைக்குமோ, அந்த லோகத்தை நாலூரானும் பெற வேண்டும்'' என்று வரம் கேட்டார். வரதனும் 'அப்படியே' என்று கூரத்தாழ்வானுக்கு வரமளித்தான்.

அந்தச் செய்தியைக் கேட்ட ஸ்ரீராமாநுஜர் வாடிய முகத்தை உடையவராய், விரைவில் வரதனிடம் வந்து, ''தாமரைக் கண்ணனான தேவதேவனே! லோகநாதனே! எல்லாமறிந் தவரான தேவரீர் ஆழ்வானுக்கு இப்படி வரங்கொடுக்க லாமா?'' என வருத்தமுடன் கேட்டார்.

அதைக்கேட்டு வரந்தரும் பெருமாளான வரதன் யதிராஜரைக் குறித்து ''யதிராஜரே! வருந்தாதீர். தேவரீர் விரும்பியதைக் கொடுக்கிறேன்'' என்று கூறி, ஞானக் கண்ணோடு தம்மையும், யதிராஜரையும் மட்டும் காண் பதற்கான கண்களை அளித்தான்.

கண்கள் கிடைக்கப்பெற்ற கூரத்தாழ்வான் ஆனந்தக் கண்ணீருடன் திருவடி முதல் திருமுடி வரை நன்கு பெருமாளை ஸேவித்து யதிராஜருடன் ஸ்ரீரங்கத்தை அடைந்தார்.

## 27. யதிராஜரின் மஹா வைபவம்

*பொய்யை சுரக்கும் பொருளைதுரந்து, இந்த பூதலத்தே*
*மெய்யைப் புரக்கும் இராமானுசன் நிற்க, வேறு நம்மை*
*உய்யக் கொள்ள வல்ல தெய்வம் இங்கு யாதென்று உலர்ந்து அவமே*
*ஐயப்படா நிற்பர், வையத்துள் நல்லறிவிழந்தே.*
*(இராமானுசனே நம்மை உய்ய வைப்பவன்.)*

### இடைப்பெண் மோக்ஷம்

ஒருமுறை எம்பெருமானார் திருமலையருகில் எழுந் தருளியிருந்தபோது தும்பையூர்க்கொண்டி என்னும் இடைப் பெண் ஒருத்தி எம்பெருமானார் மடத்துக்குத் தயிர் கொடுத்து வந்தாள். ஜகதாசார்யரான யதிராஜரையும், அவருடைய அடியார்களான ஸ்ரீ வைஷ்ணவர்களையும் ஸேவித்ததாலும்,

கிடாம்பியாச்சான் அளித்த தீர்த்தப்ரஸாதங்களை ஸ்வீகரித்ததாலும் ஜ்ஞான வைராக்யங்கள் உண்டாகப்பெற்ற அவ்விடைப் பெண் யதிராஜரை வணங்கி, 'யதீச்வரரே! எனக்குத் தயிருக்கு விலை வேண்டாம். மோக்ஷமளிப்பீராக'' என்று விண்ணப்பித்தாள்.

அதைக்கேட்டு வியப்புற்ற யதிராஜர், அப்பெண்ணைப் பார்த்து ''திருவேங்கடமுடையானே உனக்கு மோக்ஷத்தை அளிப்பான். அவனிடம் செல்வாய்'' என்று கூறினார். யதிராஜரே! அப்படியானால் எனக்கு இப்போதே மோக்ஷம் அளிக்கும்படி ஒரு கடிதத்தை திருவேங்கடமுடையானுக்கு அளிப்பீராக'' என்று விண்ணப்பித்தாள். அவரும் அவளுடைய வேண்டுகோளை ஏற்று, அவள் மோக்ஷம் பெறுவதற்காக ஒரு கடிதத்தைத் தாமே உடனே எழுதி, அவ்விடைப் பெண்ணின் கையில் கொடுத்தார்.

அவ்விடைப் பெண்ணும் யதிராஜரை வணங்கி திருவேங்கடமுடையான் ஸந்நிதி சென்று, த்வஜ ஸ்தம்பத்தின் முன்பே அக்கடிதத்தை வைத்து, 'மோக்ஷத்தைக் கொடுப்பாய்' என்று திருவேங்கடமுடையானைக் குறித்துக் கூறி, அசையாதவளாய் சயனித்துக் கொண்டாள். பக்தபரதந்த்ரனான திருவேங்கடமுடையான் அவ்விடைப் பெண்ணுக்கு பரமபதத்தை விரைவிலேயே அளித்தான். ஒப்பற்ற அந்த ஆச்சரியத்தைக் கண்ட எல்லா ஜனங்களும் ராமாநுஜருடைய ஸம்பந்தத்தைப் பெற்றுக் களிப்பெய்தினார்கள்.

## கோதையின் விருப்பத்தை நிறைவேற்றுதல்

பல நூறு வருஷங்களுக்கு முன் பெயர்பெற்ற ஆண்டாள் நூற்று நாற்பத்து மூன்று பாசுரங்களைக் கொண்ட 'நாச்சியார் திருமொழி' என்னும் நூலை அருளிச் செய்தாள். அதில் ''நாறும் நறும்பொழில் மாலிருஞ் சோலை நம்பிக்கு, நான் நூறு தடாவில் வெண்ணெய் வாய் நேர்ந்து பராவி வைத்தேன். நூறு தடா நிறைந்த அக்காரவடிசில் சொன்னேன். ஏறு திருவுடையான் இன்று வந்திவை கொள்ளுங்கொலோ'' என்னும் பாசுரத்தில் திருமாலிருஞ்சோலை எம்பெருமானான சுந்தரத்

தோளுடையானை நோக்கி "எம்பெருமானே! என்னைக் கைப்பிடித்து அருள்புரிவாயாகில் பால், வெல்லம், நெய் முதலானவற்றால் செய்யப்பெற்ற அக்காரவடிசில் நூறு தடாவும், வெண்ணெய் நூறு தடாவும் உனக்கு ஸமர்ப்பிப்பேன்" என்று பிரார்த்தித்தாள்.

இவ்வண்ணமாக அத்திருமொழியில் கோதையின் விருப்பம் இருப்பதைக் கண்டு ஆண்டாள் தன் இவ்விருப்பத்தை நிறைவேற்றாமையாலே தாமே இவ்விருப்பத்தை நிறைவேற்ற முயற்சி கொண்டார். திருமாலிருஞ்சோலைக்குச் சென்று, ஆண்டாள் ஆசைப்பட்டு ஸமர்ப்பியாமலிருந்த அந்த நூறு தடா நிறைந்த அக்கார வடிசிலையும், நூறு தடா நிறைந்த வெண்ணெயையும் அந்த சுந்தரராஜப் பெருமானுக்குப் பரிபூர்ணமாக ஸமர்ப்பித்தார்.

**கோயிலண்ணர்**

அதற்குப்பின் யதிராஜர் திருமாலிருஞ்சோலையிலிருந்து ஸ்ரீ வில்லிபுத்தூரை அடைந்தார். அங்கு வடபத்ர சாயியான எம்பெருமானை வணங்கி, ஆண்டாளுக்கருகில் எழுந்தருளி, சிஷ்யர்களோடு கை கூப்பியவராய், யதிராஜர் ஆண்டாள் முன்பு நின்றார். எம்பெருமானுக்கு இனியவளான அந்த கோதாதேவி, 'எனது விருப்பம் இவரால் (தங்கையின் விருப்பத்தைத் தமையன் நிறைவேற்றுவது போலே) நன்கு நிறைவேற்றப்பட்டது' என்று மிகவும் உகந்த நெஞ்சினளாய் (கோயில்) அண்ணர்! என்று அவருக்குப் திருநாமம் சாத்தினாள். யதிராஜரும் பேரானந்தத்துடன் அவ்வூரிலிருந்து திருக்குருகூரை நோக்கி புறப்பட்டார்.

**திருப்புளிங்குடிப் பெண்ணின் திருவாய்மொழி ஈடுபாடு**

எம்பெருமானார் நெடுந்தூரம் சென்று திருப்புளிங்குடியை அடைந்தார். அப்போது பத்து வயது நிரம்பி இருந்த பெண்ணை வீதியிலே பார்த்து எம் பெருமானார் "பெண்ணே! திருக்குருகூர் இவ்வூரிலிருந்து எவ்வளவு தூரத்தில் உள்ளது என்று கேட்டார். யதிராஜரது அவ்வார்த்தையைக் கேட்டு

அந்தப் பெண் "அந்தணரே! தேவரீர் திருவாய்மொழி ஓதிய தில்லையோ?" என வினவினாள். அதைக்கேட்ட எம் பெருமானார் வியப்புற்றவராய் "பெண்ணே! திருவாய் மொழியை ஓதியதால் திருக்குருகூர் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது என்று எப்படி அறியமுடியும்?" என்று கேட்டார்.

அதற்கு அப்பெண் புன்முறுவலோடு கூடியவளாய் "திருப்புளிங்குடி திருக்குருகூரிலிருந்து ஒரு க்ரோச (கூப்பிடு) தூரமேயிருக்கிறது என்று நம்மாழ்வார் அருளிய திருவாய் மொழியில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளதே" என்று கூறி "கடுவினை நஞ்சே! என்னுடையமுதே! கலிவயல் திருப்புளிங்குடியாய்! வடிவினையில்லா மலர்கள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியை, கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயே" என்னும் அத்திருவாய்மொழிப் பாசுரத்தை உரக்கப் பாடினாள். அதைக்கேட்டு யதிராஜர் பேரானந்தத்தையும் வியப்பையும் அடைந்து, அப் பெண்ணைக் கருணையோடு குளிரநோக்கி கடாக்ஷித்தார்.

**சடகோபன் பொன்னடி**

திருக்குருகூரை அடைந்தபின் நம்மாழ்வாரையும் ஆதிப் பிரானையும் வணங்கி, ஆழ்வாரின் திருமுன்பே "ப்ரபந்த ஜனகூடஸ்தராய், இருப்பவர் இந்த நம்மாழ்வார். அநாதியாய், ஒப்பற்றதான இந்த வைஷ்ணவதர்சனம் ஒடுங்கிக்கிடந்த காலத்தில் இவராலேயே உத்தரிக்கப் பெற்று, நன்கு வெளிப் படுத்தப்பட்டது.

லோகரக்ஷகரான சடகோபராகிற இந்தப் பெரியவருக்கு அடியேன் என்ன கைம்மாறு செய்ய முடியும்? எனக்கொரு பிள்ளையிருந்தால் இவரது பெயரை அவனுக்கு வைத்து, இவரிடம் பட்டுள்ள நன்றிக்கடனைச் சிறிதளவாவது தீர்க்க முடியும் இவ்வுலகில் ஸந்யாஸியான எனக்குப் பிள்ளை எப்படி ஏற்படமுடியும்?" என்று யதிராஜர் வருந்தி கூறினார்.

அப்போது - பெரிய திருமலை நம்பியின் குமாரராய், பிள்ளை திருமலை நம்பி என்று பெயர் பெற்றவராய்,

பேரறிவாளராய் ஓர் சிஷ்யர் அன்போடு வந்து, ஸ்ரீராமாநுஜரை வணங்கி, ''யதிராஜரே! தாஸனான அடியேனை தேவரீரது குமாரனாக ஏற்றுக்கொண்டு தங்கள் மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்வீராக'' என்று விண்ணப்பித்தார். அந்த வார்த்தையாலே மிகவும் உகந்த யதிராஜர் அவரைத் தம் பிள்ளையாக ஏற்றுக்கொண்டு **'திருக்குருகைப்பிரான் பிள்ளான்'** என்னும் திருநாமத்தையும் அவருக்கு அளித்தார்.

நம்மாழ்வாரும் எம்பெருமானாரைப் பார்த்துப் பேரானந்த மடைந்து, யதிராஜரை உலகமறியத் தமது திருவடித்தாமரை யின் ஸ்தானமாக உகந்தருளினார். அதனால் **''சடகோபன் பொன்னடி''** என்னும் திருநாமம் யதிராஜருக்கு ஏற்பட்டது. சடகோபராகிற நம்மாழ்வார் எம்பெருமானின் திருவடியாக உலகில் எப்படி பிரஸித்தராயிருக்கிறாரோ அப்படியே சடகோபனின் திருவடியாக ராமாநுஜர் உலகில் பிரஸித்தி அடைந்தார்.

அவ்வண்ணமே உலகில் ராமாநுஜருடைய திருவடி ஸ்தானமாக முதலியாண்டான் அங்கீகரிக்கப் பட்டார். எம்பெருமானது திருக்கோயிலில் 'ஸ்ரீசடகோபன் சாதிக்க வேணும்' என்று சொல்ல வேண்டும். அவ்வண்ணமே எம்பெருமானார் ஸந்நிதியில் 'முதலியாண்டான் சாதிக்க வேணும்' என்று சொல்ல வேண்டும்.

**எம்பெருமானார் ஸம்பந்தத்தாலேயே அனைவருக்கும் மோட்சம்.**

ஸ்ரீரங்கநாதன் முதலான அனைவரைக் காட்டிலும் ஜகதாசார்யரான ஸ்ரீராமாநுஜரே முக்கியமானவராவர். இவரே அனைவரைக் காட்டிலும் சிறந்தவர். மிக்க எளியவர்களுக்கும் ஸம்ஸாரபயத்தைப் போக்கித் தஞ்சமளிப்பதற்காக கீதாசார்யன் சொன்ன சரமச்லோகத்தின் பொருளை இவ்வுலகில் வெளிப் படுத்தி, தம் நூல்களில் விஷ்ணு புராணம் முதலான ரிஷிகள் இயற்றிய ப்ரமாணங்களுக்குச் சிறந்த வ்யாக்யானம் செய்து, நம்மாழ்வார் முதலானவர்களால் அருளிச் செய்யப்பட்ட

திவ்யப்ரபந்தங்கள் அனைத்தையும் உலகெங்கும் பரப்பி வளர்த்து, உலகின் நன்மைக்காக வ்யாஸர் அருளிய ப்ரஹ்ம ஸூத்ரங்களின் பொருளை வெளியிட்டு ஸ்ரீபாஷ்யம், வேதாந்தஸாரம், வேதாந்த தீபம் என்னும் பெரிய நூல்களை அருளிச் செய்து அமங்களமான பாஹ்ய குத்ருஷ்டி மதங்கள் அனைத்தையும் வாதத்தால் சிதறச் செய்து வென்று, நாதமுனி முதலான ஆசார்களுடையவும் நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களுடையவும் திருவுள்ளம் உகந்த தம் மதத்தை நிலைநிறுத்தி, அந்த விஷ்ணுதர்சனத்தை தம் திருநாமத் தாலே ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தம் (எம்பெருமானார் தர்சனம்) என்று புகழ்பெறச் செய்தார்.

இத்தகைய லோகஹிதமான கார்யங்களில் ஈடுபட்ட யதிராஜர், நாதமுனிகள் முதலான ஆசார்யச்ரேஷ்டர்களைக் காட்டிலும் முக்யராகிறார் என்பது உறுதி. ஆகையால் யதிராஜர் சிறந்தவர் என்று சொல்லுவதில் ஏதேனும் ஐயமுண்டோ? ஆகையால் ஸ்ரீராமாநுஜர் நேரே எம்பெருமானின் அவதார மாகவும், லோகாசார்யராகவும், இருப்பவர். அவருடைய ஸம்பந்தபலத்தினாலேயே எல்லாச் சேதனர்க்கும் மோக்ஷம் ஸித்திக்கிறது.

அவருடைய திருவடித்தாமரைகளில் கைங்கர்யம் செய்வதே பரமப்ராப்யமன்றோ. ஆகையாலே 'கோவிந்தர்' எனும் எம்பார். கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலான ஆசார்யர்கள், ஸ்ரீபராசரபட்டர் முதலான தங்களுடைய சிஷ்யர்களுக்கு 'யதிராஜருடைய திருவடிகளே தஞ்சம் என்று இருக்க வேண்டும் என்பதையே அன்போடு ஹிதோபதேசமாக அருளினார்கள்.

பெரிய நம்பிகள் முதலான பூர்வாசார்யர்கள் அனைவரும் ஜகதாசார்யரான யதிராஜருக்கு ஆசார்யர்களாயிருந்து பரம பதத்தை அடைந்தார்கள். முதலியாண்டான் முதலான அனைவரும் ராமாநுஜருக்கு சிஷ்யர்களாயிருந்து பரமபதம் அடைந்தனர். ஆகையால் ஆசார்ய ஸ்வரூபம் யதிராஜரிடமே நன்கு நிலை நிற்கிறது.



ஸ்ரீ ராமானுஜர், திருவல்லிக்கேணி

சோழ அரசனான க்ருமிகண்டனால் விளைந்த உபத்ர வத்தை வ்யாஜமாகக் கொண்டு யதிராஜர் மேல் நாட்டை அடைந்து அங்கு சில வருஷங்கள் வஸித்தார். அங்கிருந்த மஹா புருஷர்கள் ராமானுஜருடைய சாஸ்த்ரோபந்யாஸங்களை ஆர்வத்தோடு கேட்டு எல்லையற்ற வியப்பை எய்தினர்.

அப்போது யதிராஜர் ''என்னுடைய பரமாசார்யரான ஆளவந்தாருடைய க்ரந்தங்களை ஸேவித்ததன் மூலமே இவ்வுலகுக்கு இவ்வளவு நன்மை ஏற்பட்டது. மஹாபுருஷ ரான யாமுனாசார்யருக்கு அருகில் ஒரு நாளாவது நான் கூடிவாழ்ந்திருந்தேனாகில் வைகுண்ட லோகத்துக்கும் இந்த

பூலோகத்துக்கும் உறுதியான சாச்வதமான படிகட்டுகளை கட்டி அதன்வழியாக எல்லா ஜனங்களையும் எம்பெருமானை அடைவித்திருப்பேன்'' என்று அருளினார்.

ஆகையால் யதிராஜருடைய திறமை ஈச்வரனுக்கும் கிடையாது. யதிராஜரின் ஸம்பந்தத்தால் பாபியும் முக்தி அடைவான். ''கர்மஜ்ஞான பக்தி ப்ரபத்திகளுக்கு மேற்பட்ட ஐந்தாவது உபாயம், எம்பெருமானார் ஸம்பந்தமே.'' இந்த அரும்பொருளை அறிந்து யதிராஜரிடம் உறுதியான பக்தி யுடன் எவன் இருக்கிறானோ அவனே எல்லாத் தத்துவங் களையும் அறிந்தவனாய், பிறவிப்பயன் பெற்றவனாய் எல்லா மனிதர்களாலும் வணங்கத்தக்கவனாய், முக்தியை அடைகிறான்.

நாம் அனைவரும் ஜகந்நாதனான எம்பெருமானும் ஜகன் மாதாவான லஷ்மியோடுகூட ஒரே சங்கிலியால் பிணைக்கப் பட்டிருக்கிறோம். இந்தச் சங்கிலியால் பிணைக்கப்பட்ட மஹாபுருஷர்களுக்குள் எவரேனும் ஒருவர் முக்தியடைந்தா ரெனிலும் நாம் அனைவரும் மோட்சமடைவோம் என்பதில் ஐயமில்லை என்று யதிராஜர் வேதாந்தங்களின் நிர்ணயமான வார்த்தைகளைக் கூறினார்.

யதிராஜருடைய ஸம்பந்தமே மேலான மோட்ச சாதன மாகும். அவர் திருவடித் தாமரையில் கைங்கர்யம் செய்வதே மேலான ப்ராப்யமாகும்.

*'இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்*
*சோலை என்னும் பொருப்பிடம் மாயனுக்கென்பர்*
*நல்லோர் அவை தன்னொடும் வந்து*
*இருப்பிடம் மாயனிராமாநுசன் மனத்து.''*

ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடமலை, அத்திகிரி என்று தொடங்கி, ஸர்வாந்தர்யாமியான விஷ்ணுவாகிற எம் பெருமானுக்கு முக்யமான இருப்பிடங்களாக உள்ள நூற் றெட்டு திவ்யதேசங்களில் எழுந்தருளியிருக்கும் எம் பெருமான்கள் அனைவரும் ஸ்ரீபெரும்புதூரில் எழுந்தருளி

யிருக்கும் ஸ்ரீபாஷ்யகாரருடைய நெஞ்சிலே வாழ்கின்றனர். ஸ்ரீபெரும்புதூரிலுள்ள ஜகதாசார்யரான எம்பெருமானார்க்குக் கைங்கர்யம் செய்தால் அத்தனை எம்பெருமான்களுக்கும் கைங்கர்யம் செய்த பேறு கிட்டும் என்பதில் ஐயமில்லை.

''ஸ்ரீராமாநுஜரின் திருநாமத்தை உச்சரிப்பதாலேயே எல்லாப் பாபமும் அழியும். மிக்க வலிமையுடைய நான்கு அக்ஷரங்களைக் கொண்ட 'ராமாநுஜ' என்னும் மந்திரத்தைத் தவிர ஸம்ஸாரபந்தத்தைப் போக்கடிக்கும் உபாயம் வேறு இல்லை.

## 28. எழுபத்து நாலு வார்த்தை

*தவந்தரும் செல்வந்தகவுந்தரும், சலியாப் பிறவிப்*
*பவந்தரும் தீவினை பாற்றித்தரும், பரந்தாமமென்னும்*

*உவந்திருந்தேன், அவன் சீரன்றியானொன்றும் உள்மகிழ்ந்தே.*
*(இராமானுசனின் புகழையே போற்றுவேன்.)*

ஆதிசேஷனின் அவதாரமாய், அதிமாநுஷராய், உலகனைத்தையும் விஷ்ணுமயமாகக் காட்டியவராய் ஸ்ரீமத் ராமாநுஜாசார்யர் மஹாவைபவத்துடன் ஸ்ரீரங்கத்தில் வாழும் போது வேதத்தில் சொல்லப்பட்ட 'சதாயுர்வை புருஷ:' என்னும் ஸத்யவசனத்தின்படி அவருக்கு நூற்றிருபது ஆண்டுகள் நிறைவடைந்தன. அதில் அறுபது வருடங்கள் ஸ்ரீரங்கவாஸத்தில் இனிது கழிந்தன. அறுபது வருடங்கள் இவ்வுலகில் திரு நாராயணபுரம், காஞ்சி, ஸ்ரீபெரும்புதூர், திருவெள்ளறை முதலான திவ்யதேசங்களில் இனிது கழிந்தன.

### சிஷ்யர்களுக்கு உபதேசங்கள்

ஒரு நாள் அனைத்து சிஷ்யர்களையும் அழைத்து, க்ருபாமாத்ரப்ரஸந்நாசார்யராய், ஜகதாசார்யராய், கருணைக் கடலான யதிராஜர் எல்லா சாஸ்த்ரார்த்தங்களின் ஸாரமாக எழுபத்தி நான்கு நல்வார்த்தைகளைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு பூரிதாநமாக வழங்கினார். (அவை பின்வருமாறு) :-

(1) தன் ஆசார்யனுடைய கைங்கர்யத்திலும், பிற வைஷ்ணவ னுடைய கைங்கர்யத்திலும் சமமான மதிப்புடன் (ஸ்ரீ வைஷ்ணவர் அனைவர்க்கும்) எப்போதும் கைங்கர்யம் செய்ய வேண்டும். (2)பூர்வாசார்யர்கள் அருளிய வார்த்தைகளில் நம்பிக்கையோடு இருக்க வேண்டும். (3) எப்போதும் இந்த்ரியங்களுக்கு வசப்பட்டவனாய் இருக்கலாகாது. (4) எப்போதும் சாமாந்யசாஸ்த்ரங்களில் ஈடுபட்டவனாய் வாழக் கூடாது. (5)பகவத்விஷயமான சாஸ்திரத்திலேயே ஈடுபட்டவனாய் எப்போதும் வாழவேண்டும்.

(6) ஆசார்யனின் திருவருளால் முதலில் அறிவுக்கடலை அடைந்தபின் சப்தாதி விஷயங்களுக்கு வசப்பட்டவனாய் வாழலாகாது. (7) எல்லா சப்தாதி விஷயங்களையும் (விலக்கத் தக்கவை என்னும் விஷயத்தில்) சமமாகவே பாவிக்க வேண்டும். (8) புஷ்பம், சந்தனம், தாம்பூலம் முதலான நறுமணம் மிக்க பொருள்களில் பழக்கத்தாலும், விருப்பத் தாலும் விளையும் செயல்களை எப்போதும் செய்யலாகாது. (9) எம்பெருமானுடைய திருநாமஸங்கீர்த்தனத்தில் உங்க ளுக்கு எத்தனை விருப்பமுள்ளதோ, அத்தனை விருப்பம் அவனடியார்களுடைய திருநாமஸங்கீர்த்தனத்திலும் இருக்க வேண்டும். (10) மஹாபாகவதர்களை ஆச்ரயித்திருப்பது பகவானை அடைவதற்குக் காரணமாகிறது என்பதையறிந்து எப்போதும் அந்தப் பரமபாகவதர்களுடைய ஆணைப்படி உறுதியாய் நடக்க வேண்டும்.

(11) பகவானுக்கும், பாகவதர்களுக்கும் கைங்கர்யம் செய்யாமல் லௌகிக விஷயங்களில் ஆசை முதலானவற்றால் தூண்டப்பெற்றவனாய் ஒரு மனிதன் வாழ்ந்தானாகில், அவன் எத்தனை அறிவாளியாயிருந்தாலும் அழிந்து விடுவான்.

(12) வைஷ்ணவர்களுடைய அனுஷ்டானங்களை உபாய புத்தியினால் செய்யப்படுபவை என்று எண்ணலாகாது. நன்னெஞ்சுடையவன் அவற்றை எப்போதும் உபேய (ஸ்வயம் ப்ரயோஜந) புத்தியுடன் செய்யப்படுபவையாகவே எண்ண வேண்டும். (13) மஹா பாகவதர்களான ஜனங்களை

ஏகவசனத்தினால் அழைக்கலாகாது. (14) வைஷ்ணவர்களைக் கண்டவுடனேயே முதலில் அஞ்ஜலி செய்துவிட வேண்டும். (15) பகவானான எம்பெருமான் முன்னிலையில் ஒருபோதும் காலை நீட்டிக் கொண்டு இருக்கலாகாது. (16) எம்பெருமான், ஆசார்யன், ஸ்ரீவைஷ்ணவன் ஆகியவர்களுடைய இருப் பிடத்தை நோக்கிக் காலை நீட்டிக் கொண்டு ஒரு போதும் தூங்கக் கூடாது.

(17) தூங்கி எழுந்தவுடன் குருபரம்பரையை அநுஸந்திக்க வேண்டும். (18) பகவத்ஸன்னிதியில் வீற்றிருக்கும் மஹா பாகவதர்களைக் கண்டால் திருமந்த்ரத்தை அநுஸந்தித்துக் கொண்டு பூமியில் தண்டம் (தடி) போல் விழுந்து வணங்க வேண்டும். (19) பகவான் அல்லது பாகவதர்களுடைய திருநாமஸங்கீர்த்தனத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் சொல்லிக் கொண்டிருக்கும் போது இயன்ற வரையில் அவர்களை ஆராதிக்காமல் நடுவில் எழுந்திருந்து போவது பெருத்த அபசாரமாகும். (20) வைஷ்ணவர்கள் எழுந்தருள்வதைக் கேட்டால் அப்போது எதிர்கொண்டழைக்க வேண்டும். (21) அவ்வண்ணமே அவர்கள் விடைகொள்ளும்போது பக்தியோடு சிறிது தூரம் கூடச் செல்ல வேண்டும். இவ்விரண்டு கார்யங்களைச் செய்யா விடில் பெருத்த தோஷம் உண்டாகும்.

(22) தங்களுடைய ஆத்மயாத்திரையைக் கருதி எப்போதும் வைஷ்ணவர்களைக் குறித்துத் தங்களுடைய சேஷத்வத்தை அநுஸந்தித்து மஹாத்மாக்களான அவர்களை விநயம் முதலான குணங்களோடு பக்தியுடன் பின்பற்றாமல் தம்முடைய தேஹயாத்ரையைக் கருதி ப்ராக்ருதர்களுடைய வீடுதோறும் எப்போதும் நுழைந்து திரிந்து தங்களுடைய பெயர்களுக்கு முன் அவர்களுடைய பெயர்களை ஆர்வத்துடன் அநுஸந்தித்துக் கொண்டு சாஸ்த்ரநியமம் முதலான வற்றைக் கைவிட்டு வாழ்வது அந்த வைஷ்ணவனுடைய ஸ்வரூபத்தையே அழித்து விடும். (23) லோகநாதனான விஷ்ணுவின் திவ்ய விமாநங்களையும் கோபுரங்களையும் கண்டவுடன் அப்போதே அஞ்ஜலி செய்ய வேண்டும். (24) மற்ற

தெய்வங்களினுடைய விமானங்களைப் பார்த்து வியப் படையக் கூடாது. (25) தேவதாந்தரங்களை ஸங்கீர்த்தனம் செய்வதைக் கேட்டும் வியப்படையக் கூடாது.

(26) விஷ்ணு அல்லது வைஷ்ணவர்களுடைய திரு நாமஸங்கீர்த்தனம் செய்யும் புண்யபுருஷர்களைப் பார்த்து ஆநந்தமடையாமல் அவர்கள் நடுவில் இருப்பது அபசார மாகும். (27) ஸ்ரீ வைஷ்ணவர்கள் எவருடைய திருமேனி நிழலையும் தாண்டக் கூடாது. (28) தன் உடம்பின் நிழல் ஸ்ரீ வைஷ்ணவர்களின் மேல் படும்படி இருக்கலாகாது. (29) பரிசுத்தப்படுத்தும் பொருள்களை முதலில் தொட்டுத் தங்களைப் பரிசுத்தப்படுத்திக் கொண்ட பின்பே ஸ்ரீ வைஷ்ணவர்களைத் தொட வேண்டும்.

(30) ஏழையாகையாலே முதலில் வழங்கும் வைஷ்ண வனை அலட்சியம் செய்யும் கார்யங்கள் பாபங்களாகும். (31) ஒரு வைஷ்ணவன் 'அடியேன்' என்று முதலில் வணங்கி னால் அவனை அலட்சியம் செய்வது பெரிய அபசாரமாகும்.

(32) வைஷ்ணவர்களுடைய பிறப்பில் தாழ்வையும், தூக்கம், சோம்பல் முதலானவற்றையும் பார்த்து, அவற்றை ஜனங்களுக்கு வெளிப்படுத்தி சொல்லலாகாது. (33) வைஷ்ண வர்களுடைய தோஷங்களை விட்டு குணங்களையே வெளிப் படுத்த வேண்டும். (34) எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தம் பக்தர்களுடைய ஸ்ரீபாததீர்த்தம் ஆகிய உத்தமமான தீர்த்தங் களை ப்ராக்ருதர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போது பருக லாகாது.

(35) 'சித், அசித் ஈச்வரன்' என்னும் தத்வத்ரயத் தினுடையவும், திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்னும் ரஹஸ்யத்ரத்தினுடையவும் ஜ்ஞானமில்லாதவ னுடைய பாதநீரை ஒருபோதும் பருகலாகாது. (36) ஜ்ஞானாநுஷ் டானங்கள் உடையவனாய், வைஷ்ணவனுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை முயன்று பெற்றுப் பருகவேணும். (37) தம்மை பாகவதர்களோடு ஸமமாக எண்ணலாகாது. (38) ப்ராக்ருதர்

களோடு தாமறியாமல் ஸ்பர்சம் ஏற்பட்டு விட்டால் எடுத்த வஸ்த்ரத்தோடு ஸ்நாநம் செய்து வைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தை உடனே பருகவேண்டும்.

*(39)* வைராக்யம், ஜ்ஞானம், பக்தி முதலான குணங் களுடைய ஸ்ரீவைஷ்ணவர்களை எம் பெருமானுடைய மிக உயர்ந்த திருமேனிகளாக எண்ணி அந்த மஹாத்மாக்களிடம் சிறப்பாக நம்பிக்கை வைக்க வேண்டும். *(40)* வைராக்யம், ஜ்ஞாநம், பக்தி முதலான குணங்களையுடைய பெரியவர்க ளான பாகவதர்கள் விஷயத்தில் அன்பைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். *(41)* ப்ராக்ருதர்களுடைய வீட்டில் எம்பெருமா னுடைய தீர்த்தத்தைப் பெறக் கூடாது. *(42)* ப்ராக்ருதர் களுடைய வீட்டிலுள்ள விஷ்ணு விக்ரஹங்களை ஸேவிக்கக் கூடாது.

*(43)* எம்பெருமானுடைய திவ்யதேசங்களிலும் ப்ராக்ருதர்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போது தீர்த்தப்ர ஸாதங்களை எடுத்துக் கொள்ளக் கூடாது. *(44)* பகவத் ஸந்நிதியில் ஸ்ரீவைஷ்ணவர்களாலே அளிக்கப்பட்ட ப்ரஸாதத்தை ''உபவாஸம் முதலான நியமங்களை அநுஷ்டிக்கிறேன்'' என்று கூறி மறுக்கலாகாது. *(45)* பரம பாவனமானதும் எல்லாப் பாபங்களையும் அழிக்கக்கூடியது மான எம்பெருமானுடைய ப்ரஸாதத்தை -'உண்டு மிகுந்த எச்சில்' என்று எண்ணக் கூடாது. *(46)* வைஷ்ணவர்கள் திருமுன்பே தன் குணங்களைப் புகழ்ந்துகொள்ளலாகாது. *(47)* பெரியவர்களான பாகவதர்களுடைய குணாநுபவத்தை யும், கைங்கர்யத்தையும் செய்யாமல் ஒரு கணநேரமும் வேறு கார்யங்களில் ஈடுபடலாகாது. *(48)* தினந்தோறும் ஒரு நாழிகைப் போதாவது தன் ஆசார்யனுடைய நற்குணங்களை புகழ வேண்டும். *(49)* தினந்தோறும் ஒரு நாழிகைப்போது நம்பிக்கையோடு நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களையாவது, ஆசார்யர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளையாவது அநுஸந்திக்க வேண்டும்.

*(50)* தேஹத்தையே ஆத்மாவாக நினைப்பவர்களோடு ஸஹவாசம் செய்யக்கூடாது. *(51)* ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய

சிஹ்நங்களை தரித்துக் கொண்டிருந்தும் விஷயப்ரணவர்களாயிருக்கும் வஞ்சகர்களோடு ஸஹவாஸம் செய்யக்கூடாது. (52) எப்போதும் பிறரைத் தூஷிப்பதிலே ஈடுபட்டிருப்பவர்களோடு பேசக்கூடாது.

(53) மற்ற தெய்வங்களின் பக்தர்களோடு தவிர்க்க முடியாமல் நேரும் தொடர்பினால் விளையும் தோஷம் போவதற்காக, பெரியவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களோடு எப்போதும் பேச்சை வைத்துக்கொள்ள வேண்டும். (54) மனிதர்களில் தாழ்ந்தவர்களான பாகவத தூஷக ஜனங்களைக் கண்ணாலும் பார்க்கக்கூடாது. (55) ஆசார்யர்களிடம் அபசாரம் செய்வதில் ஈடுபட்ட கொடிய வர்களைக் காணவே கூடாது. (56) த்வயத்தின் அர்த்தாநுஸந்தானத்திலேயே ஈடுபட்டவர்களோடு எப்போதும் சேர்ந்திருக்க வேண்டும். (57) எம் பெருமானைத் தவிர்ந்த மற்ற உபாயங்களில் ஈடுபட்டவர்களையும் விலக்கி வாழவேண்டும். (58) சரணாகதி தர்மத்தில் ஊன்றி நிற்பவர்களோடு எப்போதும் கூடி வாழ வேண்டும்.

(59) ரஹஸ்யத்ரயத்தின் சாரத்தை அறிந்தவர்களாய், தத்வத்ரயங்களை நன்குணர்ந்தவர்களான மஹாபாகவதர்களோடு கூடி வாழ வேண்டும். (60) அர்த்தகாமங்களில் (பொருள், இன்பம் என்னும் புருஷார்த்தங்களில் ஈடுபட்டவர்களோடு ஒருபோதும் கூடி வாழக்கூடாது. (61) எம் பெருமானிடம் பக்தியுடையவர்களிடமே எப்போதும் பேச்சு வைத்துக் கொள்ள வேண்டும். (62) ஒரு வைஷ்ணவன் உங்களைத் திரஸ்காரம் செய்தால் ''அவன் நமக்குத் தீங்கிழைத்து விட்டான்'' என்று எண்ணாமல் மௌனமாயிருக்க வேண்டும். இத்தகைய வைஷ்ணவனுக்குப் பரம பதத்திலேயே நினைவு சென்றிருக்க வேண்டும். (63) எல்லா ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் நல்லதையே எப்போதும் செய்ய வேண்டும்.

(64) தர்மத்துக்குப் புறம்பான செயலை அதனால் பெரும் பயன் விளைவதாயினும் அதைச் செய்யலாகாது. (65) எம் பெருமானுக்கு அமுது செய்யப்படாத உணவை ஒரு போதும் உண்ணலாகாது. (66) புஷ்பம், சந்தனம், தாம்பூலம், வஸ்த்ரம்,

நீர், பழம் முதலானவற்றை எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்காமல் ஒருபோதும் உபயோகிக்கக் கூடாது. (67) அர்த்தகாமங்களைக் காரணமாகக் கொண்ட மற்ற ஸாதநங்களால் அடையப்படும் பொருள் நாம் வேண்டாமலே கிடைத்தாலும் ஒரு போதும் அதை ஏற்கலாகாது. (68) ஜாதி, ஆச்ரயம் (இருக்குமிடம்), நிமித்தம் (காரணம்) முதலான ஹேதுக்களால் தோஷமடையாத அன்னம் முதலானவற்றையே எடுத்துக் கொள்ள வேண்டும்.

(69) தன் தேஹத்துக்கே இனியதான போக்யவஸ்துக்களைப் பரமாத்மாவுக்கு ஸமர்ப்பிக்கக்கூடாது. (70) சாஸ்த்ரங்களில் நல்லவையாகக் கூறப்பட்ட போகங்கள் அனைத்தையும் விஷ்ணுவுக்கு ஸமர்ப்பிக்க வேண்டும். (71) விஷ்ணுவுக்கு ஸமர்ப்பிக்கப்பட்ட நறுமணம் மிக்க அன்னம், பானம், பணியாரம் முதலானவற்றில் பகவத்ப்ரஸாதம் என்னும் எண்ணம் வைக்கவேண்டுமேயொழிய 'எனக்கு இனியவை' என்னும் எண்ணத்தை ஒருபோதும் வைக்கலாகாது. (72) சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட நித்ய நைமித்திக கர்மங்களை ''இவை எம்பெருமானுக்குக் கைங்கர்யம்'' என்னும் எண்ணத்துடனேயே செய்ய வேண்டும்.

(73) ரஹஸ்யத்ரயங்களின் பொருளில் ஊன்றியிருக்கும் மஹா பாகவதர் விஷயத்தில் அபசாரப்படுவதைக் காட்டிலும் ஆத்மநாசத்தை விளைவிக்கக் கூடியது வேறொன்றுமில்லை. அவருடைய முகமலர்ச்சியைக் காட்டிலும் நமக்கு மோக்ஷஸாதநம் வேறொன்றுமில்லை. (74) விஷ்ணுபக்தர்களை ஆராதிப்பதைக் காட்டிலும் வேறொரு புருஷார்த்தம் கிடையாது. அவர்களை த்வேஷிப்பதைக் காட்டிலும் ஆத்ம நாசத்தை விளைக்கக்கூடியது வேறொன்றுமில்லை.

**முடிவுரை**

(1) எம்பெருமானுடைய அர்ச்சை திருமேனியைக் கல்லென்று நினைப்பது. (2) ஆசார்யனை மனிதன் என்று நினைப்பது. (3) வைஷ்ணவனின் ஜாதியை ஆராய்வது (4) கலியின் தோஷத்தைக் களையக்கூடிய பகவத் பாகவதர்

களுடைய ஸ்ரீபாததீர்த்தத்தை நீரென்று நினைப்பது. (5) தோஷங்களை அழிக்கக்கூடிய ஸித்தோபாயமான பகவத் பாகவதர்களின் திருநாமங்களையும், மந்த்ரங்களையும் வெறும் ஸப்தங்களாக எண்ணுவது (6) ஸர்வேச்வரனான ஸ்ரீய: பதியை மற்ற தெய்வங்களோடு ஒத்தவன் என்று எண்ணுவது ஆகிய எண்ணங்களையுடையவன் நரகத்தையே அடைவான்.

பாகவதர்களை ஆராதிப்பது பகவானை ஆராதிப்பதைக் காட்டிலும் சிறந்தது; ஸ்ரீவைஷ்ணவர்களை அவமதிப்பது எம்பெருமானை அவமதிப்பதைக் காட்டிலும் கொடியது எம்பெருமானுடைய ஸ்ரீபாததீர்த்தத்தைக் காட்டிலும் பாகவதர் களுடைய ஸ்ரீபாததீர்த்தம் சிறந்தது: ஆகையால் எப்போதுமே பாகவதர்களை ஆராதிப்பதில் சோம்பல் இல்லாதவனாய் இருப்பாயாக.

யதிராஜர் இவ்வாறு தலைசிறந்த மோக்ஷஹேதுவான உபதேசங்களை மூன்று நாள்கள் இடைவிடாமல் அந்த சிஷ்யர்களுக்கு உபதேசித்தார். யதிராஜரால் உபதேசிக்கப்பட்ட அந்த ரஹஸ்யார்த்தங்களைக் கேட்டு மிகவும் வியப்புற்ற யதிராஜ சிஷ்யர்கள் அனைவரும் எதிகட்கிறைவரைப் பார்த்து ''ஆசார்யரே! இதற்குமுன் எப்போதும் அருளிச் செய்யாத அர்த்தங்களை இப்போது உபதேசிப்பதைப் பார்க்கும் போது எங்களுக்குப் பெரியதொரு சந்தேகம் ஏற்படுகிறது. இப்படி உபதேசிப்பதற்குக் காரணமென்ன? என்று எங்களுக்கு கூற வேண்டும்'' என்று பிரார்த்தித்தனர்.

யதிராஜரும் நான் வேண்டிக் கேட்ட வரத்தின்படி எம்பெருமானான ரங்கநாதன் எனக்கு இப்போது பரமபதத்தை அளித்து விட்டான். இன்றிலிருந்து நான்காவது நாளில் நான் வைகுண்டம் செல்லப்போகிறேன்'' என்று அருளினார். அந்த வார்த்தையைக் கேட்டு எல்லா சிஷ்யர்களும் வேரற்ற மரங்கள் போலே பூமியில் விழுந்தார்கள். எம்பெருமானாரின் பிரிவைப் பொறுக்க மாட்டாதவர்களாய் உயிரை விடவும் துணிந்தார்கள்.

அந்த சிஷ்யர்களை ஆறுதல் கூறி அவர்களை நோக்கி ஸ்ரீவைஷ்ணவர்களே! எனது பிரிவின் போது அதைப் பொறுக்காமல் எவர்கள் தமது உடலைக் கைவிடுகின்றனரோ,

அவர்களுக்கு நித்யஸூரிகளோடு சேர்த்தி ஏற்படாது. இவ் விஷயத்தை நம்மாழ்வார், பெரியநம்பிகள், ஆளவந்தார் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். எனது பிரிவைப் பொறுக்கமாட்டாமல் உயிரைவிட நினைப்பவர்கள் (நரகம் முதலான) கீழுலகங்களுக்கே செல்வார்கள் என்பதில் ஐய மில்லை என்றார்.

யதிராஜரின் வாக்யத்தைக் கேட்டு, நடுங்கிய அந்தச் சீடர்கள் அனைவரும் கைகூப்பி நின்று ''எதிகட் கிறைவரே! உம்மை ஸேவிக்காமல் நாங்கள் ஒரு முஹூர்த்த நேரமும் உயிர்வாழவல்லோமல்லோம் எங்கள் உயிர் உடலை விட்டுப் போகாதிருக்க நீரே வழி சொல்ல வேண்டும். மேலும் நாங்கள் எப்படி வாழ வேண்டும் என்பதையும் அருளிச் செய்ய வேண்டும்'' என்று பிரார்த்தித்தனர்.

**ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணம்**

அதைக்கேட்டு எம்பெருமானார் ''வைஷ்ணவர்களே! ப்ரபந்நனுடைய மறுமை ஈச்வர பயன் ஸங்கல்பத்தால் வருகிறது. ஆகையால், அவன் அதைப்பற்றிக் கவலைபடக் கூடாது. அதில் ஸந்தேஹப்பட்டானானால், அவன் செய்த ஆத்மஸமர்ப்பணம் பொய்யானதாகும். இவ்வுலகப் பயன்கள் கர்மம் காரணமாக ஏற்படுகிறதாகையால், அது விஷயமாகவும் ப்ரபந்நன் கவலைப்படக்கூடாது. ஆகையால் ப்ரபந்நன் இவ் வுலகப் பயன்களைக் குறித்தும், மறுமைப் பயனைக் குறித்தும் கவலையில்லாமல் இருக்க வேண்டும் என்று அருளிச் செய்தார்.

''ஆசார்யச்ரேஷ்டரே! எங்களுடைய உடல் விழும் வரையில் நாங்கள் எந்த வழியில் பொழுது போக்குவது என்பதை அருளிச் செய்வீராக'' என்று கேட்டனர். அதற்கு யதிராஜர் கருணையோடு அவர்களைப் பார்த்து ''மஹா புருஷர்களே! எந்தக் கர்மத்தையும் உபாய புத்தியோடு செய்யாதீர்கள். கர்மங்கள் எம்பெருமானுக்குக் கைங்கர்ய மாய் ப்ராப்யமாகும் என்று எண்ணுங்கள். அவனுக்குச் செய்யும் கைங்கர்யமாக ஸ்ரீபாஷ்யத்தை ஆர்வத்துடன் கேட்டு அதை உலகில் பரப்புங்கள்.

அதற்கு சக்தியில்லையாகில், ஆசார்யோத்தமர்களான நம்மாழ்வார் முதலான பத்து ஆழ்வார்களும் அருளிய திவ்ய ப்ரபந்தங்களைப் பொருளோடு கற்று அதை சிஷ்யர்களுக்கு எப்போதும் உபதேசம் செய்யுங்கள். அதிலும் உங்களுக்கு சக்தியில்லையாகில், திவ்யதேசங்களில் விஷ்ணுவுக்கு எப்போதும் கைங்கர்யம் செய்யுங்கள். அதில் உங்களுடைய கருத்து நன்கு ஈடுபடவில்லையாகில், திருநாராயணபுரத்தில் ஒரு குடிசையையாவது கட்டிக்கொண்டு அஹங்கார மற்றவர் களாய் அங்கு வாழுங்கள்.

இதுவும் உங்களுக்கு அழகாகப்படவில்லையாகில் உயிருள்ள வரையில் த்வயத்தை அர்த்தாநுஸந்தானத்துடன் சோம்பலில்லாமல் நன்கு ஆர்வத்துடன் உச்சரித்துக்கொண்டு கவலையுற்று வாழுங்கள். இதிலும் உங்களுடைய கருத்து செல்லவில்லையானால் கடைசியாக ஒரு ஹிதத்தைச் சொல்லு கிறேன். கவனமாகக் கேளுங்கள், ஜ்ஞானம் பக்தி முதலான வைகளை உடையவராய் அஹங்காரமற்றவராய், மஹா புருஷரான வைஷ்ணவர் ஒருவருக்கு எப்போதும் வசப்பட்டு வாழுங்கள் இதுவே கடைசியான உபாயம் இதுக்கு மேல் உபாயமில்லை'' என்று யதிராஜர் சிஷ்யர்களுக்கு அருளினார்.

## பட்டரை தர்சநஸ்தாபகராக நியமித்தல்

தமக்குப்பின் பராசரபட்டரை தர்சந நிர்வாஹகராகப் பட்டாபிஷேகம் செய்தனர். பின்னர் பட்டரைப் பார்த்து ''பெருமாளுடைய புத்ரரே! மேல்நாட்டிலே வேதாந்தி என்று பெயர்பெற்ற ஓர் அறிவாளி இருக்கிறான் புறமதத்திலுள்ள அந்த வேதாந்தியை வென்று நமது மதத்தைத் தழுவியவனாக ஆக்குவீராக'' என்று அருளினார்.

## யதிராஜரின் பரமபதப்ராப்தி

நம்பியான கோவிந்தர் என்னும் எம்பாரின் மடியிலே திருமுடியை வைத்து, வடுகநம்பியின் மடியிலே திருவடித் தாமரைகளை நீட்டி சயனித்துக் கொண்டார். பெரிய நம்பி களின் இரு பாதுகைகளையும் தமக்கு முன்னால் எழுந்தருளச் செய்து அவற்றைப் பார்த்துக்கொண்டே ஆளவந்தாரின்

திருவடித்தாமரையை நெஞ்சிலே தியானித்துக் கொண்டு விஷ்ணுவின் பரமபதத்தை சக 1059 கிபி 1137 மாசிமாதம் சுக்லபக்ஷ தசமியன்று சனிக்கிழமையில் நடுப்பகலில் அடைந்தார். யோகிராஜர் ஆதிசேஷனாகிற தமது மூல நிலையை அடைந்தார்.

ஆட்கொண்ட வில்லிசீயர், யதிவரசீயர் உள்ளிட்ட ஏழுநூறு சீயர்களும் ப்ரஹ்மவல்லி, ப்ருகுவல்லி முதலான உபநிஷத்துக்களை ஓத, பட்டர், கந்தாடையாண்டான், நடதூராழ்வான் உள்ளிட்ட முதலிகளும் மற்றுமுண்டான சிஷ்யர்களும் அருளிச் செயல் மூவாயிரம் முன்னடி பின்னடியாக ஸேவிக்க திருவரங்கப் பெருமாளரையர் திருவாய்மொழி யரையர், ஆப்பான், திருவழுந்தூரரையர், திருநறையூரரையர், அழகிய மணவாளாரரையர், விண்ணப்பஞ் செய்யும் தம்பிரான்மார் பண்ணிசைத் தாளத்துடன் திருவாய்மொழி பாட, திருவரங்கத்தமுதனார் பெரிய கோயில் வள்ளலார் தொடக்க மானவர்கள், உடையவர் நூற்றந்தாதி ஸேவிக்க, எம்பார் பிள்ளான் உள்ளிட்டவர்கள் ஸ்தோத்ர கத்யங்களை ஸேவிக்க, வடுகநம்பியும், ராமாநுஜதாஸரான கோமடத்துச் சிறியாழ் வானும் உடையவர் ப்ரபத்தியை அநுஸந்தித்துக் கொண்டு வர, திருவீதியெங்கும் கோடித்து பொரியும் புஷ்பமும் சிதற, நடை பாவாடையிட்டு கரும்பும், குடமும் ஏந்த, ஸுமங்கலிகள் மங்கள தீபமேந்தி முன்னே செல்ல இரு பக்கமும் சாமர மிரட்டிக்க, வெள்ளை வட்டமிட, ''தர்ஸநத்தில் எம் பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்' என்று ஏற்றைச் சின்னம் பணிமாற, திருவீதிகள் தோறும் எழுந் தருளுவித்துக் கொண்டு போக, பெரிய பெருமாளும் எம் பெருமானாரை பிரிய முடியாமல் 'இராமாநுசன் எந்தன் மாநிதி.'' 'இராமாநுசன் எந்தன் சேமவைப்பு' என்னும்படியாக எம்பெருமானாரை திருப்பள்ளிப் படுத்த தன் வசந்த மண்டபத்தை தந்தருளினான்.

முதலியாண்டான், வடுகநம்பி, எம்பார், திருக்குருகை பிரான் பிள்ளான் என்னும் நால்வரும் எம்பெருமானாருடைய சரம கைங்கர்யத்தை நடத்துவதில் முக்கியமானவர்களா

யிருந்தனர். ஜகதாசார்யரான யதிராஜரால் பிள்ளையாக அபிமானிக்கப்பெற்ற திருக்குருகைப்பிரான் பிள்ளான் யதிராஜரின சரம கைங்கர்யங்கள் அனைத்தையும் முறைப்படி நன்கு செய்தார்.

எம்பெருமானாருக்கு முன்னேயும், பின்னேயும் பல ஆசாரியர்கள் தோன்றி பெரிய உபகாரங்களை செய்திருந்தாலும் இராமாநுசரைப் போல கருணைக் கடலாய் விளங்கினார்கள் என்று விசேஷித்துச் சொல்ல முடியவில்லை. இராமாநுசர் ஒருவரே ''தயை கஸிந்து என்றும், தயாம்புராசி என்றும், 'காரேய் கருணை இராமாநுஜ' என்னும் பலபடியாய் போற்றப் படுகிறார்.

## 29. மூன்று அர்ச்சா திருமேனிகளின் பெருமை

*சுரக்குந் திருவுமுணர்வும், சொலப்புகில் வாயமுதம்*
*பரக்கும் இருவினை பற்றறவோடும், படியிலுள்ளீர்*
*உரைக்கின்றனன் உமக்கு யான் அறஞ்சீறு முறுகலியைத்*
*துரக்கும் பெருமை, இராமாநுசனென்று சொல்லுமினே.*
*(இராமானுசன் என்று சொல்லுங்கள்; பற்று நீங்கும்.)*

ஸ்ரீரங்கம் முதலான எல்லா திவ்யதேசங்களிலும் யதிராஜருக்குப் பலப்பல அர்ச்சாவிக்ரஹங்கள் ஏற்பட்டன. அவற்றில் யதீந்த்ராலேயே ஏறியருளப் பண்ணப்பட்டவை யாய், ஸ்ரீபெரும்புதூரிலும், ஸ்ரீரங்கத்திலும், திருநாராயண புரத்திலும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டவையான மூன்று திருமேனிகளே முக்கியமானவை. அம்மூன்றினுள்ளும் ஸ்ரீபெரும்புதூரில் ப்ரதிஷ்டை செய்யப்பெற்ற திருமேனியே முக்கியமானது. தமது அவதாரஸ்தலமாகையால், யதிராஜ ருடைய பெருங்கருணை ஸ்ரீபெரும்புதூரிலேயே நிலை நிற்கிறது.

### 1. தாமுகந்த திருமேனியின் விசேஷம்

ஸ்ரீரங்கத்தில் முன்னொரு சமயம் முதலியாண்டானின் திருக்குமாரராய், வாதூல குலத்திற்கு விளக்கமளிப்பவராய் ஸ்ரீராமாநுஜதாஸர் எனும் பெயர் பெற்ற பெரியவர் மஹாத்மா

வான யதிராஜரை வணங்கி கைகூப்பி நின்று ''ஸ்வாமி யெம்பெருமானாரே! எங்களை ரட்சிப்பதற்காக உமது அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்புதூருக்கு உமது அர்ச்சையை அளித்தருள்வீர்'' என்று பிரார்த்தித்தார். அதை ஏற்றுக் கொண்ட யதிராஜர் தமது அர்ச்சாவிக்ரஹத்தை சில்பிகளைக் கொண்டு வடிக்கச் செய்தார்.

அந்த அர்ச்சாவிக்ரஹத்தை உகப்புடன் ஆரத்தழுவி மூச்சுக் காற்று ரூபமாகத் தம் தேஜஸ்ஸை அதில் சேர்த் தருளினார். விளக்கிலிருந்து ஏற்றிய விளக்குப் போலவும், எம்பெருமானாரது பிரதிபிம்பம் போலவும் விளங்கும். அந்த அர்ச்சாவிக்ரஹத்தைக் கண்டு எல்லா ஜனங்களும் பேரானந்தப்





ஸ்ரீபெரும்புதூர் திருமேனி

பட்டனர். யதிராஜர் அந்த விக்ரஹத்துக்கு ப்ரதிஷ்டா காலத்தைத் தாமே நிர்ணயித்து, அத்திருமேனியைக் கந்தாடை யாண்டானுக்கு அப்போதே உகப்புடன் அளித்தார். முதலி யாண்டான் குமாரரான அவர் பக்தியுடன் அத்திருமேனியைப் பெற்று, அந்தணர்களோடு ஸ்ரீபெரும்புதூருக்குப் புறப்பட்டார்.

ஸ்ரீபெரும்புதூரில் ஸ்ரீகேசவன் ஸந்நிதியில் வேதாகம முறைப்படி தை மாதம் புஷ்ய நக்ஷத்திரமன்று அத்திரு மேனியை நன்கு பிரதிஷ்டை செய்வித்தார். அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த உடையவருக்கு ஒரு நாள் தேஹத்தில் களைப்பு ஏற்பட்டது. யாத்ருச்சிகமாக அவரது கண்களிலிருந்து ரத்தம் வருவதைக் கண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் வியப்புற்றனர். ஸ்ரீபெரும்புதூர்த் திருமேனியின் ப்ரதிஷ்டைக்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த தினம் அதுவே என்று உணர்ந்து அவர்கள் அனைவரும் வியப்பும், ஆனந்தமும் அடைந்தனர்.

கந்தாடையாண்டானும் ஸ்ரீபெரும்புதூரில் வேதாகம விதிப்படி அத்திருமேனியை ப்ரதிஷ்டை செய்வித்து, அப்போதே அச்செய்தியை நல்லமுறையில் யதிராஜருக்கு அனுப்பினார் எம்பெருமானார் ப்ரதிஷ்டைக்கு நிர்ணயித்த நாளும், ப்ரதிஷ்டை நடந்த நாளும் அவரது திருமேனியில் களைப்பு ஏற்பட்ட நாளும் ஒன்றாயிருந்ததிலிருந்தே ஸ்ரீ பெரும்புதூர்த் திருமேனியில் கைங்கர்யச் செல்வம் நிறைந்த எம்பெருமானார் இன்றும் உலகங்களை ரக்ஷித்துக் கொண்டு காட்சியளிக்கிறார் என விளங்குகிறது.

**2. தாமான திருமேனி விசேஷம்**

ஸ்ரீ ராமானுஜர் திருநாட்டிற்கு எழுந்தருளியவுடன் அவருடைய திருமேனியைத் திருவரங்கம் கோயிலுக்கு உள்ளேயே தன்னுடைய வசந்த மண்டபத்தில் திருப்பள்ளிப் படுத்தும்படி ஸ்ரீரங்கநாதன் நியமித்தான். அப்படியே கோயிலுக்கு உள்ளேயே ஸ்ரீ ராமானுஜருடைய திருமேனி திருப்பள்ளிப்படுத்தப் பெற்று, அங்கேயே ஒரு ஸன்னதியும் அமைக்கப் பெற்று ஒரு (மூலவர்) விக்ரஹமும் பிரதிஷ்டை செய்யப் பெற்றது. கற்சிலையின் மீது படாச்சாதனம் (மெழுகில்

தோய்த்த துணிகளைக் கொண்டு மூடுதல்) என்ற முறையில் அவ்விக்ரஹம் அமைக்கப் பெற்றுள்ளது. ஸ்ரீராமானுஜர் அணிந்து கொண்டிருந்த காஷாய வஸ்த்ரங்களைக் கொண்டே அவ்விக்ரஹம் அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாறு துணி களாலும், மெழுகினாலும் அமைக்கப்படும் விக்ரஹம் உயிருள்ள உடலைப் போலவே தோற்றம் அளிக்கும். இந்தத் திருமேனியே **தாமான திருமேனி** என்று வழங்கப்படுகிறது.

### 3. தமருகந்த திருமேனி விசேஷம்

திருநாராயணபுரத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் எழுந் தருளியிருந்த ஸ்ரீராமானுஜர் மீண்டும் திருவரங்கம் திரும்ப நினைத்த போது, திருநாராயணபுரத்திலிருந்த ஸ்ரீ வைஷ்ண



**ஸ்ரீரங்கம் திருமேனி**

வர்கள் அவரை பிரிய முடியாமல் வருந்தினார்கள். அப்போது ஸ்ரீ ராமானுஜர் தம்மைப் போலவே ஒரு விக்ரஹத்தை செய்வித்து, தம்முடைய சக்தியையும் அதில் பிரதிஷ்டை செய்து, அதை அவ்வடியவர்களிடம் வழங்கினார். எம்பெருமானாரைப் போலவே அந்த விக்ரஹம் இருந்ததை கண்டு அடியவர்கள் (தமர்) உகந்தபடியால் அந்த விக்ரஹம் **தமர் உகந்த திருமேனி** என்று வழங்கப்பட்டது.

## 30. எம்பெருமானாருடைய ப்ரபாவத்தை வெளியிட்டவர்கள்

*பேரியல் நெஞ்சே! அடிபணிந்தேனுன்னை, பேய்ப்பிறவிப்*
*பூரியரோடுள்ள சுற்றம்புலத்தி, பொருவருஞ்சீர்*
*ஆரியன் செம்மையிராமானுச முனிக்கன்பு செய்யும்*
*சீரிய பேறுடையார், அடிக்கீழ் என்னைச் சேர்த்ததற்கே.*

*(மனமே! என்னை இராமானுசன் அடியார்க்கு அடியவனாக்கி னாயே! உன்னை வணங்கினேன்.)*

1) **பெரிய பெருமாள் வெளியிட்ட வைபவம்** பெரிய பெருமாள் திருப்பவளச் செவ்வாய் திறந்து "உபய விபூதி ஐசுவர்யத்தை உமக்கும் உம்முடையார்க்கும் தந்தோம்" என்று அருளிச் செய்தார்.

2) **திருவேங்கடமுடையான் வெளியிட்ட வைபவம்** "திருவேங்கடமுடையான், உமக்கும், உம்முடையார்க்கும் உபயவிபூதி ஐச்வர்யத்தையும் தந்தோம் என்று நம் தெற்கு வீட்டில் சொன்னோமே!" என்று அருளிச் செய்தார்.

### 3. பேரருளாளன் வெளியிட்ட வைபவம்

யதிராஜர் யஜ்ஞமூர்த்தி என்னும் அத்வைத மஹா பண்டிதரோடு பதினெட்டு நாள் வாதப்போர் புரிந்தார். தொண்டனூரில் பன்னீராயிரம் சமணர்களோடும் வாதப்போர் புரிந்தார். யஜ்ஞமூர்த்தியின் கேள்விக்கு பதில் சொல்ல இயலாதவரான யதிராஜர் பேரருளாளப் பெருமானுக்கு (பதிலை அருளும்படி) விண்ணப்பித்தார். வரதராஜப் பெருமாளும் யஜ்ஞ மூர்த்தியை வெல்லும் உபாயத்தை அருளிச் செய்தார்.



திருநாராயணபுரம் ராமானுஜர்

முன்பொரு சமயம் காஞ்சியில் ஸ்ரீராமானுஜர் யதிகட்கெல்லாம் சக்கரவர்த்தியாக விளங்கி வருகையில் யாதவ ப்ரகாசருடைய கனவில் பகவானான வரதராஜப் பெருமாள் தோன்றி ராமாநுஜாசார்யருக்கு நீ சிஷ்யனானா லொழிய உனக்கு மோக்ஷமில்லை. (சிகாயஜ்ஞோப வீதங்களைக் கைவிட்டதற்கு ப்ராயச்சித்தமாக) ஸ்ரீராமாநுஜரை ஒருமுறை ப்ரதக்ஷிணம் செய்து, த்ரிதண்ட ஸந்யாஸத்தை ஏற்றுக் கொள்வாயாக அதனாலேயே நீ முக்தியடைவாய்'' என்று தாமே அருளிச் செய்தார்.

### 4. திருநாரணன் வெளியிட்ட வைபவம்

யாதவகிரிப் பெருமானான திருநாரணன் யதிராஜர் தொண்டனூரில் இருக்கும்போது அவர் கனவில் தோன்றி,

அவரை யாதவகிரிக்கு அழைத்துக் கொண்டு போய் அவருக்குக் காட்சி கொடுத்தான். ''என்னுடைய செல்வப் பிள்ளை யன்றோ'' என்று எடுத்துரைக்கும்படி திருநாரணன் அவருக்குப் பிள்ளையாகவும் ஆனான். அதனால் 'செல்வப்பிள்ளை' என்றும் உலகில் பிரஸித்தி பெற்றான்.

## 5. அழகர் வெளியிட்ட வைபவம்

சுந்தரத்தோளுடையானான அழகர் ஓர் உத்ஸவத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து ''நம்முடைய இராமாநுச னோடு ஸம்பந்தமுடைய மஹாத்மாக்களான அனைவரும் என் அருகிலே வாருங்களேன்'' என்று அழைத்தார். அதைக் கேட்டு வைஷ்ணவர்களில் பெரும்பாலானவர்கள் அழகருக்கு அருகில் சென்றார்கள். பெரியநம்பியைச் சேர்ந்த சிலர் அப்போது வராமலிருந்தார்கள். அவர்களைப் பார்த்து அழகர் ''நான் அழைத்தது கேட்டு மற்ற எல்லோரும் வந்திருக்க, இப்போது நீங்கள் மாத்திரம் வராமலிருந்ததற்குக் காரணத்தை வினவ அதைக்கேட்ட அவர்கள் ''ராமாநுஜருடைய சிஷ்யர் களையே தேவரீர் அருகில் அழைத்தீர். நாங்கள் ராமாநுஜ ருடைய ஆசார்ய ஸ்தானத்திலிருப்பதால் வரவில்லை'' என்று விண்ணப்பித்தார்கள். அதைக்கேட்ட எம்பெருமான் அவர் களைப் பார்த்து பெரிதாகச் சிரித்து, ''என்னை தசரதன் முதலா னோர் முற்காலத்தில் பிள்ளை என்றே நினைத்தது போலே ராமாநுஜரைக் இக்காலத்தில் சிலர் சிஷ்யர் என்றே நினைக் கிறார்களே!'' என்று அருளினான்.

அதற்குப்பின் ஒருசமயம் ஆத்ரேய குலசிகாமணி யான கிடாம்பியாச்சான் என்னும் பெரியவர் திருமாலிருஞ் சோலை மலைக்கு வந்து, சுந்தரத் தோளுடையானை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்னத்திலுள்ள ''அபராத ஸஹஸ்ர பாஜநம்'' என்று தொடங்கி ''அகதிம்கரணாகதம் ஹரே! க்ருபயா கேவலமாத்மஸாத்குரு'' (ஸ்தோத்ர 48) (துக்கங்களைப் போக்கும் எம்பிரானே! கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிட மாகவும், பயங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள் விழுந்தவ

னாகவும், (உன்னை யொழிய வேறு) கதியற்றவனாகவும், இருக்கிற அடியேனை (உன்) அருளினாலேயே உன்னுடைய வனாகக் கொள்வாயாக) என்னும் ச்லோகத்தை அழகரைப் பார்த்து விண்ணப்பித்தார். அந்த ச்லோகத்தின் பொருளைக் கேட்ட அழகர் ''அனைவரையும் ரக்ஷிக்கும் ராமானுஜாசார்யர் உனக்கு ரட்சகராயிருக்கும்போது 'அகதிம்' (புகலற்றவனான அடியேனை) என்று எப்படி நீ சொல்லலாம்? நமது ராமானுஜசார்யார் அனைவரையும் ரக்ஷிப்பவராயன்றோ விளங்குகிறார். அவரது ஸம்பந்த பலத்தாலேயே மஹாபாபியும் முக்தி அடைகிறானன்றோ'' என்று கிடம்பியாச்சானைப் பார்த்து அருளிச் செய்தார்.

## 6. திருக்குறுங்குடி நம்பி வெளியிட்ட வைபவம்

முன்பொரு சமயம் திக்விஜயத்தின்போது பல சிஷ்யர் களோடு கூடிய யதிராஜர் திருக்குறுங்குடியை அடைந்து, திருக்குறுங்குடி நம்பியைப் பக்தியோடு வணங்கினார். ''பன்னீராயிரம் ஏகாந்திகளோடும், எழுபத்துநாலு ஸிம்ஹாஸ னாதிபதிகளோடும், மற்றும் கணக்கற்ற சிஷ்யர்களோடும் கூடியவராய் ஸ்ரீரங்கத்தில் யதிராஜராஜர் எழுந்தருளி யிருக்கிறார்'' என்று சொல்லப்பட்ட முறையிலே சிஷ்யர்களின் பெருங்கூட்டத்தால் சூழப்பெற்ற பெருமையையுடைய யதிராஜரைக் கண்டு வியப்புற்ற திருக்குறுங்குடி நம்பி ''யதிராஜரே! ஜீவர்களை ரக்ஷிக்க விரும்பி ஸ்ரீதேவியோடு கூட ராமன், கிருஷ்ணன் முதலான பல அவதாரங்கள் என்னால் எடுக்கப்பெற்றன. ப்ரக்ருதி வசப்பட்ட ஜனங்கள் அனைவரும் அவதாரம் எடுத்திருக்கும் என்னை ப்ராக்ருத புருஷனைப் போலே முறையே ஓர் அரசன் என்றும் இடையன் என்றுமே மதித்தார்கள். அஸுரஸ்வ பாவத்தை உடையவர்களாகை யாலே 'நம்மை ரட்சிப்பதற்காக வைகுண்டத்திலிருந்து நாரணன் வந்திருக்கிறான்' என்று என்னைக்கண்டு எவரும் மேலான ஜகத்காரணப் பொருளாக அறியவில்லை. ஆகையால் எவருமே என்னை அடையவில்லை. எம்பெருமானாரே! அத்தகையவர்கள் அனைவரும் உம்மால் எவ்வழியாலே தம்

வசப்படுத்தப் பட்டார்கள்? அந்த உபாயத்தை இப்போதே எனக்கு சொல்லுவீர்'' என்றார்.

திருக்குறுங்குடி நம்பி கூறியதைக் கேட்டு, ஸ்ரீராமானுஜர் ''தேவரீர் கேட்க வேண்டிய முறையில் கேட்டால் அதை இப்போதே விரைவில் கூறுகிறேன்'' என்று விண்ணப்பிக்க, திருக்குறுங்குடி நம்பியும் அதை உண்மையாகவே நம்பி, மஹாத்மாவான யதிராஜருக்கு தர்ப்பை விரிப்பு ஆகிய வற்றால் அலங்கரிக்கப் பெற்ற திவ்யஸிம்ஹாஸனத்தை அளித்து, தன்னுடைய உயர்ந்த திவ்யஸிம்ஹானத்திலிருந்து தரையில் இறங்கி, பக்தியோடு சிஷ்யனாய் நின்றான்.

யதிராஜரும் தமக்கு அளிக்கப்பெற்ற ஸிம்ஹாஸனத்தில் தமது ஆசார்யரான பெரியநம்பி எழுந்தருளியிருப்பதாக பாவித்துக் கொண்டு தரையிலிருக்கும் திருக்குறுங்குடி நம்பியின் வலது காதில் அன்போடு ''எல்லா மந்திரத்தைக் காட்டிலும் மந்திர ரத்தினமான த்வயம் ஸ ªபத்தை அளிப்பது; மந்த்ரரத்னம் என்றும், த்வயம் என்றும், ந்யாஸம் என்றும் ப்ரபத்தி என்றும், ஸரணாகதி என்றும் பெயர்பெற்ற அது ஸ்ரீமந்நாராயணனுக்குரியதாகையாலே அனைவர்க்கும் நன்மை பயப்பதாகவும், எல்லாப் பயனையும் அளிப்பதாகவும் இருக்கிறது.'' என்று த்வயமந்த்ரத்தைப் புகழ்ந்து, உபதேசித்து, திருக்குறுங்குடி நம்பிக்கு 'வைஷ்ணவ நம்பி' என்னும் தாஸ்ய நாமத்தையும் அளித்தார். ஜகத்பதியான திருக்குறுங்குடி நம்பியும் ''நான் ராமானுஜாசார்யரின் சிஷ்யன் என்பதை உலகினர் அனைவரும் கேட்பீராக'' என்று அப்போதே அருளினான் அன்று முதல் 'ராமானுஜநம்பி' என்னும் திருநாமமும் பெருமானுக்கு திருநாமமாயிற்று.

## நம்மாழ்வார் முதலிய ஆசார்யர்கள் வெளியிட்ட வைபவம்

### 7. நம்மாழ்வார் வெளியிட்ட வைபவம்

கலியுகத்தில் நாலாயிரம் வருடங்களுக்குப் பின் ஆதிசேஷன் 'ராமானுஜர்' என்னும் திருநாமத்துடன் இந்

நிலவுலகில் அவதரிக்கப்போகிறார். அவருடைய ஸம்பந்தத்தினாலே மனிதர்கள் எல்லாப்பாபங்களும் நீங்கப் பெற்றவர்களாய் விளங்குவார்கள் என்பதை தன் ஞானத்தினால் உணர்ந்து ''பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம் நலியும் நரகமும் நைந்த நமனுக்கிங்கு யாதொன்றுமில்லை கலியும் கெடும் கண்டுகொண்மின்'' (திருவாய் 5-2-1) என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரத்தில் ''கடல் சூழ்ந்த இந்நிலவுலகில் ஒரு மஹா புருஷர் அவதரிக்கப் போகிறார். அவர் அவதரித்தவுடன் பாபங்களெல்லாம் தொலையப் போகின்றன. நரகங்களனைத்தும் நலியப் போகின்றன. யமன் வேலையற்றவனாகப் போகிறான். கலியுகமும் கெட்டழியப் போகிறது. ஜனங்களே! ஒப்பற்ற இந்த ஆச்சரியத்தைக் காணுங்கள்; காணுங்கள்'' என்று ஸ்ரீராமாநுஜர் இந்நிலவுலகில் அவதரிக்கப் போகும் ரஹஸ்யார்த்தத்தைத் தெளிவாகக் காட்டி திருவாய் மொழியை நிறைவு செய்தார்.

**8. நாதமுனிகள் வெளியிட்ட வைபவம்**

மஹாத்மாவான நாதமுனி முன்பொரு சமயம் வீர நாராயணபுரத்து ஏரிக்கரையிலே இருந்து ''இந்த ஏரியிலிருந்து மதகுகள் மூலமாக நீர் வெளியே நாட்டிலுள்ள பயிர்களனைத்துக்கும் எப்படிப் பாய்ந்து அவற்றைத் தழைக்கச் செய்கின்றதோ, அவ்வண்ணமே ஸ்ரீய: பதியாகிற கடலில் தேங்கியுள்ள வேதார்த்தங்களாகிற நீர் எம்பெருமானாராகிற பெரிய ஏரியைச் சென்று அடைந்து அவருக்கு சிஷ்யர்களான மதகுகள் மூலமாக ஏராளமான உயிர்களாகிற பயிர்களில் பாய்ந்து அவற்றைத் தழைக்கச் செய்யப் போகின்றது.

அதனாலேயே முக்காலமும் உணர்ந்த முனிவரான நம்மாழ்வார் 'பொலிக பொலிக' என்று தொடங்கும் பாசுரத்தில் ஸ்ரீராமாநுஜருடைய அவதாரத்தைக் குறித்தே இவற்றையெல்லாம் அருளியிருக்கிறார் என்று அருளிச் செய்தார். ராமாநுஜசார்யரும் பல வருடங்கள் கழிந்த பின்பு நாதமுனிகளின் திருவுள்ளத்திலிருந்த அந்த அர்த்தத்தை ''வீரநாராயணபுரத்து ஏரியின் எழுபத்துநாலு மதகுகள் போன்ற எழுபத்து நாலு ஸிம்ஹாஸனாதிபதிகளை நியமிப்பதாகிற தம் செயலின் மூலம் தெளிவுபடுத்தினார்.

லக்ஷ்மி நாதாக்ய ஸிந்தௌ சடரிபு
ஜலத் ப்ராப்ய காருண்ய நீரம்
நாதாத்ராவப்யஷிஞ்சத் ததநு
ரகுவராம் போஜ சக்ஷுர்ஜலாப்யாம்
கத்வாதாம் யாமுநாக்யாம் ஸரிதமத
யதீந்த்ராக்ய பத்மாகரேந்த்ராம்
ஸம்பூர்ய ப்ராணி ஸஸ்யே ப்ரவஹதே
பஹுதா தேசிகேந்த்ர ப்ரமௌகை."

*ஸ்ரீமந்நாராயணனாகிற பெரிய கடலில் நம்மாழ்வாராகிற காளமேகம் உட்புக்கு, கருணை நீரை முகந்துகொண்டு எழுந்து, நாதமுனிகளாகிற ஸஹ்ய மலையிலே ஆரப் பொழிந்தது. அந்த நீர் (உய்யக்கொண்டார், மணக்கால் நம்பிகளாகிற அருவிகள் மூலம்) யாமுனாசார்யராகிற பேராற்றை அடைந்து (அவரது சிஷ்யர்களாகிற கால்வாய்கள் மூலம்) மஹாத்மாவாகிற ராமாநுஜாசார்யர் என்னும் உறுதியான தடாகத்தை (ஏரியை) அடைந்து 74 ஸிம்ஹாஸனாதிபதிகளாகிற மதகுகள் மூலம் பெருவாரியாக வெளிவந்து, இன்றளவும் உயிர்களாகிற பயிர்களில் பாய்ந்து அவற்றைத் தழைக்கச் செய்கின்றது.*

## 9. ஆளவந்தார் வெளியிட்ட வைபவம்

*ஸ்ரீராமாநுஜருடைய வைபவத்தைத் தம் ஆசார்யரிடமிருந்து கேள்விப்பட்ட ஆளவந்தார் அத்திகிரியை அடைந்து, (யாதவ ப்ரகாசனின் சிஷ்யராக இருந்த ராமாநுஜரைக் கடாட்சித்து, ''வடிவழகையுடைய மஹாத்மாவான இந்த ராமாநுஜர் வைஷ்ணவமதத்தை ஏற்றுக் கொண்டவரானால், இவ்வுலகிலுள்ள ஜனங்களனைவரும் பரமபத பாகவதர்களாவார்கள் என்பதில் ஐயமில்லை'' என்று அருளிச் செய்தார்.*

## 10. பெரிய நம்பி வெளியிட்ட வைபவம்

*ஒரு சமயம் சிஷ்யர்களோடு கூடிய ஸ்ரீராமாநுஜர் பெரிய நம்பியை ஸேவிப்பதற்காக அவருடைய திரு மாளிகைக்கு எழுந்தருளினார். அவரைக் கண்டு பெரியநம்பி உடனே எழுந்திருந்து, பக்தியோடு கூடியவராய், ஸ்ரீராமாநுஜருக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரத்தை செய்தருளினார். பெரியநம்பி*

திருக்குமாரியான அத்துழாய் இப்படி அவர் செய்ததைக் கண்டு வியப்புற்று, ஆசார்யரான நீர் சிஷ்யரான ஸ்ரீராமாநுஜருக்குச் செய்யப்பெற்ற ஸாஷ்டாங்க வந்தனத்தின் காரணத்தை வினவ பெரியநம்பியும் யதிராஜருக்கு ஸமானமானவரோ, மேலான வரோ எங்கும் எவரும் என்னால் காணப்படவில்லை சிஷ்ய சமூஹத்தோடு எழுந்தருளும் யதிராஜர் எனக்கு யாமுநாசார்யார் போலே காட்சி அளிக்கிறார். அதனாலேயே நான் அவரை வணங்கினேன் என்று அருளினார்.

## 11. திருக்கோஷ்டியூர் நம்பி வெளியிட்ட வைபவம்

திருக்கோஷ்டியூர் நம்பி ஸ்ரீராமாநுஜருக்கு சரமஸ் லோகார்த்தத்தை உபதேசிக்கும் போது, ''இந்த மந்தரத்தை நீர் ஒரு போதும் எவருக்கும் உபதேசிக்கக் கூடாது'' என்று பலவாறு சபதம் வாங்கிக்கொண்டு மந்த்ரத்தை உபதேசித்தார். அப்போது யதிராஜர் அங்கு ஆசையுடன் வந்த அனைவருக்கும் பூரிதான மாக அதை உபதேசித்து விட்டார். திருக்கோஷ்டியூர் நம்பி யதிராஜர் செய்த அக்காரியத்தைக் கேள்விப்பட்டு, கோபங் கொண்டவராய், செய்த இந்த குருத்ரோஹச் செயலுக்கு என்ன பலன் தெரியுமா?'' என்று கேட்டார். அதற்கு யதிராஜர் ''இந்த குருத்ரோஹச் செயலுக்குப் பலன் எனக்கு நரகமேயாகும்'' என்று பதிலுரைத்தார்.

திருக்கோஷ்டியூர் நம்பி அதைக்கேட்டு யதிராஜரைப் பார்த்து ''இப்படி அறிந்திருந்தும் ஏன் இச்செயலைச் செய்தீர்?'' என்று வினவ, யதிராஜரும் ''அடியேன் ஒருவனே மிகக்கொடிய நரகத்தில் வீழ்வேன்; உம்முடைய கருணை யாலே இம் மந்த்ரார்த்தத்தைக் கேட்ட அனைவரும் பரம பதம் செல்லட்டும்'' என்று கூறினார். யதிராஜருடைய அத்யாச்சர்யமான அந்த வாக்யத்தைக் கேட்டு, திருக்கோஷ்டியூர் நம்பி எனக்கு இந்த கருணாகுணம் விளையவில்லையே'' என்று சிந்தித்து ஸ்ரீராமாநுஜரை அதிமாநுஷராகவும், உலகை ரட்சிப்பதற்காக வைகுண்டத்திலிருந்து இங்கு அவதரித்தவ ராகவும் எண்ணி ''தனக்குத் துன்பத்தையும், பிறர்க்கு நன்மையையும் இவ்வுலகில் எவன் செய்வான்? யதிராஜரே! நீரே எமக்கு ஸ்ரீரங்க நாதனாகிற பெருமான் ஆவீர்'' என்று

கூறி, பேரானந்தம் கொண்டவராய், ஸ்ரீராமாநுஜரை அப்போதே 'எம்பெருமானாரே' என்று உகப்புடன் எடுத் தணைத்துக் கொண்டார்.

அங்கிருந்த ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்து அந்த நம்பி ''ஸ்ரீவைஷ்ணவர்களே! இன்று முதல் இந்த வைஷ்ணவ ஸித்தாந்தமானது 'ஸ்ரீராமாநுஜார்ய' ஸித்தாந்தம் (எம்பெரு மானார் தரிசனம்) என்றே எங்கும் முழங்கப்படவேண்டும்'' என்று அருளினார். அதற்குப் பின் திருக்கோஷ்டியூர் நம்பி ஸௌம்யநாராயணன் (தெற்காழ்வான்) என்னும் பெயருடைய தமது பிள்ளையை யதிராஜருடைய சிஷ்யராக்கினார்.

## 12. திருமலையாண்டான் வெளியிட்ட வைபவம்

பெரும்புகழாளரான யதிராஜர் திருமலையாண்டான் என்னும் ஆசார்யச்ரேஷ்டரிடமிருந்து ஸ்ரீரங்கத்தில் திருவாய் மொழிக்கு அர்த்தம் கேட்டுக் கொண்டிருந்தார். அப்போது, 'அறியாக் காலத்துள்'' (திருவாய் 2-3-3) என்று தொடங்கும் திருவாய்மொழிக்கு அர்த்தத்தைக் கேட்டவுடன் ''அறியாமா மாயத்து அடியேனை வைத்தாயால்'' என்று ஆழ்வார் வெறுத்து அருளிச் செய்வதாக ஆண்டான் காட்டிய அர்த்தத்தை மறுத்து, ''அறியாமாமாயத்து அடியேனை அறியாக்காலத்துள் அன்பு செய்வித்து வைத்தாயால்'' என்று ஆழ்வார் நன்றி கூறுவதாகச் சொல்லும் (முன்பின் பாசுரங்களுக்குப்) பொருந்திய பொருளை யதிராஜர் உரைத்தார்.

அதைக்கேட்டுத் திருமலையாண்டான் கோபங்கொண்ட வராய் யதிராஜரைப் பார்த்து ''எனக்கு எதிரிலேயே இன்று நீர் மறுபடியும் ஓர் விச்வாமித்திரரை ஸ்ருஷ்டி செய்வதற்கு வழி தேடுகிறீர். ஆகையால் நீர் மடத்துக்குப் போகலாம்'' என்று கூறி, எம்பெருமானாருக்குப் பாடம் சொல்லுவதையும் நிறுத்தி விட்டார், திருக்கோஷ்டியூர் நம்பி அதைக் கேள்விப் பட்டு திருமலையாண்டானைப் பார்த்து ''முன்னொரு காலத்தில் சாந்தீபனிடமிருந்து கண்ணன் எப்படி உபதேசம் பெற்றானோ அப்படியே ஸ்ரீராமாநுஜாசார்யரும் உம்மிட மிருந்து திருவாய்மொழியின் அர்த்தங்களைப் பெறுகிறார்'' என்று கூறினார்.

அதற்குப்பின் முற்கூறிய திருவாய்மொழிக்குத் திருமலையாண்டானும், ஸ்ரீராமாநுஜரும் கூறிய அர்த்தத்தை யும் ஆண்டான் கூறக் கேட்டு, திருக்கோஷ்டியூர் நம்பி ஆண்டானைப் பார்த்து''யாமுநாசார்யர் இந்தப் பாசுரத்திற்கு ராமாநுஜர் சொன்ன அர்த்தத்தையே அருளினார். அந்த சமயத்தில் நீர் வெளியில் சென்று விட்டீர்'' என்று உரைத் தார். இதைக்கேட்ட திருமலையாண்டான் மிகவுகந்தராய் யதிராஜருக்கு முன்போலவே அர்த்தம் சொல்லித்தந்தார். மறுபடியும் ஓர் அர்த்தத்தைச் சொல்லி வரும்போது ஓரிடத்தில் ''ஆசார்யரே! இவ்விடத்தில் யாமுநாசார்யர் இப்படிப் பொருளுரைத்திருக்கமாட்டார்'' என்று கூறினார்.

அதைக்கேட்டு மிகவும் வியப்புற்ற திருமலை யாண்டான் யதிராஜரைப் பார்த்து ''ஒருபோதும் யாமுநாசார் யரைக் கண்ணாலும் காணாத நீர் இப்படிச் சொல்லுவதற்குக் காரணம் என்ன எனக் கேட்க, யதிராஜரும், திருமலை யாண்டானைப் பார்த்து, ''யாமுநாசார்யருக்கு அடியேன் ஏகலவ்யன் போன்ற சிஷ்யன் என்று அறிவீர்'' என்று உரைத் தார். ஸ்ரீராமாநுஜரை லோகநாதனான விஷ்ணுவின் அவதார விசேஷமாகவே எண்ணி, தமது பிள்ளையான சுந்தரத் தோளுடையானை அவருக்கு சிஷ்யராக்கினார்.

### 13. திருவரங்கப் பெருமாளரையர் வெளியிட்ட வைபவம்

சரமோபாயத்தைப் பற்றிய உண்மைப் பொருளை அறிய விரும்பிய யதிராஜர் திருவரங்கப் பெருமாளரையருக்கு ஆறு மாதம் கைங்கர்யம் செய்தார். அப்போது ரங்கநாதனுடைய ஸந்நிதியிலே அபிநயம் செய்த அவருக்கு மஞ்சட்காப்பு அரைத்துச் சாத்தி, பாங்காக நீராட்டி, திருமேனியைப் பிடித்து விடுதல் முதலான கைங்கர்யங்களையும் செய்தார். யாமுநா சார்யரின் பிள்ளையான அத்திருவரங்கப் பெருமாளரையர் யதிராஜரைக் கண்டு உகந்து சிரித்துக்கொண்டே ''என்னிட முள்ள (சரமோபாய ரஹஸ்யமாகிற) ஸர்வ ஸ்வத்தையும் (எல்லாச் சொத்தையும்) கொள்ளை கொள்ளுவதற்கோ நீர் இப்படிச் செய்தது? உமக்குச் சரமோபாயத்தைக் கூறுகிறேன். இப்போதே கேட்பீராக'' என்று கூறி,

யதிராஜருக்குச் சரமோபாய ரஹஸ்யத்தை அப்போதே உபதேசித்தார். தமக்குப் பிள்ளையில்லாமையாலே மஹா தேஜஸ்வியான தம்பியான அத்ரிபூர்ணரை (மலைநம்பியை) சிஷ்யராக்கி ஆனந்தித்தார்.

## 14. பெரிய திருமலை நம்பி வெளியிட்ட வைபவம்

உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது, திருமலைநம்பி எதிர்கொண்டழைக்க, நம்பியை பார்த்து யதிராஜர்! தேவரீரே எழுந்தருள வேண்டுமோ? வேறே சிறியவர் ஒருவருமில்லையோ? என்று வினவ, நம்பியும்! நாலு திருவீதிகளிலும் தேடிப்பார்த்தும் என்னைவிட சிறியவர் எவருமில்லை என்று கூறினார். மேலும் தம் குமாரர் இராமானுஜனையும், பிள்ளை திருமலை நம்பியையும் அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கச் செய்தார்.

## 15. வடுக நம்பி வெளியிட்ட வைபவம்

பேரறிவாளரான வடுகநம்பி அனைவரிடமும் இவ் வுலகில் ஆசார்யபதவி என்று யாதொரு பெரிய பதவி உள்ளதோ அப்பதவி ஜகதாசார்யரான யதிராஜரிடத்திலேயே நன்கு நிலைநிற்கிறது. யதிராஜருடைய திருவடித் தாமரை யைக் காட்டிலும் வேறு உபாயமில்லை. ஆகையால் 'எதிகட்கிறைவருடைய திருவடித்தாமரையே எல்லா ஆத்மாக்களுக்கும் தஞ்சம்' என்று உறுதிபூண்டு எப்போதும் வாழுங்கள்' என்று எம்பெருமானார் பெருமையை வெளி யிட்டார்.

## 16. கணியனூர் சிறியாச்சான் வெளியிட்ட வைபவம்

ஸர்வ சாஸ்த்ரங்களையும் உணர்ந்தவராய், கணியனூர் சிறியாச்சான் என்று பெயர் பெற்ற ஸ்ரீவைஷ்ணவர் உடுத்திய வஸ்த்ரத்தோடு ஸ்நானம் செய்து, ஸ்ரீவைஷ்ணவர்களின் திரளிலே அவர்களைப் பார்த்து, ''எல்லாப் பேரறிவாளர் களுக்கும் தலைசிறந்த மோட்சபலனை அடைவதற்கு யதிராஜருடைய திருவடித் தாமரையைத் தவிர வேறு

உபாயமில்லை'' என்று சபதம் செய்து எம்பெருமானார் பெருமையை வெளியிட்டார்.

## 17. அருளாளப் பெருமாள் எம்பெருமானார் வெளியிட்ட வைபவம்

முற்காலத்தில் தேவராஜமுனி என்னும் திருநாமமுடைய அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ராமானுஜரின் நியமனத்தாலே அநந்தாழ்வான் முதலான சிஷ்யர்களுக்கு பஞ்சஸம்ஸ்காரம் செய்து, அவர்களைப் பார்த்து ''குருவின் தலையிலே பனங்காயைக் கட்டினாற் போலே எம்பெரு மானாராலே நியமிக்கப் பெற்று இக்காரியம் என்னால் செய்யப்பட்டது. 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்றிருங்கள்'' என்று அருளிச் செய்து எம்பெருமானார் பெருமையை வெளியிட்டார்.

## 18. கூரத்தாழ்வான் வெளியிட்ட வைபவம்

கூரத்தாழ்வானுக்குப் பிள்ளைப்பிள்ளையாழ்வான் என்று ஒரு சிஷ்யர் இருந்தார். தம்மைவிடப் பெரியவர் களான வைஷ்ணவர்களைப் பற்றி எப்போதும் அபவாதம் சொல்லுவதையே இயல்பாகக் கொண்டிருந்தார். அவர் ஸ்ரீரங்கத்திலுள்ள ஜனங்கள் அவர் கூரத்தாழ்வான் சிஷ்யர் என்று உணர்ந்து, 'அவர் செய்வது ஆழ்வானுக்கே தோஷ மாகும்' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர். அதைக்கேட்டு சிஷ்யரிடம் அன்புடைய ஆழ்வான் மிகவும் வருந்தியவராய், அவருடைய மநோவாக்காயங்களாகிற முக்காரணங்களையும் எள்ளும் நீரும் வார்த்து தானமாகப் பெற்றுக் கொண்டார்.

அந்த சிஷ்யரும் குருவிடம் பக்தியோடு முக்கரணங் களையும் தானம் கொடுத்துவிட்டு, செயலிழந்தவராய் ஆசார்யனுடைய திருவடித் தாமரையைத் தியானித்துக் கொண்டு வீட்டிலேயே இருந்தார். அதற்குப் பின் ஒருநாள் வீதியில் நோயாளியான ஒரு வைஷ்ணவன் வருவதைப் பார்த்து அவன் விஷயத்தில் தம் மனத்தாலேயே பல

தோஷங்களை ஆராய்ந்தார். பின்னர் தவறென உணர்ந்து நான் முன்னமே என்னுடைய முக்கரணங்களையும் எனது ஆசார் யருக்கு தானம் செய்து விட்டேன். அதனால் எனது முக்கரணங்களில் எனக்கு இப்போது ஸ்வாதந்தர்யமில்லை. (இப்படி ஆசார்ய தீனமான மனத்தைக் கொண்டு அவரது நியமனத்துக்கு முரணாக நடந்தபடியாலே) பாபியான நான் இந்த உடலை இப்போதே விடுவது தக்கது'' என்று உறுதி பூண்டு, ப்ராணயாமம் செய்து, மௌனத்தை ஏற்றுக் கொண்டவராய், தரையில் தர்ப்பங்களைப் பரப்பினார்.

கூரத்தாழ்வான் இதை கேள்விப்பட்டு அந்த சிஷ்ய ருடைய வீட்டிற்கு வந்து, சிஷ்யரைக் கண்டு, இப்போது எதற்காக தேஹத்யாகத்தைச் செய்கிறாய்? உன்னுடைய மனத்தை மறுபடியும் நான் உனக்கே அதீனமாகக் கொடுத்து விட்டேன். அதை ஏற்றுக்கொள். பராபவாதத்தைச் செய்யும் வாக்கை விரைவில் உறுதியாக வெற்றி கொள்வாய். மனஸ்சினாலே பராபவாதம் நினைக்கப்பட்டதாகில் (அதற்கு ப்ராயச்சித்தமாக) ஜகதாசார்யரான யதிராஜருடைய திருவடித் தாமரையை பக்தியுடன் நினைப்பாயாக. கவனமின்மை யால் உனக்கு மனத்திலே இப்போது ஏற்பட்ட பாகவதாபசாரம் யதிராஜருடைய திருவடித் தாமரையை நினைப்பதால் விரைவில் அழிந்து போகும். முக்கரணங்களாலும் எப்போதும் செய்யப்படும் எல்லாப் பாபங்களுக்கும் யதிராஜருடைய திருவடித்தாமரையை நினைப்பதே உறுதியான ப்ராயச்சித்த மாகும்'' என்று கூறி எம்பெருமானார் வைபவத்தை வெளி யிட்டருளினார்.

அதற்குப்பின் ஒரு ஸமயம் ஸ்ரீரங்கத்தில் காவேரி மணலின் நடுவில் ஞானிகளின் பெருங்கூட்டம் ஒன்று அமைந்தது. மோட்சோபாயம் என்ன? என்று அப்போது விசாரமேற்பட்டு (அதற்குப் பலர் பலவாறு பதில் சொல்லி) ஓர் தத்வநிஷ்கர்ஷம் ஏற்படாத அளவில் மற்றொரு வேதவ்யாஸர் போலே விளங்கும் கூரத்தாழ்வான் எழுந்திருந்து உடுத்த துணியோடு காவேரியில் ஸ்நானம் செய்து, கையைத் தூக்கி அந்த வைஷ்ணவ ஸபையின் நடுவிலே ''மூன்று முறை

ஸத்யஞ் செய்துகூறுகிறேன். யதிராஜரே ஜகதாசார்யராவார். அவரே எல்லா உலகங்களையும் ஸம்ஸாரத்திலிருந்து உய்விக்கக் கூடியவர். இதில் ஐயமில்லை'' என்று அருளினார்.

## 19. முதலியாண்டான் வெளியிட்ட வைபவம்

அக்காலத்தில் மிளகாழ்வான் என்னுமொருவர் முதலியாண்டானோடு வாதத்துக்கு வந்தார். அப்போது அவ்விருவித்வான்களும் தங்களுடைய வாதத்தில் 'தோற்றவர் ஜயித்தவரைத் தோளாலே சுமக்கவேண்டும்' என்று தங்களுடைய வெற்றி தோல்வியை நிர்ணயம் செய்து கொண்டார்கள். அப்படி வாதம் செய்த பின்பு அந்த சாஸ்த்ர வாதத்தில் முதலியாண்டானாலே வெற்றி கொள்ளப்பட்ட மிளகாழ்வான் முதலியாண்டானைத் தோளிலே சுமந்தார். பின்பு மிளகாழ்வான் முதலியாண்டானை வணங்கி ''அடியேனுக்கு நல்ல உபதேசத்தைச் செய்து ஏற்றுக் கொள்ள வேணும்'' என்று பிரார்த்தித்தார். முதலியாண்டான் அதற்கு, அவரை அப்போதே யதிராஜர் இருக்குமிடம் அழைத்துச் சென்று யதிராஜரை வணங்கச் செய்து எல்லோரும் ''ஸ்ரீராமாநுஜருடைய திருவடித் தாமரையையே சரணடைவீர்'' என்று ஹிதோபதேசம் செய்தருளினார்.

## 20. லோகார்யர் வெளியிட்ட வைபவம்

லோகார்யர் என்னும் ஸ்ரீவைஷ்ணவரொருவர் கோவிந்தர் என்னும் பெரியவரைப் பார்த்து ''கோவிந்தரே! எனக்கு இப்போது பகவத் விஷயத்தின் பொருள் நன்கு தெரியும். சிஷ்ய ஜனங்களுக்கு நான் எல்லா சாஸ்த்ரங்களையும் உபதேசிக்கவல்லேன்' என்று கர்வத்தோடு நீர் இருக்கலாகாது. யதிராஜருடைய திருவடித்தாமரையையே சரணமடைவீர்'' என்று அருளினார்.

## 21. எம்பார் வெளியிட்ட வைபவம்

சாஸ்த்ரமறிந்தவர்களுள் சிறந்தவரான எம்பார் ஸ்ரீ பராசரபட்டார்யருக்கு எல்லா சாஸ்த்ரங்களையும் உபதேசித் தார். மோட்சமடைய ஒரே ஸாதனமான ஹிதத்தைச் சொல்லுகிறேன். கேளும். 'ரங்கநாதன் தானே என்னைப்

புத்ரனாக ஸ்வீகாரம் செய்து கொண்டான். நான் கூரத்தாழ்வானின் குமாரன்: எல்லா சாஸ்த்ரங்களையும் கற்றவன்; அறிவாளி; நற்குடிப் பிறப்புள்ளவன்; பக்திச் செல்வம் பெற்றவன்' என்று கர்வம் கொண்டு இந்த உமது பெருமைகளையே ரட்சகங்களாக நினைத்து நீர் ஒருபோதும் வாழலாகாது. யதிராஜருடைய திருவடித் தாமரையையே உபாயமாக எண்ணி எப்போதும் வாழ்வீராக. அது தவிர வேறு உபாயமில்லை'' என்று உபதேஸித்தார்.

## 22. பட்டர் வெளியிட்ட வைபவம்

கூரத்தாழ்வான் குமாரரான பட்டர் தமது சிஷ்யரான வேதாந்தி நஞ்சீயரைக் குறித்து - ''வேதாந்தியே! 'ரங்கநாதனின் புத்ரராய் பட்டரான என்னை ஆச்ரயித்துள்ளவன்' என்றும் 'ஆசார்யருக்கு அதிகமான த்ரவ்யம் தட்சிணையாக என்னால் கொடுக்கப்பட்டது' என்றும் எண்ணி 'இதனால் நானே பாக்யசாலி' என்று இப்போது நீர் இருக்கலாகாது, எம் பெருமானாருடைய திருவடித் தாமரையையே நீர் எப்போதும் உமக்கு ரட்சமாக எண்ணியிருக்க வேணும்'' என்று கூறினார்.

## 23. திருக்குருகைப்பிரான் பிள்ளான் வெளியிட்ட வைபவம்

ஸ்ரீராமமிச்ரர் என்னும் பெயருடைய ஸோமாசியாண்டான் திருக்குருகைப்பிரான் பிள்ளான் ஸன்னதியிலே ஸ்ரீபாஷ்யத்தை மூன்று முறை காலக்ஷேபம் கேட்டார். ஸ்ரீராமமிச்ரர் தம்முடைய ஊருக்கு விடைகொள்ளும்போது ஆசார்யரை வணங்கி ஜ்ஞானம், பக்தி முதலானவற்றில் எளிதாயிருக்கும் எந்த உபாயத்தினால் அடியேனுக்கு மோட்சம் எளிதில் கிட்டுமோ, அந்த உபாயத்தை அடியேனுக்கு உபதேசிக்க வேண்டும்'' என்று வினவ பிள்ளானும் ஸோமாசி யாண்டானைப் பார்த்து ''மீமாம்ஸை முதலான எல்லா சாஸ்த்ரங்களும் என்னால் கற்கப்பட்டன; ஆகையால் நானே பேரறிவாளன்' என்று கர்வங்கொண்டு அஹங்காரப்படாமலிரும். யதிராஜரின் திருவடித் தாமரையையே எப்போதும் ரக்ஷகமாக நெஞ்சில் நினைத்து வாழ்வீராக'' என்று உபதேசித்தார்.

## 24. வ்யாஸபட்டர் வெளியிட்ட வைபவம்

அக்காலத்தில் திருநாராயணபுரத்தில் வ்யாஸபட்டர் என்பவர் அங்குள்ள எம்பெருமானார் ஸன்னிதியில் சிஷ்ய ஸமூஹங்களுக்கு ஸ்ரீபாஷ்ய காலட்சேபம் ஸாதித்து வந்தார். அந்த உபந்யாஸத்தைக் கேட்டு சிஷ்யர்கள் ஆசார்ய ச்ரேஷ்டரான பட்டார்யரைப் பார்த்து ''இவ்வுபந்யாஸம் எங்களுக்கு இப்போது கங்காப்ரவாஹத்தையொத்துக் காட்சி அளிக்கிறது. ஸ்ரீபாஷ்யத்தின் பொருளைப் புரிந்துகொள்ள எங்களால் முடியவில்லை. எம்பெருமான் எங்கள் விஷயத்தில் அருள் புரிவதற்கு உறுப்பான எளிய உபாயத்தை எங்களுக்குக் கூறுவீராக'' என்று விண்ணப்பித்தார்கள். அதற்கு வ்யாஸ பட்டர் ''எம்பெருமானாருடைய இந்தத் திருவடித் தாமரைகளையே தஞ்சமாகக் கொள்ளுங்கள்'' என்று அருளிச் செய்தார்.

## 25. நடாதூராழ்வான் வெளியிட்ட வைபவம்

அக்காலத்தில் 'வரதவிஷ்ணு' என்னும் திருநாமமுடைய (எம்பெருமானாருடைய மருமகனான) நடாதூராழ்வானுக்குப் பலர் சிஷ்யர்களாயிருந்தனர். அவர்களுக்கு நடாதூராழ்வான் ஸ்ரீபாஷ்யத்தை உபந்யாஸமாக ஸாதித்து வந்தார். அந்த ஆசார்யச்ரேஷ்டரிடமிருந்து ஸ்ரீபாஷ்யார்த்தத்தை கேட்ட அனைவரும் ஆசார்யரைப் பார்த்து ''இப்போது எங்களுக்குச் செயற்கரிய உபாயமாகிற பக்திமார்க்கம் தேவரீரால் உபதேசிக்கப்பட்டது. இதற்கு நாங்கள் அதிகாரிகள் அல்லர். எங்களுக்கு பரமபதமடைய எளிய உபாயத்தைக் கூறுவீர்'' எனக் கூற அவ்வாசார்யர் அவர்களுக்கு ப்ரபத்தி மார்க்கத்தை உபதேசித்தார். (மஹாவிச்வாஸம் தேவைப்படும்) இந்த ப்ரபத்தி மார்க்கத்திலும் எங்களுக்கு சக்தியில்லை'' என்று கூறினர். நடதூராழ்வான் அவர்களைப் பார்த்து ''ராமாநுஜருடைய திருவடித் தாமரையையே நெஞ்சில் அன்போடு த்யானித்துக் கொண்டிருந்து, எப்போதும் அந்த ராமாநுஜாசார்யருக்குக் கைங்கர்யம் செய்வதில் ஈடுபட்டவர்களாய் தினந்தோறும் அந்த யதிராஜருடைய மங்களமான சரித்திரங்களைக் கேட்டுக் கொண்டும் வாசித்துக் கொண்டும் மோட்சமடைவதில் கவலையில்லாதவர்களாய் எப்போதும் வாழ்வீர்களாக'' என்று ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்கான உபாயத்தைக் கூறினார்.

## 26. ஊமை வெளியிட்ட வைபவம்

காஞ்சிபுரத்தில் ஸ்ரீவைஷ்ணவ குலத்தில் ஓர் ஊமை பிறந்திருந்தான். சில வருஷங்கள் சிறுவனாக வளர்ந்து வந்தான். நடுவில் இரண்டு வருஷங்கள் அந்த ஊமையை எவரும் காணவில்லை. அதற்குப் பின் அவன் காஞ்சிபுர வாஸிகளுக்குக் காட்சியளித்தான். பேசவல்லவனாய்த் திரும்பி வந்த அவனைக் கண்டு காஞ்சிவாஸிகள் மிக வியப்புற்றவர்களாய், எல்லோரும் கூடி ''ஊமாய்! இவ்வளவு காலம் நீ எங்கு சென்றிருந்தாய்?'' என்று கேட்டனர். ''நான் திருப்பாற்கடலுக்குச் சென்று அங்கு லோகநாதனான ஸ்ரீஹரியைத் திருவநந்தாழ்வான் மேலே ஸேவித்து, மறுபடியும் காஞ்சிக்குத் திரும்பிவிட்டேன்'' என்று அவன் பதில் சொன்னான்.

ஊமையாயிருந்த அவன் சொல்லுவதைக் கேட்டு வியப்புற்ற அவர்களனைவரும் அவனைச் சூழ்ந்து கொண்டு ''அங்கு நீ சென்றபோது நடந்த செய்திகளை எங்களுக்கு கூறுவாயாக'' என அவ்வூமையும், உபவிபூதியையும் நிர்வஹிக்கும் விஷ்வக்ஸேனர் உலகை ரட்சிப்பதற்காக



நம்மாழ்வார் - ராமானுஜர்
பவிஷ்யதாசார்ய விக்ரஹம் ஆழ்வார் திருநகரி

இந்நிலவுலகில் ஸ்ரீபெரும்புதூரில் ராமாநுஜராக அவதரித்துள்ளார்' என்று திருப்பாற்கடலில் கரையிலிருப்பவர்கள் ஸ்ரீராமாநுஜரைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்'' என்று கூறி அப்போதே அங்கேயே மறைந்து விட்டான். (மறைவதற்கு முன்) 'ஸேநாபதியாழ்வானே யதிராஜர்' என்று பல தடவை அவன் வார்த்தை சொன்னான். இப்படி மறைந்த பின்பு அவன் இவ்வுலகில் எங்கும் எவராலும் காணப் படவில்லை.

## 27. ப்ரஹ்மராக்ஷஸன் வெளியிட்ட வைபவம்

காஞ்சியில் முன்னொரு சமயம் ப்ரஹ்மராக்ஷஸன் தான் விடுதலையடையும்போது, தன்னை விரட்டுவதில் உறுதியாயிருந்த யாதவப்ரகாசனுக்கு ராமாநுஜரைக் காட்டி யாதவப்ரகாசனைப் பார்த்து ''இந்த ஸ்ரீமத் ராமாநுஜர் நித்யஸூரிகளில் தலைவராயிருந்து, இப்போது இவ்வுலகில் அவதரித்து, உலகை ரட்சிப்பதற்காக எம்பெருமானால் நியமிக்கப் பெற்றவராய், மனிதவுரு எடுத்துள்ளார். ஸ்ரீராமாநுஜரை ஆச்ரயித்து நீ விஷ்ணுவின் பரமபதத்தை அடைவாய்'' என்று எம்பெருமானாரின் பெருமையை வெளியிட்டான்.

எம்பெருமானாருடைய சிஷ்யர்களான எழுபத்தினான்கு ஸிம்ஹாஸனாதிபதிகளான அனைவரும் தங்கள் சிஷ்யருக்கு இவ்வண்ணமே உபதேசித்தனர். இவ்வுலகில் ஸ்ரீவைஷ்ணவர்களான அப்பெரியோர்கள் அனைவரும் ஜகதாசார்யரான யதிராஜருடைய வைபவத்தை இவ்வண்ணமே வெளிப்படுத்தினர். இவ்வண்ணமாக ஆசார்யர்கள் அனைவராலும் வெளிப்படுத்தப்பட்ட பெருமையையுடையவராய், உலகை ரட்சிப்பதையே விரதமாகக் கொண்டவராய் ஸ்ரீரங்கத்தில் யதிராஜர் வாழ்கிறார்.

## எம்பெருமானாரின் பவிஷ்யதாசார்ய விக்ரஹங்களின் வைபவம் ஒன்று :

ஸ்ரீ மதுரகவிகள் நம்மாழ்வார் நியமனம் பெற்று தாமிரபரணி தீர்த்தத்தைக் காய்ச்ச முதலில் பவிஷ்யதாசார்யரான உடையவர் விக்ரஹம் தோன்றியதாகவும், மறுமுறை

காய்ச்சிய போது நம்மாழ்வாருடைய விக்ரஹம் தோன்றிய தாகவும் அந்த உடையவர் விக்ரஹத்தை திருப்புளியாழ்வார் அடியிலே பூமியிலே எழுந்தருளப் பண்ணியிருந்ததாகவும் திருவாய்மொழிப்பிள்ளை, ஆழ்வார் திருநகரியை காடுவெட்டி நாடாக்கிய போது ஸ்வப்நத்திலே விக்ரஹம் இருப்பிடத் தையும், மதுரகவிகள் காலத்தில் தீர்த்தத்திலிருந்து தோன்றிய வரலாற்றையும் அறிந்து, பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை கண்டெடுத்து, மாறனடி பணிதுய்ந்தவராகிய எம்பெரு மானாரை இப்போது ஸேவை சாதிக்கும் நம்மாழ்வார் விக்ரஹம் தோன்றுவதற்கு முன்னதாக தோன்றியபடி யாலே, ஆழ்வார்க்கு தமையனார் என்று சொல்லத்தக்கப் பெருமை பெற்றிருப்பதால், இவருக்குத் தனிகோயிலும், ''ஸ்ரீராமானுஜ சதுர்வேதி மங்கலம்'' என்று பெயர்கொண்ட நான்கு திருவீதிகளையும் உண்டாக்கி அந்த ஸந்நிதியின் முன்பே தமக்கும் திருமாளிகையை அமைத்துக் கொண்டு, இராமானுஜனைத் தொழும் பெரியோரையும் ஆதரித்துக் கொண்டு எழுந்தருளியிருந்தார் என்கிற சரித்திரம் ஆழ்வார் திருநகரியில் வழங்கி வருகிறது.

**மற்றொன்று :**

ஸ்ரீமந்நாத முனிகளுக்கு நம்மாழ்வார் நாலாயிரம் அருளும் காலத்தில் ''பொலிக பொலிக'' என்கிற திருவாய்மொழி (5-2) அருளிச் செய்யும்போது ''கலியுங்கெடுங் கண்டு கொண்மின்'' என்கிற திருவாசகத்தால், எம்பெருமானார் திருவவதாரத்தை ஸூசிப்பித்து, பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை எழுந்தருளப் பண்ணிக் கொடுத்து அருளினார்.

இப்படி ஸ்ரீமந்நாத முனிகளுக்கு அருளிய இரண்டாவது பவிஷ்யதாசார்ய விக்ரஹம் ஸ்ரீரங்கம் மணவாள மாமுனி ஸந்நிதியில் ஸேவை ஸாதிப்பதாகக் காண்கிறது. அதாவது மாமுனிகள் தம் ஆசார்யராகிய திருவாய்மொழிப்பிள்ளை உகந்தருளித்த முன்னவரான பவிஷ்யதாசார்ய விஷயமாக யதிராஜ விம்சதியை அருளிச் செய்து, அவரையே உபாயமாகப் பற்றி பின்னவராகிய ஸ்ரீமந்நாத முனிகளுக்குக் கிடைத்த விக்ரஹத்தை பலமாக பெற்றுவிட்டார். அது தோன்றவே ''யதீந்த்ர ப்ரவணர்' என்கிற திருநாமத்துக்கு உரியவராக

ஆனார் என்பது சாலவழங்கிய வைபவம், ஓராண் வழியாக ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி முடிவு பெறுகிறபடியே ஸ்ரீமந்நாதமுனிகள் பெற்ற பவிஷ்யதாசார்ய விக்ரஹம் மணவாள மாமுனிகளிடம் வந்து சேரப் பெற்றது என்பது சிறப்பு வைபவமாகும்.

**ஸ்ரீராமாநுஜரின் திருமேனி**

| | | |
|---|---|---|
| *1)* | நம்மாழ்வாரை | தலையாகவும் |
| *2)* | நாதமுனிகளை | திருமுகமாகவும் |
| *3)* | உய்யங்கொண்டாரை | கண்ணாகவும் |
| *4)* | மணக்கால் நம்பியை | கன்னமாகவும் |
| *5)* | ஆளவந்தாரை | மார்பிடமாகவும் |
| *6)* | பெரியநம்பியை | கழுத்தாகவும் |
| *7)* | திருக்கச்சிநம்பியை | திருக்கையாகவும் |
| *8)* | திருக்கோட்டியூர் நம்பியை | ஸ்தனமாகவும் |
| *9)* | திருவரங்கப் பெருமாளரையரை | வயிராகவும் |
| *10)* | திருமாலையாண்டானை | முதுகாகவும் |
| *11)* | கிடாம்பியாச்சானை | இடுப்பாகவும் |
| *12)* | எம்பாரை | இடையாகவும் |
| *13)* | பட்டரையும், நஞ்சியரையும் | புட்டங்களாகவும் |
| *14)* | நம்பிள்ளையை | துடையாயும் |
| *15)* | வடக்குதிருவீதிப் பிள்ளையை | முழங்கால்களாகவும் |
| *16)* | பிள்ளைலோகாச்சாரியரை | திருவடியாகவும் |
| *17)* | திருவாய்மொழிப் பிள்ளையை | பாதரேகையாகவும் |
| *18)* | மணவாளமாமுனியை | பாதுகையாகவும் |
| *19)* | சேனாபதி ஜீயரை | ஊர்த்வபுண்டரமாகவும் |
| *20)* | முதலியாண்டானை | த்ரிதண்டமாயும் |

| | |
|---|---|
| 21) கூரத்தாழ்வானை | புரிநூலாகவும் |
| 22) கிடாம்பியாச்சானை | கமண்டலமாகவும் |
| 23) வடுகநம்பியை | கல்லாடையாகவும் |
| 24) திருக்குருகைபிரான் பிள்ளானை | தோமாலிகையாகவும் |
| 25) பிள்ளையுறங்கா வில்லி தாசரை | நிழலாகவும் |

இங்ஙனம் இராமானுஜரை ஸர்வாசார்ய சொரூபமாகக் கொள்வது மரபு என்று பெரியவானமாமலை ஜீயர் சாதித் திருக்கிறார்.

## 31. எம்பெருமானாரின் திருநாமங்கள்

*இன்புற்ற சீலத் திராமாநுச, என்று மெவ்விடத்தும்*
*என்புற்ற நோயுடல் தோறும் பிறந்திறந்(து), எண்ணரிய*
*துன்புற்று வீயினும் சொல்லுவ தொன்றுண்டு*
*உன்தொண்டர்கட்கே*
*அன்புற் றிருக்கும்படி, என்னை யாக்கியங்காட்படுத்தே.*
*(இராமானுச! என்னை உன் அடியார்க்கடியல் ஆக்கு.)*

1) எம்பெருமானாரின் திருத்தகப்பனாரான ஸர்வக்ரது கேசவாரியர் சாத்தின திருநாமம் **இளையாழ்வார்.**

2) தேவப்பெருமாள் சாத்திய திருநாமம் **யதிராஜர்.**

3) பெரியநம்பி சாத்திய தாஸ்ய நாமம் **ராமாநுஜன்.**

4) திருவரங்கப் பெருமாளரையர் யதிராஜரின் கைங்கர்யத்தால் உகந்து த்வ்யார்த்தம் சாதித்தருளி **லஷ்மணமுனி** என்ற திருநாமம் சாத்தி தம் திருத் தம்பியான சொட்டை நம்பியை எம்பெருமானார் திருவடிகளில் ஆஸ்ரயிப்பித்து அருளினார்.

5) நம்பெருமாள் உபயவிபூதிகளுக்கும் யதிராஜரைப் பட்டங்கட்டி **உடையவர்** என்று திருநாமம் சாத்தி யருளினார்.

6) திருக்கோட்டியூர் நம்பி திருமந்த்ரார்த்தமும், சரமஸ் லோகார்த்தமும் ஸாதித்து **எம்பெருமானார்** என்ற

திருநாமம் சாத்தி தமது குமாரரான தெற்காழ்வானை சிஷ்யராக்கினார்.

7) திருமாலையாண்டான் பெரிய திருமொழி, திருவாய் மொழி முதலான நாலாயிரத்துக்கும் வ்யாக்யானங்கள் ஸாதித்து **சடகோபன் பொன்னடி** என்ற திருநாமம் சாத்தி தமது குமாரரான சுந்தரதோளுடையாரை சிஷ்யராக்கினார்.

8) பெரிய திருமலைநம்பி ஸ்ரீமத் ராமாயண வியாக்யானம் சாதித்தருளி, **கோயிலண்ணன்** என்ற திரு நாமம் சாத்தி தமது குமாரரான பிள்ளை திருமலை நம்பியையும், மருமக்களான எம்பாரையும் கோவிந்தப் பெருமாளையும் சிஷ்யராக்கினார்.

9) சாரதா தேவி ஸ்ரீபாஷ்யம் அருளிச் செய்கையால் **ஸ்ரீபாஷ்யகாரர்** என்று திருநாமம் சாத்தினார்.

10) ஆதிகேசவப் பெருமாள் சாத்தின நாமம் **பூதபுரீஸர்**.

11) திருவேங்கடமுடையான் சாத்தின நாமம் **தேஸிகேந்த்ரர்**.

ஆக இவருக்கு திருநாமங்கள் பதினொன்று அவை இளையாழ்வார், ராமாநுஜர், யதிராஜர், உடையவர், லஷ்மணமுனி, எம்பெருமானார், சடகோபன், பொன்னடி, கோயிலண்ணன், ஸ்ரீபாஷ்யகாரர், பூதபுரிஸர் தேசிகேந்த்ரர் என்பனவாம்.

**மேலும் விசேஷ திருநாமங்கள்**

1) யதீந்த்ரர்
2) யதிகுலதுர்யர்
3) யதிஸார்வருபளமர்
4) யதிசக்ரவர்த்தி
5) யதிபதி
6) யதிநாதர்
7) யோகீந்த்ரர்
8) க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்

★★★

## 32. எம்பெருமானார் அருளிச் செய்த க்ரந்தங்கள்

***கட்டப்பொருளை மறைபொருளென்று, கயவர் சொல்லும் பெட்டைக் கெடுக்கும் பிரானல்லனே, என் பெருவினையைக்***

★★★ ஆதாரம் : பெரியதிருமுடி அடைவு.

***கிட்டிக் கிழங்கொடு தன்னருளென்னுமொள் வாளுருவி***
***வெட்டிக் களைந்த, இராமானுசனென்னும் மெய்த்தவனே.***
***(இராமானுசன் என் தீவினையை வேரொடு களைந்தான்.)***

1) வேதார்த்த ஸங்கரஹம்
2) வேதாந்த தீபம்
3) வேதாந்தசாரம்
4) ஸ்ரீபாஷ்யம்
5) கீதாபாஷ்யம்
6) சரணாகதி கத்யம்
7) ஸ்ரீரங்க கத்யம்
8) ஸ்ரீவைகுண்ட கத்யம்
9) உடையவர் நித்யம்

**1. ஸ்ரீ வேதார்த்த ஸங்க்ரஹம் :**

இந்நூல் வேதாந்த (உபநிஷத்) ஸாரம். திருவேங்கடத்தில் திருவேங்கடவன் ஸந்நிதியில் மூன்று நாட்கள் ஸ்ரீராமானுஜர் உபந்யாசம் செய்தருளினார். ''சேதனனால் வர்ணாச்ரம தர்மத்தை அங்கமாக கொண்ட பக்தியினாலே பெறத் தக்கவன் நித்யவிபூதியிலுள்ள ஸர்வேச்வரனே'' என்பது இதன் திரண்ட பொருளாகும்.

**2. வேதாந்த ஸாரம், வேதாந்த தீபம், ஸ்ரீ பாஷ்யம் :**

இம் மூன்று நூல்களும் ப்ரஹ்ம ஸூத்ரங்களை விவரிப் பவை. ஸ்ரீ ஆளவந்தாரின் ஸித்தித்ரயம் என்ற நூலை அடிப் படையாகக் கொண்டது.

**3. கீதா பாஷ்யம் :**

ஸ்ரீ ஆளவந்தாருடைய ''கீதார்த்த ஸங்க்ரஹம்'' என்ற க்ரந்தத்தின் அடிப்படையிலேயே ஸ்ரீ ராமானுசர் கீதா பாஷ்யத்தை அருளிச் செய்துள்ளார்.

**4. கத்யத்ரயம் :**

ஸ்ரீ ஆளவந்தாருடைய ஸ்தோத்ரரத்னத்தை அடிப் படையாக வைத்து அருளிச் செய்த திவ்யக்ரந்தமாகும். இவைகளில் ***சரணாகதி கத்யமும், ஸ்ரீரங்க கத்யமும் ஸ்ரீ*** ரங்கத்தில் பங்குனி உத்திர திருநாளன்று அழகிய மணவாளனும் ஸ்ரீரங்க நாச்சியாருமான சேர்த்தியில், அவர்கள் திருமுன்பே விண்ணப்பிக்கப்பட்டவை. ***ஸ்ரீ வைகுண்டகத்யம்*** ஸ்ரீவைகுண்ட நாதனை பரோபதேச ரூபமாய் அருளிச் செய்யப்பட்டது.

**5. நித்யக்ரந்தம் :**

எம்பெருமானையே உபாய உபேயமாக பற்றியிருக்கும் த்வயார்த்த நிஷ்டனுக்கு 'பரமை காந்தி' என்று பெயர். அந்த பரமைகாந்தி ப்ரதிதினம் அநுஷ்டிக்க வேண்டியதை தன் நித்ய க்ரந்தத்தில் காட்டி அருளுகிறார். ஆனால் இந்த நித்யக்ரந்தத்தின் படி க்ருஹங்களில் அர்ச்சா மூர்த்திக்கு திருவாராதனம் ஸமர்ப்பிப்பது கஷ்டமாகையால் எம் பெருமானாரின் அபராவதாரமான ஸ்ரீ மணவாள மாமுனிகள் தமிழில் ஒரு திருவாராதன க்ரமம் அருளிச் செய்துள்ளார். இம்முறையே இப்போது எல்லா தென்னாசார்ய ஸம்ப்ரதாயத் தவர்களாலும் பின்பற்றப்படுகிறது.

**33. எம்பெருமானாரின் 74 சிம்மாசனாதிபதிகள்**

*தெரிவுற்ற ஞானம் செறியப் பெறாது வெந் தீவினையால்*
*உருவற்ற ஞானத் துழல்கின்ற என்னை, ஒரு பொழுதில்*
*பொருவற்ற கேள்விய னாக்கிநின்றா னென்ன புண்ணியனே*
*தெரிவுற்ற கீர்த்தி, இராமாநுச னென்னும் சீர்முகிலே.*
*(இராமானுசனே பெரும் புண்ணியன்.)*

1) ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி, அவர் குமாரர் என்னாச்சான், அவர் குமாரர் பிள்ளையப்பன்
2) பெரிய நம்பி குமாரர் புண்டரீகர்
3) திருக்கோட்டியூர் நம்பி குமாரர் தெற்காழ்வான்
4) திருமலையாண்டான் குமாரர் சுந்தரத் தோளுடையார்
5) பெரிய திருமலைநம்பி குமாரர் ராமாநுஜனும், திருமலை நம்பியும்
6) கூரத்தாழ்வான் குமாரர் பட்டரும், ஸ்ரீராமப் பிள்ளையும்
7) முதலியாண்டான், அவர் குமாரர் கந்தாடையாண்டான்
8) நடுவிலாழ்வான்
9) கோமடத்தாழ்வான்
10) திருக்கோவிலூர் ஆழ்வான்
11) திருமோகூராழ்வான்
12) பிள்ளைப் பிள்ளையாழ்வான்




13) நடாதூராழ்வான்
14) எங்களாழ்வான்
15) அனந்தாழ்வான்
16) மிளகாழ்வான்
17) நெய்யுண்டாழ்வான்
18) கேட்டலூர் சிறியாழ்வான்
19) வேதாந்தியாழ்வான்
20) கோயிலாழ்வான்
21) உக்கலாழ்வான்
22) அரணபுரத்தாழ்வான்
23) எம்பார்
24) கிடாம்பியாச்சான்
25) கணியனூர் சிறியாச்சான்
26) ஈச்சம்பாடியாச்சான்
27) கொங்கிலாச்சான்

28) ஈச்சம்பாடி சீயர்
29) திருமலை நல்லான்
30) சட்டம் பள்ளி சீயர்
31) திருவெள்ளறை சீயர்
32) ஆட்கொண்ட வில்லிசீயர்
33) திருநகரிப் பிள்ளான்
34) காராஞ்சி சோமயாஜியார்
35) அலங்கார வேங்கடவர்
36) நம்பி கருத்தேவர்
37) செருப்பள்ளி தேவராசப் பட்டர்
38) பிள்ளையுறந்தையுடையார்
39) திருக்குருகைப்பிரான் பிள்ளான்
40) பெரிய கோயில் வள்ளலார்
41) திருக்கண்ணபுரத்து எச்சான்
42) ஆசூரிப் பெருமாள்
43) முனிப் பெருமாள்
44) அம்மங்கிப் பெருமாள்
45) மாருதிப் பெரியாண்டான்
46) மற்றொன்றில்லா மாருதிச் சிறியாண்டான்
47) கோமாசியாண்டான்
48) சீயராண்டான்
49) ஈச்வராண்டான்
50) ஈயுண்ணிப் பிள்ளையுண்டான்
51) பெரியாண்டான்
52) சிறியாண்டான்
53) குறிஞ்சியூர்ச் சிறியாண்டான்
54) அம்மங்கியாண்டான்
55) ஆளவந்தாராண்டான்
56) அருளாளப் பெருமாள் எம்பெருமானார்
57) தொண்டனூர் நம்பி

58) மருதூர் நம்பி

59) மழுவூர் நம்பி

60) திருக்குறுங்குடி நம்பி

61) குரவை நம்பி

62) முடும்பை நம்பி

63) வடுக நம்பி

64) வங்கிபுரத்து நம்பி

65) ஸ்ரீபராங்குச நம்பி

66) அம்மங்கியம்மாள்

67) பருத்திக் கொல்லையம்மாள்

68) உக்கலம்மாள்

69) சொட்டையம்மாள்

70) முடும்பையம்மாள்

71) குமாண்டூர் பிள்ளை

72) குமாண்டூர் இளையவல்லி

73) கிடாம்பி பெருமாள்

74) ஆர்க்காட்டுப் பிள்ளை

## 34. எம்பெருமானாரின் பிரதான சிஷ்யர்கள்

*இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம், மாலிருஞ் சோலையென்னும்*
*பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர், அவை தன்னொடும்*
*வந்(து)*
*இருப்பிடம் மாய னிராமாநுசன் மனத் தின்றவன் வந்(து)*
*இருப்பிடம், என்றனிதயத்துள்ளே தனக் கின்புறவே.*
*(இராமானுசனின் இருப்பிடம் என் இதயம்.)*

### உடையவர் திருவடிகளில் நித்ய கைங்கர்யம் பண்ணும் முதலிகள்

ஸ்ரீரங்கத்தில் வாழும் யதிராஜருக்கு உலகெங்கிலும் பல சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்களில் எழுபத்துநாலு ஸிம்ஹாஸனாதிபதிகள் முக்கியமானவர்களாவர். அவர்களில் மிகவும் இனியவர்களான சிஷ்யர்கள் பலர் உண்டு.

1) கூரத்தாழ்வான், நடாதூராழ்வான் போன்றோர் ஸ்ரீ பாஷ்யத்திற்கு உசாத்துணையாயிருப்பார்.

2) அருளாளப்பெருமாளெம்பெருமானார் திருவாராதனம் செய்தருளுவர்.

3) கிடாம்பிப் பெருமாளும் கிடாம்பியாச்சானும் திரு மடைப்பள்ளி கைங்கர்யம்.

4) வடுக நம்பி எண்ணெய் காப்பு சாத்தியருளுவார்.

5) முதலியாண்டானுக்கு கைங்கர்யம் திருமண் காப்புக்கும், திருவாராதனத்துக்குப் பரிசாரகமும் திருவடி நிலைகள் ஸமர்ப்பிக்கவும்.

6) எம்பாருக்குக் கைங்கர்யம் திருமேனி திருவடிகளைப் பிடிக்கவும், திருப்பரியட்டங்கள் திருத்தவும், திருக்கை ஸமர்ப்பிக்கவும், திருப்படுக்கை சோதிக்கவும் திருமேனிக் காவலும்.

7) கோமடத்து சிறியாழ்வான் கலசப்பானையையும் ஸ்ரீபாதரக்ஷையையும் எடுப்பர்.

8) பிள்ளை உறங்காவில்லி தாஸர் கருவூலம் கவனிப்பர்.

9) அம்மங்கி பாலமது காய்ச்சுவர்.

10) உக்கலாழ்வான் ப்ரஸாத கலமெடுப்பர்.

11) உக்கலம்மாள் திருவாலவட்டம் பரிமாறுபவர்

12) மாருதிப் பெரியாண்டான் திருக்கைச் செம்பு பிடிப்பர்

13) மாறொன்றில்லா மாருதி சிறியாண்டான் மடத்திற்கு அமுதுபடி நடத்திப் போருவர்.

14) தூய முனிவேழம் திருமஞ்சனமெடுப்பர்.

15) திருவரங்க மாளிகையார் ஸ்ரீபண்டாரம் நோக்குவர்

16) வண்டரும், சுண்டரும் கைக்காயிரம் பொன்னுக்கு ராஜ ஸேவை பண்ணி மடத்திற்குத் திருக்கை வழக்காக்கி அருளுவர்.

17) இராமாநுசவேளைக்காரர் திருமேனி காவலாய்ப் போருவர்.

18) அகளங்க நாட்டாழ்வான் எதிரிகள் நிரஸிப்பதில் ஈடுபடுவார்.

**தண்ட பவித்ரங்கள்**

முதலியாண்டான், கூரத்தாழ்வான்.

**பஞ்சரத்னங்கள்**

கந்தாடையாண்டான், எம்பார், வங்கிபுரத்து நம்பி, வடுகநம்பி அருளாளப் பெருமாளெம்பெருமானார் ஜீயர்.

**நவரத்னங்கள்**

திருவரங்கத்தமுதனார், திருக்குருகைபிரான், பிள்ளான், புண்டரிகாக்ஷர், தெற்காழ்வார், சுந்தரத் தோளுடையான், திருமலை நல்லான், ஆள்கொண்ட வில்லி, ஜீயர், பிள்ளையுறங்காவில்லி தாஸர்.

**பெண் நவரத்னங்கள்**

அத்துழாயம்மாள், தேவகி பிராட்டியார், திருநறையூரம்மை, பொன்னாச்சியார், திருக்கோட்டியூராண்டான், கூரத்தாண்டான், அம்மங்கியம்மாள், பருத்திக் கொல்லையம்மாள், கொங்கில் பிராட்டியார்.

**35. திருவாய்மொழியை வளர்த்த இதத்தாய் இராமாநுசன்**

*வான்திகழும் சோலை மதிளரங்கர் வண்புகழ்மேல்*
*ஆன்றதமிழ் மறைகளாயிரமும் - ஈன்ற*
*முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த*

நம் பூர்வாசார்ய பரம்பரை மூலமாகத் திருவாய்மொழியையும், மற்ற மூவாயிரம் பாசுரங்களையும் ஸ்வாமி எம்பெருமானார் பெற்றார். அதன் செழும் பொருளை எல்லோரும் அறியும் வண்ணம் வ்யாக்னங்களை (உரைகளை) ஏற்படுத்த வேண்டும் என்று உறுதி பூண்டார். வடமொழி ப்ரஹ்ம சூத்திரத்திற்குத் தானே பாஷ்யம் இட்டும், த்ராவிட வேதங்களான நாலாயிரம் பாசுரங்களுக்கு தம் சீடர்கள் மூலமாக

உரைகள் ஏற்படுத்தியும் வேதங்களுக்கு தொண்டு புரிந்தார். அப்படி பிறந்தவையே இராமானுசர் அருளால் அவர் காலத்திலும், அவர் காலத்திற்கு பின்பும் திருவாய்மொழிக்கு ஐந்து உரைகள்.

## ஆறாயிரப்படி

இராமானுசர் தமது அபிமான புத்ரரான திருக்குருகை பிரான் பிள்ளானை திருவாய்மொழிக்கு உரை எழுதப் பணித்தார். அவரும் திருவாய்மொழிக்கு **ஸ்ரீ விஷ்ணு புராணக் கணக்கின்படி** ''ஆறாயிரப்படி'' என்னும் சுருக்கமான ஓர் உரையை ஏற்படுத்தினார். (ஒரு படி என்பது 32 எழுத்துக்கள்).

## ஒன்பதினாயிரப்படி

கூரத்தாழ்வானின் திருக்குமாரரான ஸ்ரீ பராசரபட்டர், மாதவாசார்யர் என்னும் வேதாந்தியை திருத்தி, 'நஞ்சியர்' என்று பெயரிட்டு அவரைக் கொண்டே திருவாய்மொழிக்கு ஓர் உரையினை **ஸ்ரீ பாஷ்ய கணக்கின்படி** ''ஒன்பதினாயிரப்படி'' யாக அமைக்க நியமிக்க, அதைப் படைத்த நஞ்சியர் தமது சிஷ்யரான நம்பூர் வரதராஜர் என்பவரிடம் அவ்வுரையை அளித்து ஓலைச்சுவடியில் அழகாக எழுதப் பணித்தார். வரதராஜர் ஆற்றைக் கடந்து தம்மூருக்கு செல்லும் போது, அவ்வுரை ஆற்று வெள்ளத்தில் அடித்து செல்ல, உரையைத் தம் நினைவிலிருந்து எழுதத் தொடங்கி, நஞ்சியர் அருளால் எழுதி முடித்து, நஞ்சியரிடத்தில் கொண்டு வந்து ஸமர்ப்பித்தார். அதைக் கண்ட நஞ்சியர் பேருவகை அடைந்து வரதராஜருக்கு ''நம் பிள்ளை'' என்றும் ''திருக்கலிகன்றி தாஸர்'' என்றும் பெயரிட்டு கொண்டாடினார்.

## இருபத்து நாலாயிரப்படி

ஸ்ரீ கண்ணன் பிறந்த ஆவணி ரோகிணி நக்ஷத்திரத்திலேயே கிருஷ்ணன் என்ற பெயருடைய பெரியவாச்சான் பிள்ளை என்பவர் அவதரித்து நம்பிள்ளைக்கு சிஷ்யராகி திவ்ய ப்ரபந்த பாசுரங்களின் அர்த்தங்களை கற்று, **ஸ்ரீ ராமாயண ஸ்லோகங்கள் கணக்கின்படி** திருவாய்மொழிக்கு ''இருபத்து நாலாயிரப்படி'' உரையை எழுதினார்.

**ஈடு முப்பத்தாராயிரப்படி**

*'லோகாசார்யர்' என்று புகழ்பெற்ற நம்பிள்ளை நஞ்சியரிடம் நூறுமுறை திருவாய்மொழி காலக்ஷேபம் கேட்டு அர்த்தங்களை நெஞ்சில் தேக்கிக் கொண்டார். ஸ்ரீரங்கத்தில் அவற்றை தம் சீடர்களுக்கு உபந்யஸித்து வந்தார். நம்பிள்ளையின் உபந்யாஸத்தை வடக்கு திருவீதிப்பிள்ளை என்னும் சீடர் எழுத்து மாறாமல் ஓலைச்சுவடியில் எழுதிக் கொண்டு வந்து நம்பிள்ளையிடம் காட்டினார். அது ஸ்ரீ பாஷ்ய வ்யாக்யானமான ''ச்ருத ப்ரகாசிகா'' கணக்கின்படி முப்பத்தாராயிரப்படியாக அமைந்திருந்தது. ஈடு இணையற்ற இந்த வ்யாக்யானமே ''ஈடு முப்பத்தாறாயிரப்படி'' என்று போற்றப்பட்டு, ஈட்டுப்பெருக்கர் எனப்படும் ஆசார்ய ஸார்வ பௌமரான மணவாள மாமுனிகளால் உலகெங்கும் பரவச் செய்யப் பட்டது.*

**பன்னீராயிரப்படி**

*திருவாய்மொழிக்கு நான்கு உரைகள் அமைந்திருந்தாலும், பாசுர சொற்களுக்கு நேரே பொருள் கூறும் ''பதவுரை'' இல்லாத குறையை தீர்த்தவர் **வாதிகேஸரி அழகிய மணவாள சீயர்** ஆவார். பெரிய வாச்சான் பிள்ளையின் சீடரான அவர், அவருடைய அனுக்ரஹத்தால் திருவாய்மொழிக்கு 'பன்னீராயிரப்படி' என்னும் உரையை அருளினார்.*

*இப்படி நம்மாழ்வாரை ஈன்ற தாயாகக் கொண்ட திருவாய்மொழி, இராமானுசரை வளர்த்த தாயாகப் பெற்று, ஐந்து மிகச் சிறந்த வ்யாக்யானங்கள் இடப்பட்டு உலகத்தில் அடியார்கள் நெஞ்சில் நிலைத்து நிற்கிறது.*

**36. ஸ்ரீ ராமானுஜ அஷ்டோத்தர சத நாமாவளி**

*பூமன்னு மாது பொருந்திய மார்பன், புகழ்மலிந்த*
*பாமன்னு மாறன் அடிபணிந் துய்ந்தவன், பல்கலையோர்*
*தாம்மன்ன வந்த விராமா னுசன்சர ணாரவிந்தம்*
*நாம்மன்னி வாழ, நெஞ்சே! சொல்லு வோமவன் நாமங்களே*

*ஓம் ஸ்ரீ ராமாநுஜாய நம:*
*ஓம் புஷ்கராக்ஷாய நம:*

ஓம் யதீந்த்ராய நம:
ஓம் கருணாகராய நம:
ஓம் காந்திமத்யாத்மஜாய நம:
ஓம் ஸ்ரீமதே நம:
ஓம் லீலாமாநுஷ விக்ரஹாய நம:
ஓம் ஸர்வஶாஸ்த்ரார்த்த தத்வஜ்ஞாய நம:
ஓம் ஸர்வஜ்ஞாய நம:
ஓம் ஸஜ்ஜநப்ரியாய நம: 10
ஓம் நாராயண க்ருபாபாத்ராய நம:
ஓம் ஸ்ரீ பூதபுர நாயகாய நம:
ஓம் அநகாய நம:
ஓம் பக்தமந்தாராய நம:
ஓம் கேஶவாநந்த வர்தநாய நம:
ஓம் காஞ்சீபூர்ண ப்ரியஸகாய நம:
ஓம் ப்ரணதார்த்திவிநாஶநாய நம:
ஓம் புண்யஸங்கீர்த்தநாய நம:
ஓம் புண்யாய நம:
ஓம் ப்ரஹ்மராக்ஷஸ மோசகாய நம: 20
ஓம் யாதவாபாதிதாபார்த்த வ்ருக்ஷச்சேதகுடாரகாய நம:
ஓம் அமோகாய நம:
ஓம் லக்ஷ்மணமுநயே நம:
ஓம் ஶாரதா ஶோகநாஶகாய நம:
ஓம் நிரந்தர ஜநாஜ்ஞாத நிர் மோசந விசக்ஷணாய நம:
ஓம் வேதாந்தத்வய ஸாரஜ் ஞாய நம:
ஓம் வரதாம்பு ப்ரதாயகாய நம:
ஓம் பராபிப்ராய தத்வஜ்ஞாய நம:
ஓம் யாமுநாங்குளிமோசகாய நம: 30
ஓம் தேவராஜக்ருபாலப்தஷட் வாக்யார்த்த மஹோதயே நம:
ஓம் பூர்ணார்யலப்தஸந்மந்த்ராய நம:
ஓம் ஸௌரிபாதாப்ஜஷட்பதாய நம:
ஓம் த்ரிதண்ட தாரிணே நம:

ஓம் ப்ரஹ்மஞ்ஞாய நம:
ஓம் ப்ரஹ்மஜ்ஞாநபராயணாய நம:
ஓம் ரங்கேஶ கைங்கர்ய ரதாய நம:
ஓம் விபூதித்வயநாயகாய நம:
ஓம் கோஷ்டீபூர்ணக்ருபாலப்த மந்த்ரராஜ
ப்ராகாஶகாய நம: 40
ஓம் வரரங்காநுகம்பாத்த த்ராவிடாம்நாய பாரகாய நம:
ஓம் மாலாதரார்ய ஸுஜ்ஞாத த்ராவிடாம்நாய தத்வதியே நம:
ஓம் சதுஸ்ஸப்ததிஶிஷ்யாட் யாய நம:
ஓம் பஞ்சாசார்ய பதாஶ்ர யாய நம:
ஓம் ப்ரபீ தவிஷதீர்த்தாம்ப ப்ரகடீக்ருதவைபவாய நம:
ஓம் ப்ரணதார்திஹராசார்ய தத்த பிக்ஷைகபோஜ நாய நம:
ஓம் பவித்ரீக்ருத கூரேஸாய நம:
ஓம் பாகிநேயத்ரிதண்ட காய நம:
ஓம் கூரேஶ தாஶரத்யாதி சரமார்த்தப்ரதாயகாய நம:
ஓம் ரங்கேஶ வேங்கடேஶாதி ப்ரகடீக்ருதவைபவாய நம: 50
ஓம் தேவராஜார்சநரதாய நம:
ஓம் முகமுக்திப்ரதாயகாய நம:
ஓம் யஜ்ஞமூர்த்திப்ரதிஷ்டாத்ரே நம:
ஓம் மந்நாதாய நம:
ஓம் தரணீதராய நம:
ஓம் வரதாசார்ய ஸத்பக்தாய நம:
ஓம் யஜ்ஞேஶார்திவிநாஶ காய நம:
ஓம் அநந்தாபீஷ்டபலதாய நம:
ஓம் விடலேந்த்ர ப்ரபூஜிதாய நம:
ஓம் ஸ்ரீ ஶைலபூர்ண கருணாலப்த ராமாயணார்தாய நம: 60
ஓம் ப்ரபத்திதர்மைக நிரதாய நம:
ஓம் கோவிந்தார்ய ப்ரியாநுஜாய நம:
ஓம் வ்யாஸஸூத்ரார்த்த தத்வ ஜ்ஞாய நம:
ஓம் போதாயந மதாநுகாய நம:
ஓம் ஸ்ரீ பாஷ்யாதி மஹாக்ரந்த காரகாய நம:

ஓம் ஸ்ரீ கலிநாஶநாய நம:
ஓம் அத்வைதமத விச்சேத்ரே நம:
ஓம் விஶிஷ்டாத்வைதபாரகாய நம:
ஓம் குரங்க நகரீபூர்ண மந்த்ர ரத்நோபதேஶகாய நம:
ஓம் விநாஶிதாகிலமதாய நம: 70
ஓம் ஶேஷீக்ருத ரமாபதயே நம:
ஓம் புத்ரீக்ருதஶடாராதயே நம:
ஓம் சடஜித்ருணமோசகாய நம:
ஓம் பாஷாதத்த ஹயக்ரீவாய நம:
ஓம் பாஷ்யகாராய நம:
ஓம் மஹாயஶஸே நம:
ஓம் பவித்ரீக்ருதபூபாகாய நம:
ஓம் கூர்மநாதப்ரகாஸகாய நம:
ஓம் ஸ்ரீவேங்கடாசலாதீஶ ஶங்க சக்ர ப்ரதாயகாய நம:
ஓம் ஸ்ரீவேங்கடேஶ ஶ்வஶுராய நம: 80
ஓம் ஸ்ரீராமஸக தேஶிகாய நம:
ஓம் க்ருபாமாத்ரப்ரஸந்நார்யாய நம:
ஓம் கோபிகாமோக்ஷதாயகாய நம:
ஓம் ஸமீசீநார்யஸச்சிஷ்ய ஸத் க்ருதாய நம:
ஓம் வைஷ்ணவப்ரியாய நம:
ஓம் க்ரிமிகண்ட ந்ருபத்வம் ஹிநே நம:
ஓம் ஸர்வமந்த்ர மஹோததயே நம:
ஓம் அங்கீக்ருதாந்த்ர பூர்ணார்யாய நம:
ஓம் ஸாலக்ராம ப்ரதிஷ்டிதாய நம:
ஓம் ஸ்ரீ பக்தக்ராம பூர்ணேஶாய நம: 90
ஓம் விஷ்ணுவர்த்தந ரக்ஷகாய நம:
ஓம் பௌத்த த்வாந்த ஸஹஸ்ராம்ஶவே நம:
ஓம் ஶேஷரூப ப்ரதர்ஶகாய நம:
ஓம் நகரீக்ருத வேதாத்ரயே நம:
ஓம் டில்லீஶ்வரஸமர்சிதாய நம:
ஓம் நாராயண ப்ரதிஷ்டாத்ரே நம:

ஓம் ஸம்பத்புத்ரவிமோசகாய நம:
ஓம் ஸநத்குமார ஜநகாய நம:
ஓம் ஸாதுலோக ஶிகாமணயே நம:
ஓம் ஸுப்ரதிஷ்டித கோவிந்த ராஜாய நம: 100
ஓம் பூர்ணமநோரதாய நம:
ஓம் கோதாக்ரஜாய நம:
ஓம் திக்விஜேத்ரே நம:
ஓம் கோதாபீஷ்ட ப்ரபூரகாய நம:
ஓம் ஸர்வஸம்ஶயவிச்சேத்ரே நம:
ஓம் விஷ்ணுலோக ப்ரதாயகாய நம:
ஓம் அவ்யாஹதமஹத்வர்த்மநே நம:
ஓம் யதிராஜாய ஜகத்குரவே நம: 108

***ஸ்ரீ ராமாநுஜாஷ்டோத்தர ஸதநாமாவளி: ஸமாப்தா:***

## 37. ஸ்ரீ இராமானுஜர் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புகள்

***ஆதாரம் :*** *இராமானுஜர், (சரித்திர ஆராய்ச்சி மகிமை)*

***ஆசிரியர் :*** *ஸ்ரீமான். S. கல்யாணராம ஐயங்கார்*

***பதிப்பு :*** *1978*

*(ஆசிரியர் ஸ்ரீமான் S. கல்யாணராம ஐயங்கார் ஸ்வாமிகளுக்கு நெஞ்சார்ந்த நன்றி)*

***அவதாரம் :*** *கி.பி. 04.04.1017*

*கலியுகம் 4119 சாலிவாகன, சக 939, பிங்கள ஆண்டு, சித்திரை மாதம், 13-ஆம் நாள், வியாழக்கிழமை, வளர்பிறை, பஞ்சமி திதி, திருவாதிரை நட்சத்திரம், கடக லக்கனம், ஸ்ரீபெரும்பூதூரில் அவதாரம்.*

***தந்தையார் :*** *ஆசூரி கேசவ சோமயாஜி பட்டாசார்.*

***தாயார் :*** *காந்திமதியம்மை (பூமிப்பிராட்டி)*

திருப்பெயர் : ஸ்ரீ இராமாநுஜர்

கோத்ரம் : ஹரித, ஹாரித கோத்ரம், வடமாள், யஜுர் வேதம். ஆஸ்வலாயன ருத்ரம்.

சௌளம் : பின் பக்கத்தில் குடுமி, கழுத்தினில் காறை, மின்னித் துலங்கும் அரசிலை, பீதகச் சிற்றாடை, பொன்னறைஞாண், மாணிக்கக் கிண்கிணி அலங்காரங்களுடன் வைபவம். ஆண்டு : 1022.

உபநயனம் : கி.பி. 1025 - 26.

தந்தையாரிடம் கல்வி : 15 வயது வரை.

திருமணம் : கி.பி. 1033.

துணைவியார் : தஞ்சமாம்பாள் (ரக்ஷகாம்பாள்)

தந்தையார் மறைவு : கி.பி. 1033

காஞ்சிபுரத்துக்குக் குடிவருதல் : கி.பி. 1034 - 1035

காசியாத்திரை : கி.பி. 1035

ஆளவந்தார் காலம் : கி.பி. 10-ஆம் நூற்றாண்டு

ஆளவந்தாருடன் சந்திப்பு : கி.பி. 1041. வயது 24

திருக்கச்சிநம்பிகள் அவதாரம் : கி.பி. 1010

துறவறம் மேற்கொள்ளல் : கி.பி. 1047. வயது 30

ஸ்ரீரங்கம் அடைதல் : வயது 31 - 32

திருக்கோட்டியூர் நம்பிகள் திருவடி சம்பந்தம் : கி.பி. 1049 (ஏறக்குறைய)

ஸ்ரீரங்கம் நிர்வாகம் மேற்கொள்ளல் : கி.பி. 1050. வயது 33

திருமலை திருப்பதியில் அனந்தாழ்வான் மலர்த் தோட்ட வைபவம் : கி.பி. 1051. வயது 34

ஸ்ரீபாஷ்யம் அருளல் : கி.பி. 1051 - 1055. வயது 34 - 38.

திருமலை திருப்பதியில் ஸ்ரீ வேங்கடாசலபதியின் திருக்கரங்களில் மறுபடியும் சங்கு சக்கரங்கள் வந்தடைந்த வைபவம் : கி.பி. 1057. வயது 40

திருமலையிலும், திருப்பதியிலும் ஏற்பாடுகள் செய்தல் : கி.பி. 1057

ஸ்ரீரங்கம் நிர்வாகம், திருப்பணிகள், சீர்திருத்தங்கள் : கி.பி. 1058 முதல் 1090 வரை. வயது 41 முதல் 72 வரை.

திக்விஜயம் : கி.பி. 1089 முதல் 1095 வரை. வயது 72 முதல் 79 வரை.

திருமாலிருஞ்சோலை மலை ஸ்ரீ கள்ளழகர் திருக்கோவிலில் மடம் நிறுவுதல் : கி.பி. 1091. வயது 74

திருக்குறுங்குடியில் ஸ்ரீ ராமாநுஜர் மடம் நிறுவுதல் : கி.பி. 1093. வயது 76

ஸ்ரீகூர்ம க்ஷேத்திரம் ஸ்ரீ கூர்மநாதப் பெருமாள் தரிசனம் : கி.பி. 1094 - 1095

திருநாராயணபுரம் (மேலக்கோட்டை) தரிசனம் : கி.பி. 1097 - 1098

ஜைனர்கள் வைணவரானது : கி.பி. 1101

டில்லி சுல்தான் சக்ரவர்த்தியின் திருமகளாரிடமிருந்த சம்பத்குமார செல்லப் பெருமாள் விக்கிரகத்தை இராமாநுஜர் பெற்றுக் கொண்டு வந்தது : 1099 - 1101. வயது 83 - 84

திருநாராயணபுரம் வாழ்க்கைத் தொடர்பு : கி.பி. 1097 - கி.பி. 1110 (12 ஆண்டுகள்).

ஸ்ரீரங்கம் கோவில் நிலைமைபற்றி வைணவர் ஒருவர் ஸ்ரீரங்கத்திலிருந்து வந்து உடையவரிடம் கூறுதல் : கி.பி. 1111 - 1112. வயது 93 - 94

பேசும் "யதிராஜர் விக்ரஹம்" தமருகந்தமேனி திருநாராயணபுரம் : கி.பி. 1111 - 1112

தாமுகந்த திருமேனி : ஸ்ரீபெரும்புதூர் - 1137

தானான திருமேனி : திருவரங்கம் - 1138

ஸ்ரீ இராமாநுஜர் பரமபதம் அடைதல் : கி.பி. 22.01.1138.

### 38. ஸ்ரீ இராமானுஜர் ஜாதகக் குறிப்பு

கலியுகம் 4119, சாலிவாகன சக 939, பிங்கள ஆண்டு, சித்திரை மாதம், வளர்பிறை, பஞ்சமி திதி, திருவாதிரை நட்சத்திரம், கடக லக்னம் ஸ்ரீபெரும்புதூரில் ஜனனம்.

*(04.04.1017)*

| | | | |
|---|---|---|---|
| கேது<br>குரு<br>புதன் | ரவி<br>செவ் | சுக்கிரன் | சந்திரன் |
| - | திருவாதிரை<br>முதல்<br>பாதம்<br>இராசி | | லக்னம் |
| சனி | | | - |
| - | - | - | ராகு |

ஜனன காலம் இராகு தசை இருப்பு

*சீராரும் எதிராசன் திருவடிகள் வாழி*
*திருவரையில் சார்த்திய செந்துவராடை வாழி*
*ஏராரும் செய்ய வடிவெப்பொழுதும் வாழி*

*சோராத துய்யசெய்ய முகச்சோதி வாழி*
*தூமுறுவல் வாழி துணை மலர்க் கண்கள் வாழி*
*ஈராறு திருநாமம் அணிந்த எழில் வாழி*
*இனிது இருப்போடு எழில் ஞானமுத்திரை வாழியே!*

- ஸ்ரீ மணவாள மாமுனிகள்

*ஸ்ரீமத் மஹாபூதபுரே ஸ்ரீமத் கேசவ யஜ்வந:*
*காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்களம்*
*நித்ய ஸ்ரீ நித்ய மங்களம்.*

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

